கழக வெளியீடு : ௬௫௬

# ஆழ்வார்கள் வரலாறு

## முதற் புத்தகம்

சென்னை, பச்சையப்பன் கல்லூரி
உயர்நிலைப்பள்ளித் தலைமைத் தமிழாசிரியராயிருந்த
**புலவர் கா. ர. கோவிந்தராச முதலியார்**
எழுதியது

திருநெல்வேலி, தென்னிந்திய
சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம் லிமிடெட்
திருநெல்வேலி சென்னை

# முகவுரை

மாந்தர்கள் நூற்களை ஓதியுணர்ந்து எய்துதற்கு உரிய உறுதிப் பொருள்கள் நான்கு. அவை அறம், பொருள், இன்பம், வீடு என்பன. தமிழில் அவற்றுள் வீட்டைப் பற்றிக் கூறும் நூற்களுள் ஆழ்வார்கள் அருளிய நாலாயிரத்தையும் திருஞானசம்பந்தர் முதலிய நாயன்மார்கள் அருளிய தேவார திருவாசகங்களையுமே முதன்மையானவை எனவும், தமிழ் வேதங்கள் எனவும் அறிஞர்கள் யாவரும் கொண்டிருக்கிறார்கள். சைவ சித்தாந்த நூற் பதிப்புக் கழகத்தார், நாலாயிரத்தை அருளிய ஆழ்வார்கள் பன்னிருவர்களுடைய வரலாறுகளையும் எழுதுவித்து வெளியிடக் கருதி, என்னை அழைத்து, 'ஆழ்வார்களுடைய வரலாறுகளை இரண்டு புத்தகங்களாக எழுதித் தரவேண்டும்' என்று கூறினர்.

யான் அவர்கள் கூறியதை மகிழ்வுடன் ஏற்றுக் கொண்டு, பின் பழகியபெருமாள்சீயர் அருளிய (1) ஆறாயிரப்படி குருபரம்பராப் பிரபாவம், (2) பன்னீராயிரப்படி குருபரம்பராப் பிரபாவம் (3) அரிசமய தீபம், (4) வடகலை குருபரம்பராப் பிரபாவம், (5) உபதேசரத்தினமாலை என்னும் நூற்களின் உதவியைக் கொண்டு, அவ்வாறே ஆழ்வார்களின் வரலாறுகளை இரண்டு பகுதிகளாக எழுதிக் கொடுத்தேன்.

மேற் கூறிய ஐந்து நூற்களுள், ஆறாயிரப்படி குருபரம்பராப் பிரபாவத்தை முதன்மையானதாகவும், மற்றை நான்கு நூற்களையும், அதற்குத் துணையாகவும் வைத்துக் கொண்டு எழுதினேன்; ஆதலின், என்னால் எழுதப்பட்ட

ஆழ்வார்கள் வரலாறுகளிற் பெரும்பாலன ஆறாயிரப்படி குருபரம்பரைப் பிரபாவத்தைப் பின்பற்றியனவாகவும், சிறுபாலன மற்றை நூற்களைப் பின்பற்றியனவாகவும் இருக்கும். பெரும்பான்மையும் வரலாறுகளை எழுதுவதில் மட்டுமே அந்நூற்களைப் பின்பற்றினேன்.

அடியில் வரும் செய்யுள், ஆழ்வார்கள் உலகில் அவதரித்த முறையைக் கூறுவதாகும்.

### நேரிசை வெண்பா

*பொய்கையார் பூதத்தார் பேயார் புகழ்மழிசை*
*அய்யன் அருண்மாறன் சேரலர்கோன் - துய்யபட்ட*
*நாதனன்பர் தாட்டூளி நற்பாணன் நற்கலியன்*
*ஈதிவர்தோற் றத்தடைவாம் இங்கு.*

"மாறன்" என்றதில் மதுரகவியார் வரலாறும், "பட்டநாதன்" என்றதில் கோதைநாய்ச்சியார் வரலாறும் அடங்குதலின், இதில் அவர்கள் வேறாகக் கூறப் பட்டிலர் என்க.

ஆழ்வார்களுடைய அவதார முறை இதுவே என வைணவப் பெரியார்கள் கூறுகின்றார்கள். ஆயினும், யான் ஆழ்வார்களுடைய வரலாறுகளை அம்முறையில் அமைத்திலேன். மேற்படி கழகத்தார் ஆழ்வார்கள் வரலாறுகளை இரண்டு புத்தகங்களாக எழுதச் சொன்னார்கள் ஆதலின், அதற்கு ஏற்றபடி ஆழ்வார்களுடைய வரலாறுகளை அமைத்து எழுதினேன். முதற் புத்தகத்தில் (1) பொய்கையார், (2) பூதத்தார், (3) பேயார், (4) திருமங்கை மன்னர், (5) குலசேகரர், (6) ஆண்டாள் என்னும் இவர்கள் வரலாறும்; இரண்டாம் புத்தகத்தில் (1) பெரியாழ்வார், (2) திருமழிசையார், (3) தொண்டரடிப் பொடியார், (4) திருப்பாணர், (5) நம்மாழ்வார்,

(6) மதுரகவியார் என்னும் இவர்கள் வரலாறுகளும் அமைத்து எழுதப்பட்டன.

இவற்றிற் காணப்படும் பிழைகளுக்காக என்னை மன்னிக்க என அறிஞர்களை வேண்டுகின்றேன்.

குற்ற மிக்கவர் கூறிய நூலாலோ
மற்று மிக்கவர் மாண்பொருள் மாண்புற
உற்று மிக்கதொ ரொண்டுணை யாவது
கற்று மிக்கவர் கண்டருண் மின்களே.

இத் தொண்டினை எனக்கு அளித்த சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தார்க்கு என் அன்போடு கூடிய நன்றியைச் செலுத்துகின்றேன்.

எனது இச்சிறு முயற்சி இடையூறின்றி இனிது முடியத் திருவருள் புரிந்த திருமகள் நாதன் திருவடித் தாமரைகளை வழுத்தி வாழ்த்துகின்றேன்.

இங்ஙனம்,
கா. ர. கோ.

---

## ஆசாரியர் வாழ்த்து

வலங்கொண்ட ஆழியன் அன்பிற் சிறந்தவர் மாண்குலமாம்
குலங்கொள்வ தன்றிப் பிறிதோர் குலமுளம் கொள்வதில்லான்
நிலங்கொண்ட சீர்யோகி மால்பார்த்த சாரதி நேர்ந்தெனக்கு
நலங்கொண்ட எட்டெழுத் தீந்தான் அடியிணை நாடுவனே.

## தமிழ் ஆசிரியர்கள் வாழ்த்து

பகர்தமிழ்நா வியலப்பன் பசுபதிமால் பலகலைதேர் வடிவேற் [செட்டி
நிகரில்புகழ்க் கவிராம சாமியென நிகழ்த்தறிஞ ரெமிங் நால்வர்
புகர்மனங்கொள் எனக்கினிய தமிழ்புகட்டு வித்தாரப் புலவோர் [தாட்பூத்
துகளறவென் மனத்தடத்தின் வாடாத மலராகித் துலங்க மாதோ.

# பொருளடக்கம்

ஸ்ரீ

# ஆழ்வார்கள் வரலாறு

(முதற் புத்தகம்)

## முதலாழ்வார்கள்

### தமிழகம்

தமிழர்களாகிய நாம் உறையும் நிலப்பகுதிக்குத் தமிழகம் என்பது பெயர். தமிழகம் பண்டைக்காலத்தில் சேரநாடு, சோழநாடு, பாண்டிய நாடு என்னும் மூன்று பகுதிகளை உடையதாயிருந்தது. அவற்றுள், சேரநாட்டு அரசர்களுக்குச் சேரர்கள் என்பதும், சோழநாட்டு அரசர்களுக்குச் சோழர்கள் என்பதும், பாண்டிய நாட்டு அரசர்களுக்குப் பாண்டியர்கள் என்பதும் பொதுப்பெயர் களாக வழங்கி வருகின்றன. சேர நாட்டிற்கு வஞ்சைக்களம் என்பது தலைநகரமாகும். சோழ நாட்டிற்கு ஒருகால் காவிரிப்பூம் பட்டினமும் ஒருகால் உறையூரும் தலைநகரங் களாய் விளங்கின. பாண்டிய நாட்டிற்கு மதுரை தலைநகர மாகும்.

[1] சோழ அரசர்களுள் ஓர் அரசன் நாகப்பட்டினத் தைத் தலைநகராக் கொண்டான். அவன் மனைவியர்களுள் ஒருத்தி நாகர் குலத்து நங்கை. அவள் ஓர் அருமருந்

---

1. பத்துப்பாட்டுப், பெரும்பாணாற்றுப்படையில் 29 முதல் 37 வரையிலும் உள்ள அடிகளாலும், அவற்றிற்கு நச்சினார்க் கினியர் கூறிய உரையானும், விசேட உரையானும் இஃதறியப்படும். முதல் ஆழ்வார்கள், பொய்கையார், பூதத்தார், பேயார் என்னும் இம் மூவருமாவர். இவர்கள் ஒரே மாதத்தில் வெவ்வேறு நாளில் அவதரித்தவர்கள் ஆவர் அதனை ஆறாயிரப்படி குருபரம்பரா பிர பாவம் முதலிய நூற்களால் அறிதலாகும.

தன் மைந்தனை ஈன்றாள். அம்மைந்தனுக்குத் தொண்டைமான் இளந்திரையன் என்பது பெயர். அந்நாகப்பட்டினத்துச் சோழ வேந்தனுக்கு வேறு மனைவியிடத்துப் பிறந்த மைந்தர்களும் இருந்தார்கள். ஆதலின், அக்கோமான் தொண்டைமான் இளந்திரையனுக்குத் தன் நாட்டின் ஒரு பகுதியைக் கொடுத்து அதற்கு அவனை அரசனாக்கினான். தொண்டைமானால் ஆளப்பட்ட அப்பகுதி பிறகு தொண்டைநாடு எனத் தனிப்பகுதியாகக் கூறப்படுவதாயிற்று. பின்னர்த் தமிழகம் சேரநாடு, சோழநாடு, பாண்டியநாடு, தொண்டைநாடு என்னும் நான்கு பகுதிகளை உடையதாயிற்று.

தமிழகத்து அரசர்கள் போர்த்திறத்திலும் கல்வியறிவினும் சிறந்தவர்கள். அவர்கள் மக்களுக்குக் கல்வியறிவில்லாவிடின் நாடு, இருள் சூழ்ந்த காடு போன்றதாய் விடும் என்பதனை நன்குணர்ந்தவர்கள்; ஆதலின், தமிழ்ப் புலவர்களை நன்கு பேணித் தமிழ் மொழியைச் செம்மையுற வளர்த்துவந்தார்கள். புலவர்களும் நுண்ணிய பொருள் அமைந்த நூல்கள் பலவற்றை இயற்றி மக்களின் அறிவு பொலிந்தோங்கும்படி செய்து வந்தார்கள். அக்காலத்து ஆண்பாலாரும் பெண்பாலாரும் நன்கு கற்று நல்வழியில் தவறாமல் ஒழுகிவந்தார்கள். மக்கள் கல்வியறிவு பெற்றுச் செய்தொழில்களில் இடையறாத ஊக்கமும் உறுதியும் உடையவர்களாயிருந்தமையால், தமிழகம் செல்வமும் சீரும் பெற்று, இதுவே பொன்னுலகம் என்னும்படி பொலிந்து விளங்கியது.

> "புண்டரீ கத்தயன் படைத்த பூதலத்
> தண்டர்பொன் னாடிழிந் தனைய பொற்பதால்
> எண்டவர் இமையவர் இறைகொள் மாண்புடைத்
> தண்டகம் எனும் பெயர்த் தமிழி னாடரோ."
>
> —அரிசமய தீபம், ஆதியோகிச் சருக்கம், செ. 1.

**இதன் பொருள் :—**(யாவரும்) எண்ணுதற்குரிய தவசிகளும், தேவர்களும் தங்குதலை உடைய மாட்சிமையைக் கொண்ட தண்டகம் என்னும் பெயரை உடைய தமிழ் நாடு, தாமரை மலரில் வீற்றிருக்கும் பிரமனுற் படைக்கப்பட்ட பூமியில் தேவர்களின் பொன்னுடு இறங்கிவந்து இருந்தது போன்ற அழகை உடையது என்பது.

புண்டரீகம் - தாமரை மலர் (ஆகு பெயர்), அயன் - பிரமன், பூதலம் - பூமி, அண்டர் - தேவர்கள், பொன் நாடு - பொன் உலகு, (சொர்க்கலோகம்), இழிந்தது என்பது தொகுத்தலாய் இழிந்து என நின்றது, அனைய - போன்ற, பொற்பு - அழகு, தவர் - தவசிகள், இமையவர் - தேவர்கள், இறை - தங்குதல் (முதனிலைத் தொழிற் பெயர்), மாண்பு - மாட்சிமை, தமிழின் நாடு - (தமிழை உடைய நாடு) தமிழ்நாடு.

இங்ஙனம் சிறந்து விளங்கும் தமிழகத்தில், ஞானமும் கடவுள் அன்பும் நிரம்பிய பெரியோர்கள் பலர் தோன்றினார்கள். அவர்களுட் சிலர் திருமாலிடத்துச் செறிந்தமைந்த அன்புடையவர்கள். சிலர் சிவபிரானிடத்துச் சிறந்தோங்கிய அன்புடையவர்கள். அவர்களுள், திருமால்பால் சிறந்த அன்புகொண்ட பெரியார்களை வைணவப் பெரியார்கள் என்றும், சிவபிரானிடத்துச் சிறந்த அன்புகொண்ட பெரியார்களைச் சைவப் பெரியார்கள் என்றும் கூறுவர்.

வைணவப் பெரியார்களுள், முதன்மையானவர்கள் பன்னிருவர். அவர்கள் (1) பொய்கையார், (2) பூதத்தார், (3) பேயார், (4) திருமழிசையார், (5) குலசேகரப் பெருமாள், (6) விட்டுசித்தர், (7) கோதை நாய்ச்சியார், (8) தொண்டரடிப் பொடியார், (9) திருப்பாணர்,

(10) திருமங்கை மன்னர். (11) சடகோபர், (12) மதுரகவி யார் என்பவர்கள். இவர்கள் இறைவனிடத்தில் ஆழ்ந்த அன்புடையவர்களாய் இருந்தமையால், இவர்களுக்கு ஆழ்வார்கள் என்பது சிறப்புப்பெயராய் அமைந்து வழங்கிவருகின்றது. இவர்களுள், பொய்கையார், பூதத் தார், பேயார் என்னும் மூவரும் காலத்தால் மற்றவரின் முந்தியவர்கள். ஆகையால், இவர்களை முதலாழ்வார்கள் என்பர்; ஆதலின், இவர்கள் வரலாற்றை முதலில் நோக்குவாம்.

## தொண்டை நாடு

தமிழகத்தின் பகுதிகள் நான்கனுள் ஒன்றாகிய தொண்டை நாட்டில் கல்வி, கேள்வி, ஒழுக்கம், நுண் ணறிவு முதலியவற்றிற் சிறந்தவர்களாகிய பெரியோர்கள் பலர் தோன்றி விளங்கினர்கள். அதனால், ஔவையார், தொண்டைநாட்டைத் 'தெண்ணீர் வயற்றொண்டை, நன்னாடு சான்றோ ருடைத்து' என்று புகழ்ந்துரைத்தார். இந்நாடு, மேகம் நான்கு திக்குகளிலும் பரவி மழையைச் சொரிதலால், பூதேவியின் மார்பில் தரித்த மேலாடை யைப்போல வரும் பாலாறு பெருகிப் பாய்தலின், செந் நெற்பயிர்கள் ஓங்கி வளரும் வயல்களாற் சூழப்பெற்று விளங்கும். இதன்கண் உள்ள பொய்கைகள் அழகிய மாதர்கள் வந்து நீராடுகையில் உண்டாகும் ஒலியினால் உயிருடைய உடல்போலவும், அவர்கள் நீராடிச் சென்ற பின் உயிர் நீங்கிய உடல்போலவும் தோன்றும். இந் நாட்டு எல்லாப் பெண்களுக்கும் நிலைபெற்ற செல்வமும் கல்வி அறிவும் நிறைந்திலகுதலால், அவர்கள்பால் வருந்தி வந்தவர்க்கு ஈதலும் விருந்தினரை உபசரித்தலுமாகிய இச்செயல்கள் அன்றி வேறு செயல் நிகழ்தல் இல்லை. இந்நாட்டு மரங்கள் யாவரையும் வெயிலால் வருந்தாத

வகை நிழல் தந்து காத்து, மேகங்கள் தமக்குச் செய்யும் உதவியைக் கருதி அவற்றிற்குக் கொடுக்க மலர்களையும் பழங்களையும் தம்முடைய கிளைகளாகிய கைகளில் ஏந்தி நிற்கும் என்றால் இந்நாட்டு மக்களின் நற்குண நற்செயல்கள் சொல்லுதற்கு எளியனவாகுமோ? இத்தகைய நலங்கள் அமைந்த இந்நாட்டிற் பல நகரங்கள் இருக்கின்றன.

# க. பொய்கையார்

## திருக்கச்சி

### நேரிசை வெண்பா

கைதைசேர் பூம்பொழில்சூழ் கச்சிநகர் வந்துதித்த
பொய்கைப் பிரான்கவிஞர் போரேறு-வையத்
தடியவர்கள் வாழ[1] அருந்தமிழந் தாதி
படிவிளங்கச் செய்தான் பரிந்து.

அவற்றுள், ஒன்றாகிய காஞ்சிபுரம் இந்நாட்டின் தலைநகரமாகும். இது பரதகண்டம் என்று கூறப்படும் நம் இந்து தேசத்துப் பண்டைப் பெரியோர்களாற் சிறந்தவை என்று கொள்ளப்பட்ட ஏழு நகரங்களுள் ஒன்றாகும். அவ்வேழு நகரங்களாவன :—(1) அயோத்தி, (2) மதுரை, (3) மாயை, (4) காசி, (5) காஞ்சி, (6) அவந்திகை, (7) துவாரகை என்பன.

இங்ஙனங் கொள்ளப்பட்ட காஞ்சி நகரம் அக்காலத்திருந்த மற்றெல்லா நகரங்களையும்விடச் சிறந்த அமைப்பும் அழகும் உடையதாய் விளங்கியது. அதில்

1. 'அருந்தமிழ்நூற் றந்தாதி' என்றும் பாடம்; இப்பாடம் கொள்ளின், இப்பாட்டு வெண்பா ஆகாது; வெண்பாவின் சிதைவினால் ஆகிய வெண்டுறை யாம் என்க.

மிகப் பெரியனவாகிய அரச வீதிகளும், மற்றவர்கள் உறைதற்கிடனாகிய தெருக்களும், எண்ணிறந்த வகைகளை உடைய பொருள்களை விற்குங் கடைவீதிகளும், திருவிழாக்கள் நடக்கும் வீதிகளும் உண்டு. இருபுறங்களிலும் பெரிய பெரிய மாளிகைகளை உடைய அவ்வீதிகள் இரண்டு பக்கங்களிலும் வரிசைவரிசையாக அமைந்த பெரிய மலைகளுக்கிடையிற் செல்லும் ஆறுகளைப் போல் விளங்கும். அதில் யானைகள் பிளிறும் ஒலி, தேர்கள் செல்லும் ஓசை, குதிரைகளின் கனைப்பு, வீரர்களின் ஆரவாரம், பொருள்களை விற்பவர்கள் பேரோசை, அவற்றை வாங்குவார் கலிப்பு முதலிய பல ஒலிகள் கூடிக் கடலின் ஒலியை அடக்கித் தோன்றும். அந்த நகரில் எங்கும் குளிர்ந்த பொய்கைகளையும், உயர்ந்த மரங்களையும், பூங்கொடிகளையும் உடைய சோலைகள் பொலிந்து விளங்கும்; அச்சோலைகளில் மலர்களில் உள்ள தேனை உண்ணவரும், வண்டுகளின் இன்னோசையும், மரங்களுக்கு இடையிடை இருந்து கூவும் குயில்களின் இனிய குரலும், மற்ற பறவைகளின் இனிமையாகிய பாடல்களும் நிரம்பி இருத்தலால், அவை இசை வல்லவர்களின் வீடுகளைப்போல் விளங்கும்; மயில்கள் கண்டவர்கள் மகிழ்வடையும்படி ஆடுவதனால், நடனசாலை எனப் பொலியும். இவ்விதமாகிய வளங்கள் பலவும் அந்நகரிற் பொருந்தியிருந்தனால் ஒரு வடமொழிப் புலவர், 'காஞ்சி நகரம் மற்றெல்லா நகரங்களினுஞ் சிறந்தது' என்று கூறினர். ஒரு தமிழ்ப் புலவர் வையத்து எல்லாத் தேயங்களையும் வயல்கள் என்றும், தொண்டை நாட்டை அவ்வயல்களில் விளைந்த கரும்பு என்றும், அந்நாட்டின் நகரங்களை அக்கரும்பின் சாறு என்றும், காஞ்சி நகரத்தை அச்சாற்றைக் காய்ச்சிக்

கொண்ட கற்கண்டு என்றும் கூறினர். மற்றொரு தமிழ்ப்புலவர், 'காஞ்சி நகரமும் கடலும் ஒலியின் மிகுதியினாலும் பெருமையினாலும் ஒன்றுக்கொன்று ஒப்பாகக் கூடியனவே. ஆனால், கடலில் உள்ள பொருள்கள் யாவும் கச்சியில் உளவாம். கச்சியில் உள்ள பொருள்கள் யாவும் கடலில் உளவாகா ஆகலின், கச்சி கடலினுஞ் சிறந்ததாம்' என்றார்.

## பொய்கையார் அவதாரம்

இவ்வித மேன்மைவாய்ந்த காஞ்சி நகரிற் பல வைணவ தலங்களும் பல சிவதலங்களும் உண்டு. அந்த வைணவ தலங்களுள், திருவெஃகா என்னும் பதியும் ஒன்றாகும். அதன் அருகில், பிரமன் முதலிய தேவர்கள் நீராடுவதும், வீட்டின்பம் அளிக்க வல்லதும், அருட்குணங்களுக்கு உறையுளான திருமகள் நாதன் திருவருள் போலக் குளிர்ந்ததும், தன்னை அடைந்தவர்களின் பிறவித் துயரங்களைப் போக்குவதுமாகிய பொற்றாமரைப் பொய்கை ஒன்று இருக்கின்றது. அதன்கண் கருங்குவளை, தாமரை, அல்லி முதலிய மலர்கள் மலர்ந்திருக்கும். அம்மலர்களில் வண்டினங்கள் மொய்த்துக்கொண்டு இன்னிசைபாடும். அவ் வரிய பொய்கை, ஞான ஒழுக்கங்களை உடைய வைணவர்களின் திருவுள்ளம்போல மிகத் தெளிவுற்றுப் பொலிந்திலகும். அப்பொய்கையின் தாமரை மலர்களில் அன்னங்கள் நிரை நிரையாக அமைந்து விளங்கும். அப்பொய்கையில் உள்ள தாமரைகளுள் ஒன்றினின்று மணத்துடன் தோன்றும் துளவம் போல அன்போடு கூடிய ஞானச் சுடர்விளக்காகிய **பொய்கையார்** அவதரித்தார். அவர் எம்பெருமான் திருவருளால் இளமையிலேயே கற்க

வேண்டிய நூற்களை எல்லாம் ஐயம் திரிபுகள் இன்றி நன்றாய்க் கற்று, உலக வாழ்க்கையை முற்றும் வெறுத்துத், திருமகள் நாதன்பால் நீங்காத அன்புடையவராய் விளங்கினர். [1] அவர், "என் அன்பு, 'திருமாலை அணுகு' என்று சொல்லுகின்றது; என் நா 'அப்பெருமானுடைய ஆழி ஏந்திய தோளை ஏத்து' என்று சொல்லுகின்றது; என் கண்கள், 'பிறப்பு இறப்பு அற்ற அவ்விறைவனைக் காண்' என்று சொல்லுகின்றன; என் செவிகள் 'அம் முதல்வன்றன் புகழைக் கேள்', என்று சொல்லுகின்றன," என்பார். அக் கருமுகில் வண்ணனுடைய அரிய குணங்களையும் அருஞ்செயல்களையும் சொல்லி வாழ்த்துவார். அப்பரமன்றன் திருப்பெயர்களை அடிக்கடி கூறுவார். அப்போது அவர் கண்களினின்று நீர் தாரை தாரையாய்ப் பெருகும். அவர், ("தமது மனமாகிய வீட்டில் உள்ள அறியாமை ஆகிய இருளைப் போக்கி, ஞானச்சுடர் விளக்கை ஏற்றி, அப்பெருமானை அமைத்து, அவன் திருவடிகளை மருவிப் போற்றாதவர்களுக்கு வீட்டின்பம் எய்துதல் இல்லை" என்பார்.)

([1] உலகத்தீர், அரிய வினைகளும், அல்லலும், நோயும் பாவமும் ஆகியவை நீங்குதலை வேண்டுவீர்களாயின், [2]"தனக்குவமை இல்லாதான் ஆகிய அப்பெருமான் தாளைச் சேருங்கள்" என்பார். இவ்வாறு கண்டோர் யாவரும் வியந்து வணங்கிப்போற்றும் மெய்ஞ்ஞானச் செல்வராய் விளங்கினர் பொய்கையார்.)

இவர் ஐப்பசி மாதத்தில் திருவோண நாளில் திருமகள் நாதன் ஐம்படைகளில் ஒன்றாகிய பாஞ்ச

1. முதற்றிரு அந்தாதி, பாசுரம், 72.
2. திருக்குறள், கடவுள் வாழ்த்து, செ.

சந்நியம் என்னும் திருச்சங்கின் அமிசம் உடையவராய் அவதரித்தனர் என்பர் பெரியோர்.

## உ. பூதத்தார்

### திருக்கடன் மல்லை

### நேரிசை வெண்பா

*என்பிறவி தீர இறைஞ்சினேன் இன்னமுதா*
*அன்பே தகளி அளித்தவராம்—நன்புகழ்சேர்*
*சீதத்தார் முத்துக்கள் சேரும் கடன்மல்லைப்*
*பூதத்தார் பொன்னங் கழல்.*

தொண்டை நாட்டில் 'கடன் மல்லை' என்னும் மற்றொரு நகரம் உண்டு. அதனை 'மல்லாபுரம்' என்றும், 'மகாபலிபுரம்' என்றும் வழங்குவர். அது சென்னைக்குத் தெற்கில் சிறிது தூரத்தில் கடற்கரையில் இருக்கின்றது. அது, முன்னே துறைமுகப்பட்டினமாக விளங்கியது. அத்துறைமுகத்தின் கரையில் முன்னே சிறந்ததொரு கலங்கரைவிளக்கம் இருந்தது. அத்துறைமுகத்தைச் சார்ந்த கடலில் எப்பொழுதும் பல தேசத்து வணிகர்களின் கப்பல்கள் வந்து தங்கித், தாம் கொண்டுவந்த பொருள்களை இறக்கிவிட்டு, அங்குக் கிடைக்கும் பொருள்களை ஏற்றிக்கொண்டு செல்லும். [1]அங்கு வருகின்ற கப்பல்கள் கொண்டுவரும் பொருள்களுள் முக்கியமானவை முத்துக்களும், மற்றும் பலவகை மணிகளும், யானைகளுமாகும். அப்பட்டினத்தில் அக்காலத்துச் சிற்பிகளின் திறத்தினை அறிதற்குரிய பல சிலை யுருவங்கள் இருக்கின்றன. இக்காலத்திலும் பலர் அவற்றைக் காணுதற்கு அங்குச் செல்கின்றனர். திருமகள் நாதன் சில திருப்பதிகளில் நின்றிருப்பன்; சில

1. பெரிய திருமொழி, 2-ம் பத்து, 6-ம் திருமொழி, பா. 6.

திருப்பதிகளில் வீற்றிருப்பன்; சில திருப்பதிகளில் பள்ளி கொண்டிருப்பன். மாமகள் மார்பனாகிய அப்பெருமான் பள்ளிகொண்டிருக்கும் திருப்பதிகளுள் இதுவும் ஒன்று. ஆனால், அவ்விறைவன் மற்றைத் திருப்பதிகளில் பாம்பணையிற் பள்ளிகொண்டிருப்பன். இப்பதியில் தலத்தில் பள்ளி கொண்டிருக்கின்றனன். ஆகையால், இப்பதியினைக் 'கடன் மல்லைத் தலசயனம்' என்றுங் கூறுவர்.

## பூதத்தார் அவதாரம்

பூதத்தார் இத்தலத்தில் அழகிற் சிறந்து விளங்கும் ஒரு குருக்கத்தி மலரிலே அவதரித்தனர். அவரது மனம் இறைவன் திருவருளால் பயனற்ற வழியிற் செல்லாமல் பல நூற்பொருள்களை ஆய்ந்துணர்வதிலேயே சென்றது. அவரது அறிவு அராவிச் செப்பம் செய்யப்பட்ட வேல் போல் மிக்க கூர்மையானது. ஆகையால், அரிய நூற்களின் பொருள்களும் அவர் கைப்பொருளாயின. இவ்வாறு அறியவேண்டிய நூற்களை ஆய்ந்து உணர்ந்து சிறந்த அவர் மனம் திருமாலின் திருவடிகளையே நாடியது. இவ்வுலக வாழ்க்கையை அவர் மனம் சிறிதும் விரும்பவில்லை. அவர் தம் மனமாகிய கோயிலில் திருமகள் நாதன் என்னுந் தெய்வத்தை அமைத்து, அவ்விறைவனை ஞானநீர் கொண்டாட்டி, அப்பெருமான் திருவடிகளில் அன்பாகிய மலரை இட்டு, எந்நாளும் அவ்விறைவனை ஆராதிப்பார். அருந்தமிழ்ப் பாக்களால் "இருந்தமிழ் நன்மாலையைப்பாடி எம்பெருமான்றன் இணையடிக்கே சூட்டினேன். ஆதலால், யானே நலஞ்செய்தேன், ஏழ்பிறப்பும் யானே தவம் உடையேன்" என்று கூறுவார். "திருமாலைச் செங்கண் நெடியானை எங்கள் பெருமானைக் கைகூப்பி வணங்கப்பெற்றேன். ஆதலின், யான் இனி ஒரு குடைக்கீழ்

மண்ணுலகை ஆள்வதையும் வேண்டேன்; வானவர்க்கும் வானவனாய் விண்ணுலகை ஆள்வதையும் வேண்டேன்'' என்று சொல்லுவார். அம்முதல்வன்பாற் கொண்ட அன்பினால் ஆடி ஆடி, அகம் கரைந்து, இசை பாடிப்பாடிக், கண்களினின்று அருவியென நீர்பெருக நாடி நாடி அப்பெருமானுடைய திருநாமங்களைக் கூறுவர். அவரைக் கண்டவர்கள் 'இவர் நம்மைப் போன்ற மக்கட் பிறப்பினர் அல்லர்; தெய்வப்பிறப்பினர்.' என்று வணங்கித் துதிப்பார்கள். இப்படி யாவரும் போற்றத் தக்க அருந்தவச் செல்வராய் விளங்கினார் பூதத்தார்.

இவர் ஐப்பசி மாதத்தில் அவிட்டநாளில் இறைவன் ஐம்படைகளில் ஒன்றாகிய கௌமோதகி என்னும் கதையின் அமிசமாக அவதரித்தனர் என்பர் பெரியோர்.

## ௩. பேயார்

### திருமயிலை

#### நேரிசை வெண்பா

[1] சீரார் மாடத் திருக்கோவ லூரதனுட்
காரார் கருமுகிலைக் காணப்புக்—கோராத்
திருக்கண்டேன் என்றுரைத்த சீரான் கழலே
உரைக்கண்டாய் நெஞ்சே யுகந்து.

தொண்டைநாட்டில் திருமயிலை என்னும் தலம் ஒன்றுண்டு. அதுவும் தமிழகத்தில் சென்னையைச் சார்ந்து சிறந்து விளங்கும் சைவ வைணவ தலங்களுள் ஒன்று. கலையறிவிற் சிறந்த அறிஞர் பலர்க்கு இஃது இருப்பிடமாகும் 'பொய்யாமொழி' என்றும், 'பொதுமறை'

1. ஈண்டு 'உரை' என்னும் ஏவல்முன் வலிமிக்கது. நன். உ. பு. இ. 11-ம் சூத்திரத்தை நோக்குக.

என்றும் யாவராலும் போற்றப்படும் திருக்குறளை அருளிய திருவள்ளுவதேவர் அவதரித்த தலம் அதுவே என்பது பல தமிழ் அறிஞர்களின் கருத்து. இதிற் செல்வர்கள் பலர் வாழ்ந்துவந்தார்கள். ஆதலின், பெரிய பெரிய மேல் நிலைகளையுடைய பல மாளிகைகள் அக்காலத்தில் இருந்தன. இஃது ஒழுக்கத்திலும் அழகிலும் சிறந்த மாதர்களுக்கு உறைவிடமாகும். இதிற் குளிர்ந்த சோலைகள் பல எங்கும் விளங்கின. ஆதலின், திருமங்கை மன்னர் திருவல்லிக்கேணியைப் பாடிய திருமொழியில், [1]"ஒப்பரில்லா மாதர்கள் வாழும் மாடமா மயிலைத் திருவல்லிக்கேணி" என்றும், 'தேனமர் சோலை மாடமா மயிலைத் திருவல்லிக்கேணி' என்றும் திருவல்லிக்கேணியுடன் திருமயிலையைச் சேர்த்துப் புகழ்ந்து பாடினார். இது சென்னையில் உள்ள சிறந்த பதிகளில் ஒன்று. இதில் இப்பொழுதும் செல்வர்கள் பலர் பூம்பொழில்களோடு கூடிய மாளிகைகளை அமைத்துக்கொண்டு வாழ்கின்றார்கள்.

## பேயார் அவதாரம்

பேயார் இத்தலத்தில் உள்ள செல்வ கேசவப்பெருமாள் கோவிலில் இருக்கும் பல மலர்களும் பொலிந்து விளங்கும் ஒரு கிணற்றிலே தோன்றிய ஒரு செவ்வல்லிப் பூவிலே அவதரித்தார். மக்களுக்குக் கல்வியறிவே சிறந்த கண்ணாகும். கல்வியே மக்களுக்குச் சிறந்த அழகுமாகும். கல்விப்பொருள் என்றும் விட்டு நீங்காமலும் கெடாமலும் இருப்பதாகும். ஆதலின், அது விட்டு நீங்குவதும் கெடுவதுமாகிய செல்வப்பொருளினுஞ் சிறந்ததாம்.

---

1. பெரிய திருமொழி, 2-ம்பத்து, 3-ம் திருமொழி, பா. 2, 9.

இதனைக் கருதியே ஔவையார் [1]'கைப்பொருள் தன்னின் மெய்ப்பொருள் கல்வி' என்றார். கல்விப்பொருளைப் பெற்றவர்கள் தேவர்களை ஒப்பப் போற்றப்படுவார்கள். அதனை எண்ணியே விளம்பி நாகனார் என்னும் அரும்புலச் செல்வர் [2]'தேவரனையர் புலவர்' என்றார். இப்படிப் பல நலங்களையும் உண்டாக்குவது கல்வியே. கல்வியிற் சிலர்க்கு இளமையிலேயே மனம் பதிந்துவிடும். அவர்களைப் பெற்றோர்க்குப் பெறுதற்கரிய செல்வமாவர் என்பர் பெரியோர். பேயார் மனம் இளமையிலேயே கல்வியிற் சென்று பதிந்துவிட்டது. அவருக்கு எல்லா நூற்பொருள்களும் இனிது விளங்குவனவாயின. அவர் கற்க வேண்டிய எல்லா நூற்களையும் நன்கு கற்றுணர்ந்தார். அவர் மனம் காந்தத்தில் ஊசி சென்று பொருந்துவது போலத் திருமாலின் திருவடிகளிற் சென்று பொருந்தி, அவற்றிலேயே நிலைத்துவிட்டது. அதனால், அவர் வேறொன்றையும் நாடவில்லை. அவர், "நெஞ்சே, எந்நாளும் எம்பெருமான் திருவடிகளையே தொழுது தொடர்ந்திரு" என்பார். 'என்நா, செங்கண்மால் எங்கள்மால் என்று சொன்ன நாளே நாளாகும்' என்பார். "என் மனம் எப்போதும் எம்பெருமான் திருவடியிலேயே மாலாயிருக்கும்" என்பார். "என் மனமே, எப்பொழுதும் எம்பெருமான் திருநாமங்களைச் சொல்லி வணங்குவோம் வருக" என்பார். "என் கண்கள் எப்பொழுதும் எம்பெருமானைக் காணக்கடவன" என்பார். அப்பெருமானுடைய அருட்குணங்களை எண்ணி எண்ணி உள்ளம் உருகிக் கண்ணீர் பெருக்குவார். அருந்தமிழ்ப் பாக்களால் அப்பரமன் புகழ்களைப் பாடி, அதனாற் களிப்பு மிக்கவராய், ஆடி ஓடித்

1. கொன்றை வேந்தன் செ. 22.
2. நான்மணிக்கடிகை செ. 88.

திரிவார். இவ்வாறு இவர் ஒப்பவரும் மிக்கவரும் இல்லாத இறைவனாகிய திருமாலின் திருவடிகளிற் பேரன்பு பூண்டு வேறொன்றையும் வேண்டாதவராய் விளங்கினார்.

இவரைக் கண்டவர்கள், செந்தாமரை மலரில் உள்ள தேனை அருந்தி, அதில் மயங்கிக் கிடக்கும் வண்டைப் போல இப்பெரியார் மனம் திருமகள்நாதன்பாற் சென்று பொருந்தி, அப்பெருமானுடைய அருளமுதை அருந்தி, அப்பெருமானிடத்திலேயே மயங்கிக்கிடக்கின்றது. இப்பெரியார், 'பேயனா யொழிந்தே னெம்பிரானுக்கே' என்றபடி திருமகள் நாதன் திருவடிக் கமலங்களில் அமைந்த தம் அன்பின் மிகுதியினால், பித்தர் பேயர் எனத் தம்மை மறந்திருக்கின்றனர். இவர் கருவிலேயே ஞானமாகிய திருவுடையராய் அவதரித்தவர். மெய்ஞ்ஞானச் செல்வர் இவர்." என்று போற்றுவார்கள். "இவரை வணங்கினால் நாம் மக்கட்பிறப்பை எய்தியதனால் அடைதற்குரிய பயனை அடைவோம்." என்று அவர் திருவடிகளில் வணங்குவார்கள். இவ்விதங் கண்டோர் யாவரும் போற்றி வணங்குதற்குரிய அன்பின் செல்வராய் விளங்கினார் பேயார்.

இவர் ஐப்பசி மாதத்தில் சதய நாளில் எம்பெருமான் ஐம் படைகளில் ஒன்றாகிய நாந்தகம் என்னும் வாளின் அமிசம் உடையவராய் அவதரித்தனர் என்பர் பெரியோர்.

### இம்மூவருந் திருக்கோவலூரிற் கூடிப் பரமனைச் சேவித்து, அந்தாதி பாடுதல்

இம்மூவரும் உலகவாழ்க்கையை முற்றும் வெறுத்துத் திருமகள்நாதன் திருவடித் தாமரைகளைத் தங்கள்

உள்ளத்தில் அமைத்துப் போற்றுதலையே பெருஞ் செல்வம் எனக் கொண்டவர்கள்; ஆகையால், உண்டியையும் உடையையுமே விரும்பி, நல்வழி இருக்க அதை விட்டுத், தீய வழியிற் சென்று, தீமை புரிந்து திரியும் மாந்தருடன் இருத்தற்கு மனம் இசையாதவர்களாய், ஒருவரை ஒருவர் அறியாமல் ஒருநாள் இருந்த ஊரில் மறுநாள் இராமல் ஊர் ஊராய்த் திரிந்துகொண்டிருந்தார்கள்.

இவர்கள் இப்படித் திரிந்துகொண்டிருக்கையில் திருமகள் நாதனாகிய இறைவன், "இவர்களால் ஞானமும் பக்தியும் நிறைந்த நூற்களை இயற்றுவித்து, அவற்றால் உலகினருக்கு நல்லுணர்வை உண்டாக்குதல் வேண்டும்' எனத் திருவுளங்கொண்டு, திருக்கோவலூருக்குச் செல்ல வேண்டும் என்னும் எண்ணத்தை இம்மூவருக்கும் உண்டாக்கியருளினன். அதனால், இவர்கள் தனித் தனியாகத் திருக்கோவலூரைச் சென்று அடைந்து, அத்தலத்தில் உள்ள திருக்கோயிலினுட் சென்று, திருமகள் நாதனைச் சேவித்தார்கள். பகற்பொழுது போயிற்று. "நம்பெருமான் இந்த மெய்ஞ்ஞானச் செல்வர்களைக்கொண்டு சீரிய தமிழ் நூற்களைச் செய்விக்கத் திருவுளங்கொண்டருளினன். அதற்கு இடையூறாக நாம் இருத்தலாகாது" என்றெண்ணிச் செல்பவன் போலச் சூரியன் சென்று மேற்றிசையை அடைந்து மறைந்துவிட்டனன். பகல் முழுதும் ஓடியாடித் திரிந்து அலுத்த மக்களைப் பாராட்டிப் படுக்கையிற் கிடத்தித் துயில்விக்க வந்த தாய் என உலகத்து உயிர்களைத் துயில்விக்க மாலைப்போது வந்தது. இம்மூவருள், பொய்கையார் முதல் முதல் ஒரு வைணவருடைய திருமாளிகையை அடைந்து, அம்மாளிகையின் இடைகழியிற் பள்ளிகொண்டனர். பூதத்தார் பின்பு

பொய்கையார் பள்ளிகொண்டிருக்கும் திருமாளிகையைச் சார்ந்து, 'சுவாமீ, அடியேன் படுத்துக்கொள்ளச் சிறிது இடம் கிடைக்குமோ'? என்று கேட்டனர். பொய்கையார் அதனைக் கேட்டு, "சுவாமீ? இவ்விடை கழியில் ஒருவர் படுக்கலாம்; இருவர் இருக்கலாம்; தேவரீர் எழுந்தருளுக; இருவரும் இருக்கலாம்." என்றனர். பூதத்தார் அவ்வாறே சென்று அவ்விடைகழியில் அவரோடிருந்தனர். அப்போது பேயாரும் அங்கு வந்து, "அடியேன் படுத்துக்கொள்ளச் சிறிது இடம் கிடைக்குமோ?" என்று கேட்டனர். பொய்கையார், "சுவாமீ, இவ்விடை கழியில் ஒருவர் படுக்கலாம்; இருவர் இருக்கலாம்; மூவராயின் நிற்கலாம்; தேவரீர் எழுந்தருள்க; மூவரும் நிற்கலாம்." என்றனர். பேயார் சென்று அவ்வாறே அவர்களோடு நின்றுகொண்டனர். பிறகு அவர்கள் ஒருவரை ஒருவர் வினவி, அறிந்து கொண்டு, பாலுடன் பால் சேர்ந்தாற்போல ஒருவரோடு ஒருவர் அளவளாவிப் பேசிக்கொண்டிருந்தார்கள்.

அப்பொழுது கருமுகில் வண்ணனாகிய இறைவன் பேரிருளும் பெருமழையும் உண்டாக்கி, அவர்களுக்குத் தெரியாமல் தானும் அவர்களுக் கிடையில் சென்று, நின்றுகொண்டு, அவர்களுக்கு மிக்க நெருக்கம் உண்டாகும்படி செய்தருளினன். அம்மூவரும், "என்னே இது! முன்னே இல்லாத நெருக்கம் எப்படி இப்போது உண்டாயிற்று! நம்மை ஒழியவும் இவ்விடை கழியைப் பற்றி நிற்பார் உளரோ?" என்று தமக்குள் யோசித்து, அந் நெருக்கத்தின் காரணத்தை அறிய எண்ணினர். பொய்கையாரும் பூதத்தாரும் ஞானச்சுடர் விளக்கினை ஏற்றி, மனம் என்னும் உட்கண்ணால் நோக்கினார்கள். அப்போது அவ்விறைவன் பொலிவுற்று விளங்கும் கருங்குழல்

பின்னே தாழ, ஒளி மிக்க நவமணிகளையுடைய திருமுடி சிரத்திற் பொலியக், கலைகள் நிரம்பிக் கரையற்றிலகும் மதி எனத் திருமுகம் விளங்க, அன்பும் அருளும் நிறைந்திலகும் திருக்கண்கள் காண்பவர்களின் உள்ளக் கமலங்களை மலர்த்திக் குளிர்விக்கும் ஒளியுடன் இலகக், கடலினிடையிலே தோன்றி விளங்கும் பவழம்போலத் திருவதரம் பொலியப், புன்னகையின் ஒளி தண்மதியின் வெண்ணிலவெனத் திருமுக மண்டலத்தில் தவழ்ந்து பரவித் தோன்றத், தாழ்ந்து விளங்கும் திருக்காதுகளில் மகர குண்டலங்கள் ஒளிவிட, அழகிற் சிறந்த சங்குகளும் விரும்பும் எழிலினை உடைய கண்டத்தில் கௌத்துவமணி விளங்கித் தோன்றச், சூரியனிலும் பன்மடங்கு மிக்க ஒளியினையுடைய ஆழி வலத்திருக்கையிற் பொருந்தி ஒளிர, மதியினும் பன்மடங்கு மிக்க வெண்ணிறத்தினை யுடைய சங்கு இடக்கையில் இனிது விளங்க, எல்லா உலகங்களுக்கும் தாயாகிய திருமகள் திருமார்பிற் பொருந்திப் பொலியச், சூரியனுடைய செங்கதிர்கள் நீல மலையைச் சூழ்ந்திருப்பது போலப் பொற்புறு மேனியிற் பொன்னுடை பொலிய, அடியவர்களின் மனங்களைக் கவரும் திருவடித்தாமரைகளில் 'இவன் உயர்வொப் பில்லாத இறைவன்' என அனைவர்க்கும் தெரிவிப்பன போலப் பொற்கழல்கள் பொருந்தி விளங்க, எல்லா உயிர் களுக்கும் தந்தையாகிய அவ்விறைவன், பொன்மலையின் மேல் இவர்ந்து வரும் நீலமலை எனக் கருடன்மீது இவர்ந்து வந்து, அவர்களுக்குக் காட்சி தந்தருளினன். அக்காட்சி யைக் கண்ட போது பேரன்பு கொண்டவர்களாகிய அவ் வடியவர்களுக்கு உண்டான ஆநந்தத்தின் பெருக்கை 'இப்படிப்பட்டது; இவ்வளவினது' என்று யாரால் சொல்லமுடியும்! அவர்கள் தங்களை மறந்துவிட்டார்கள்.

அவர்கள் கண்ட அக்காட்சியைப் பேயார் ‘திருக் கண்டேன் பொன்மேனி கண்டேன்’ என்று தொடங்கும் பாசுரத்தாற் கூறி யருளினர். அவர்களுக்கு அந்த ஆநந் தம் உள்ளடங்கவில்லை. அதனால், அவர்களுள், பொய் கையார்,

நேரிசை வெண்பா

“வையந் தகளியா வார்கடலே நெய்யாக
வெய்ய கதிரோன் விளக்காகச்—செய்ய
சுடராழி யானடிக்கே சூட்டினேன் சொன்மாலை
இடராழி நீங்குகவே என்று”

என்று தொடங்கி நூறு பாட்டுக்களைக் கொண்ட ஓர் அந்தாதியைப் பாடியருளினர். பிறகு பூதத்தார்,

நேரிசை வெண்பா

“அன்பே தகளியா ஆர்வமே நெய்யாக
இன்புருகு சிந்தை இடுதிரியா—நன்புருகி
ஞானச் சுடர்விளக் கேற்றினேன் நாரணற்கு
ஞானத் தமிழ்புரிந்த நான்”

என்று தொடங்கி நூறு பாட்டுக்களைக் கொண்ட ஓர் அந்தாதியைப் பாடியருளினர். பின்பு பேயார், முன்னே கூறிய

நேரிசை வெண்பா

“திருக்கண்டேன் பொன்மேனி கண்டேன் திகழும்
அருக்கன் அணிநிறமுங் கண்டேன்—செருக்கிளரும்
பொன்னாழி கண்டேன் புரிசங்கங் கைக்கண்டேன்
என்னாழி வண்ணன்பால் இன்று”

என்பது முதலாக நூறு பாட்டுக்களைக் கொண்ட ஓர் அந் தாதியைப் பாடியருளினர். அவர்களுள், பொய்கையார், முதலில் தொடங்கிப் பாடியருளியதனால், அவர் பாடி

யருளிய அந்தாதியை முதற்றிருவந்தாதி என வழங்குகின்றனர். பூதத்தார் அதன் பிறகு தொடங்கிப் பாடியருளியதனால் அவர் பாடியருளிய அந்தாதியை இரண்டாந் திருவந்தாதி என வழங்குகின்றனர். பேயார் அதன் பின்னர்த் தொடங்கிப் பாடியருளியதனால் அவர் பாடியருளிய அந்தாதியை மூன்றாந் திருவந்தாதி என்று வழங்குகின்றனர். திருக்கோவலூரிலே நிகழ்ந்த இந்த வரலாற்றைப் பொய்கையார் தாம் பாடியருளிய அந்தாதியிலே,

" நீயுந் திருமகளும் நின்றாயால் குன்றெடுத்துப்
பாயும் பனிமறுத்த பண்பாளா—வாசல்
கடைகழியா உட்புகாக் காமர்பூங் கோவல்
இடைகழியே பற்றி யினி "

எனவரும் எண்பத்தாறும் பாசுரத்திற் குறித்திருக்கின்றனர்.

இவர்கள் அவதரித்த மாதத்தையும் நாட்களையும்

[1] " ஐப்பசியில் ஓணம் அவிட்டம் சதயமிவை
ஒப்பிலவாம் நாள்கள் உலகத்தீர்—எப்புவியும்
பேசுபுகழ்ப் பொய்கையார் பூதத்தார் பேயாழ்வார்
தேசுடனே தோன்றுசிறப் பால் "

என்னும் செய்யுளால் அறியலாம்.

## வாழி திருநாமம்

### எண்சீர் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

### பொய்கையார்

செய்யதுலா ஓணத்திற் செகத்துதித்தான் வாழியே
　　திருக்கச்சி மாநகரம் செழிக்கவந்தோன் வாழியே

1. உபதேச ரத்தினமாலை, பாசுரம்-6.

வையந்த களி நூறும் வகுத்துரைத்தான் வாழியே
வனசமலர்க் கருவதனில் வந்தமைந்தான் வாழியே
வெய்யகதி ரோன்றன்னை விளக்கிட்டான் வாழியே
வேங்கடவர் திருமலையை விரும்புமவன் வாழியே
பொய்கைமுனி வடிவழகும் பொற்பதமும் வாழியே
பொன்முடியும் திருமுகமும் பூதலத்தில் வாழியே.

## பூதத்தார்

அன்பேத களி நூறும் அருளினான் வாழியே
ஐப்பசியில் அவிட்டத்தில் அவதரித்தான் வாழியே
நன்புகழ்சேர் குருக்கத்தி நாண்மலரோன் வாழியே
நல்லதிருக் கடன்மல்லை வருநாதன் வாழியே
இன்புருகு சிந்தைதிரி இட்டபிரான் வாழியே
எழில்ஞானச் சுடர்விளக்கை ஏற்றினான் வாழியே
பொன்புரையும் திருவரங்கர் புகழுரைத்தான் வாழியே
பூதத்தான் தாளிணைகள் பூதலத்தில் வாழியே.

## பேயார்

திருக்கண்டேன் என நூறும் செப்பினான் வாழியே
சிறந்தஐப்ப சியிற்சதயம் செனித்தபிரான் வாழியே
மருக்கமழு மயிலைநகர் வாழவந்தோன் வாழியே
மலர்க்கரிய நெய்தறனில் வந்துதித்தான் வாழியே
நெருக்கிடவே இடைகழியில் நின்றசெல்வன் வாழியே
நேமிசங்கன் வடிவழகை நெஞ்சில்வைப்போன் வாழியே
பெருக்கமுடன் திருமழிசைப் பிரான்தொழுவோன் வாழியே
பேயனெழிற் றாளிணையிப் பெருநிலத்தில் வாழியே.

# ௪. திருமங்கை மன்னர்

## திருமங்கை மன்னர் அவதாரம்

### நேரிசை வெண்பா

வாழி பரகாலன் வாழி கலிகன்றி
வாழி குறையலூர் வாழ்வேந்தன்—வாழியரோ
மாயோனை வாள்வலியால் மந்திரங்கொள் மங்கையர்கோன்
தூயோன் சுடர்மான வேல்.

தமிழகத்தின் பகுதிகள் நான்கனுள் ஒன்றாகிய சோழ நாடு கங்கையிற் புனிதமாகிய காவிரியாற்றின் பாய்ச்சலால் மற்றை எல்லா நாடுகளினும் பயிர்வளம் சிறந்து விளங்குவது ஆகும். ஆதலின், "சோழ வளநாடு சோறுடைத்து", என்றார் ஔவையார். அந்நாட்டிற் பல உட்பிரிவுகள் உள. அவற்றுள், திருவாலிநாடு என்பது ஒன்று. அஃது, ஒரு சிறு நாடு. அதில் நறுமண மலர்களை உடைய பொழில்களாலும், வளமிக்க வயல்களாலும் சூழப்பெற்ற பல ஊர்கள் உண்டு. அவற்றுள், திருக்குறையலூர் என்னும் ஊரும் ஒன்று.

அவ்வூரிற் சிறந்த செல்வத்தை உடையவரும், கள்ளர் மரபில் தோன்றியவரும், சோழநாட்டு மன்னனுடைய சேனைத்தலைவர்களுள் ஒருவருமாகிய ஆலிநாடர் என்பவர் ஒருவர் இருந்தார். அவர் சிறந்த வீரம், அன்பு, அருள், ஈகை முதலிய நற்குணங்கள் நன்கு அமையப்பெற்றவர். அவர் மனைவியார் வல்லித்திரு என்னும் திருப்பெயர் உடையார். அவ்வம்மையார் திருமாமகள் அன்ன பொற்பும் அருந்ததி அன்ன கற்பும் வாய்ந்தவர். இங்கு,

"மருவு தொல்புகழ் ஆலிநா டன்றிரு மனைவி
இருமை மிக்கபொற் கடகவல் லித்திரு என்பாள்"

(அரி சமய தீபம். பரகாலச் சருக்கம் செ. 4, அடி 3-4.)

என்னும் செய்யுளை நோக்குக.

(இ-ள்.) பொருந்திய பழமையாகிய புகழை உடைய ஆலிநாடன் என்பவனுடைய மனைவி பிறந்த அகமும் புக்க அகமுமாகிய இருமரபும் சிறந்தவளாகிய வல்லித்திரு என்று சொல்லப்படும் திருப்பெயரை உடையவள் ஆவள். (எ-று.)

அவர்களது அருந்தவ மேன்மையை உலகம் முழுதும் சொல்லித் துதிக்கும்படி அவ்வம்மையார் ஒரு கார்த்திகைத் திங்களில், கார்த்திகை நாளில் ஓர் அருமருந்தன்ன அழகிய மைந்தனை ஈன்றனர். அம்மைந்தரைத் திருமாமகள் நாதன் ஐம்படைகளில் ஒன்றாகிய சார்ங்கம் என்னும் வில்லின் அமிசமாக உலகம் உய்ய அவதரித்தவர் என்பர் பெரியோர். அவருக்குப் பெற்றோர்கள் நீலன் என்று திருப்பெயர் இட்டார்கள்.

## திருமங்கை மன்னர் கற்பன கற்றுப் படைத்தலைவராதல்

அவர்தம் தந்தையார் அவருக்கு ஐந்து ஆண்டு ஆனவுடன் நல்லியல்பும் போற்றற்குரிய புலமையும் அமைந்த ஆசிரியர்பால் கல்வி பயில விடுத்தனர். அவர் செந்திறத்த தமிழ்மொழிக் கலைகளையும் வடமொழிக் கலைகளையும் கல்வியில் இவருக்கு ஒப்பவரும் மிக்கவரும் இல்லை என்னும்படி நன்கு பயின்று தேர்ந்து திருமகள் நாதன் திருவருளால் [1] ஆசு, மதுரம், சித்திரம், வித்தாரம் என்னும் நான்கு வகைக் கவிகளையும் பாடும் ஆற்றல் வாய்ந்தவராய் விளங்கினார்.

இவர் மேலும் வில், வாள், வேல் முதலிய படைகளையும் யானை, தேர், குதிரை, காலாள் என்னும் நால்வகைச்

1. இந்நால்வகைக் கவிகளை விரைகவி, இன்கவி, மிறைக்கவி அகலக்கவி என்றும் கூறுவர்.

சேனைகளையும் பகைவர்கள் அஞ்சும்படி நன்கு வகுத்துப் போர் புரிதற்கு உரிய வகைகளையும் ஒப்புயர்வறப் பயின்று விளங்கினர். அக்காலத்துச் சோழநாட்டை ஆண்டிருந்த அரசன் இவருடைய கல்வியின் சிறப்பினை யும் போர் வன்மையையும் உணர்ந்து, இவரைத் தன்பால் வருவித்துப், பல சிறப்புகளைச் செய்து, இவரைத் தன் சேனைத்தலைவர்களுள் ஒருவராக இருக்கும்படி நியமித் தான்.

## திருமங்கை மன்னர் நாற்கவிப் பெருமாளை வெல்லுதல்

அக்காலத்து நாற்கவிப்பெருமாள் என்னும் தமிழ்ப் பெரும் புலவன் ஒருவன் இருந்தான். அப்புலவன் பல புலவர்களை வாதில் வென்று, அவர்களிடமிருந்து கப்ப மாகப் பொருள் பெற்றுத், தனக்கு நிகராவார் ஒருவரும் இல்லை என்னும் அடலேறு அனைய செருக்கில் ஆழ்ந்திருந் தான். அப்புலவன் நம்முடைய நீலரது கல்வியின் சிறப் பைப் பலர் சொல்லக் கேட்டு, அவரிடம் வந்து, வாதிட்டுத், தோற்றுத் தனது நாற்கவிப்பெருமான் என் னும் பட்டப் பெயரை அவருக்குக் கொடுத்துவிட்டுச் சென்றான்.

அரசன் அதனை உணர்ந்து, இவரைத் தன்பால் வரு வித்து, "நாற்கவிப் பெருமான் என்னும் பட்டமும் அதற்கு உரிய விருதுகளும் உமக்கே உரியனவாகும்" என்று கூறிப் பல பரிசுகளை இவருக்கு அளித்துச் சிறப்பித்தான்.

1. "அங்க வன்புவி புரக்குநாள் நாற்கவி யதிபன்
எங்க ணுந்தமிழ்க் கவிஞரைத் திறைகவர்ந் திவன்பால்
துங்க மாவிரு திசைத்தணு கலுமிகல் தொலையாப்
பங்க மாக்கிமற் றவன்பெயர் விருதொடும் பறித்தான்."

2. "உவகை மிக்குயர் வளவனும் வரிசைகள் உதவித்
தவவில் நாற்கவித் தலைவனீ புவிக்கெனச் சாற்ற
இவனும் அப்பெயர் விருதிசைத் தெவற்றினும் எதிர்ஆம்
அவர்களைத்தொலைத் திசைநிறைத் திட்டனன் அந்நாள்.

—அரிசமயதீபம், பாகாலச் சருக்கம் செ. 10-11.

என்னும் செய்யுட்களை இங்கு நோக்குக.

1. (இ-ள்.) அங்கு அப்பரகாலர் பூமியைக் காக்கும் போது நாற்கவிப்பெருமான் என்னும் புலவன் எங்கணும் உள்ள தமிழ்க் கவிஞர்களிடத்துக் கப்பம் பெற்று, இப் பரகாலர்பால் வரப், பரகாலரும் அவனை வாதில் வென்று, அவனது செருக்கை அழித்து, அவனது விருதுகளையும் பறித்துக்கொண்டார்.

2. சோழநாட்டிறைவனும் மிக்க மகிழ்ச்சியினை அடைந்து, இவருக்குப் பல வரிசைகளையும் கொடுத்துப், 'பூமியின்கண் கெடுதல் இல்லாத நாற்கவிப் பெருமான் நீவிரே', என்று சொல்ல, இவரும் அவ்விருதோடு கூடிய அப்பெயரைச் சூடிக்கொண்டு எவ்விதக் கலைகளினும் வந்து எதிர்த்தவர்களை வென்று, தம்முடைய புகழை உலகில் நிறைத்து வைத்தனர் (அந்நாளில்) (எ - று.)

## சோழநாட்டு இறைவன் திருமங்கை மன்னருக்கு ஆலிநாட்டை அளித்தல்

பிறகு இவர் பல போர்களிற் பல அரசர்களை வென்று, சோழ நாட்டின் மேன்மையை எங்கும் விளங்கும்படி செய்தார். அதனால், சோழநாட்டிறைவன் அகமிக மகிழ்ந்து, இவர்பால் அன்பு மிக்கவனாகி, இவருக்கு ஆலி நாட்டை அளித்து, [1] அதற்குத் திருமங்கை என்னும் பதி

---

1. "எங்கள் ஈசன் எம்பிரானை இருந்தமிழ் நூற்புலவன்,
மங்கையாளன் மன்னுதொல்சீர் வண்டறை தார்க்கலியன்"

முதற்பத்து 7-ஆம் திருமொழி, பாசுரம் 10.

யைத் தலைநகராக அமைத்து, இவரைத் தன் சேனைத் தலைவர்களுக்குள் முதன்மையானவராகச் செய்து, பரகாலன் என்னும் வீரப்பட்டத்தையும் அளித்தான்.[1]

இவரும்,

"நல்லவும் தீயவு நாடி நாயகற்
கெல்லையின் மருத்துவன் இயல்பின் எண்ணுவார்
ஒல்லைவந் துறுவன உற்ற பெற்றியின்
தொல்லைநல் வினையென உதவுஞ் சூழ்ச்சியார்"

என்றபடி அம்மன்னனுக்கும் குடிகளுக்கும் நன்மை பயக்கும் செயல்களையே நாடிச் செய்துவந்தார். [1]இவருடைய யானைக்குக் **கடமாகளியானை** என்பதும், புரவிக்கு **ஆடன்மா** என்பதும் பெயர்கள் ஆகும்.

---

1. "நெடுமா லவன்மே வியசீர் மலைமேல்
நிலவும் புகழ்மங் கையர்கோன் அமரில்
கடமா களியா னைவல்லான் கலியன்"

—(2-ஆம் பத்து, 4-ஆம் திருமொழி பா. 10.)

எனவும்

"மாட மாளிகை சூழ்திரு மங்கைமன்
ஒன்னலர் தங்களை வெல்லும்
ஆடல் மாவல வன்கலி கன்றி"

எனவும் இவரே கூறியவற்றாலும்,

"சோழ பூபதியைச் சேவித்து, யுத்தேப ராக ராந்தராய் ப்ரவீரராய்த் தமக்குச் சகாய பூதராக நீர்மேல் நடப்பான், நிழலொதுங்குவான், தாளூதுவான்; தோலாவழக்கன் என்னும நாலு மந்திரிகளும், 'ஆடல்மா' என்கிற குதிரை நம்பிரானும், 'அமரிற் கடமாகளியானை' என்கிற யானை நம்பிரானுமாக இப்படி இருக்கிற இவரை அவனும் ஒருதேசாதிபதியுமாய்ச் சேனா நாயகனுமாக்கி வைத்துப் போருகிற காலத்திலே" என்று பின்பழகிய பெருமாள் சீயர் அருளிச் செய்த 'ஆறாயிரப்படி' குருபரம்பரைப் பரபாவம்" என்னும் நூலிற் கூறியிருப்பதனாலும் இவற்றை அறிக.

## குமுதவல்லியார் அவதாரம்

இங்ஙனம் இவர் இருக்கையில், பல தேவ மங்கையர்களுக்குத் தலைவியாகிய 'சுமங்கலை' என்னும் பெயரை உடைய தேவ மாது, தன் தோழிமார்களோடு சென்று, இமயமலையின் வளங்களைச் சுற்றித் திரிந்து பார்த்துக் கொண்டிருந்தாள். அங்கு ஓர் இடத்தில் திருமாமகள் நாதன் அமிசமாய் அவதரித்தவராகிய கபிலமுனிவர் பல முனிவர்களுக்குத் திருமாமகள் நாதன்றன் கலியாண குண மேன்மைகளைக் கூறிக்கொண்டிருந்தார். அவைகளைக் கேட்டுக்கொண்டிருந்த முனிவர்களுள் ஒருவர் விகார வடிவினராக இருந்தார். அந்த வானக நங்கை அவரைக் கண்டு பரிகாசம் பண்ணினள். கபில முனிவர் அதனைக் கண்டு, சினம் கொண்டு, அவளை நோக்கிப், "பெண்ணே, நீ பூமியிற் சென்று மானிடப் பெண்ணாகப் பிறந்து, ஒரு மனிதனுடைய மனைவியாய் வாழக் கடவாய்," என்று சபித்தனர்.

அப்பெண், அஞ்சி நடுங்கிக், கபில முனிவருடைய திருவடித்தாமரைகளில் தன் முடிபட வணங்கி, "இளஞ் சிறு பெண்ணாகிய அடியேன் செய்த இத்தவற்றை மன்னித்து, அருள்புரிக" என்று வேண்டினள். கபில முனிவர் அவள்பால் இரக்கம் கொண்டு, "பெண்ணே, நீ அஞ்சற்க. உனக்கு நான் இட்ட சாபம் பூமியிற் சிறந்ததாகிய ஒரு நற்செயலுக்குப் பயன்படுவதாகும். பூதேவியின் நெற்றித் திலகம் என விளங்கும் சோழ வளநாட்டிலே நமது சார்ங்கம் என்னும் வில்லின் அமிச" மானவராய்ப் பரகாலர் என்னும் பெயருடையராய் ஒருவர் உலகை உய்விக்க அவதரித்திருக்கின்றார். ஆனால், அவர் அரியேறு அன்ன ஆண்மையை உடையவர். ஆதலின், ஒன்னார் தங்கள் உறுவலியை அழித்துப் போர்க்கள வேள்வி புரிதலிலேயே

மனம் சென்றவராய் இருக்கின்றார். நீ அவருடைய மனைவியாகி, அவரை நம்முடைய நல்லடியாராகத் திருத்தி, அவருடன் வாழ்ந்திருந்து, அதனால், உன் குறை தீர்ந்து, பொன்னாட்டை அடைவாயாக'' என்று அருள் புரிந்தார்.

செம்முருக்க மலர்போன்ற இதழையும், கருங்குவளை மலர்போன்ற கண்களையும், மழலைச் சொற்களையும், குயில் போன்ற இனிய குரலையும், மலர்கள் நிறைந்த கூந்தலையும் உடைய அச்செல்வி, உடுக்கள் சூழ வரும் தண்மதி எனத் தன்னைத் தோழியர்கள் சூழ்ந்து வரத் திருநாங்கூர் என்னும் பதிக்கு வந்தனள். அப்பதியில் பளிங்குபோலத் தெளிந்த நீரை உடையதும், தாமரை அல்லி முதலிய மலர்களால் பொலிவுற்றதும் ஆகிய ஓர் அழகிய பொய்கையைக் கண்டு, அதில் தன் தோழியர்களுடன் சென்று நீராடலானாள். அங்ஙனம் நீராடுகின்றவள், அப்பொய்கையில் வண்டுகளுக்குத் தேனாகிய விருந்தை அளிக்கும் ஓர் அல்லிமலர் அவள் கண்களுக்குத் தன் வனப்பாகிய விருந்தினை அளித்தலால், அதன் அருகிற் சென்று, அதன் எழிலால் மனம் கவரப்பட்டு, அதனை நோக்கிக் கொண்டிருந்தனள். அவளுடைய தோழியர்கள் நீராடியவுடன் அவளை விட்டுப் போய்விட்டார்கள். அவள் அவ்வல்லி மலரையே தனக்குத் தாயாகக் கொண்டு, அதன் இடையில் குற்றமற்ற செம்மணிபோலச் சிறந்த அழகுடைய குழந்தையாய்த் தோன்றினாள்.

> "பளிங்கு போன்று செந்தாமரை வதுவையே பரவித்
> தெளிந்த தண்புனற் றவளபுட் காணியிற் செழுந்தேன்
> களிர்ந்த பைங்குமு தத்திஞேர் குழவியா னவைதீர்ந்
> தொளிர்ந்த செம்மணி யெனவினி தழகுட னுதித்தாள்"
>
> —அரிசமயதீபம், பரகாலச் சருக்கம், செ. 13.

என்னும் செய்யுளை இங்கு நோக்குக.

(இ - ள்.) பளிங்குக் கல்லைப் போன்றதாய்ச், செந் தாமரை மலர்களின் மணம் பரவப்பெற்றுத், தெளிந் திருக்கும் குளிர்ச்சியாகிய நீரை உடைய வெண்மையான ஒரு தடாகத்தில் செழுமையான தேனை உடைய குளிர்ந்த ஒரு குமுதமலரில் குற்றம் அற்று விளங்கும் செம்மணியைப்போல இனிதாகிய அழகுடன் ஒரு குழவி யாய் உதித்தனள் (எ - று).

வதுவை - வாசனை, புட்கரணி - பொய்கை (தடாகம்) நளிர்ந்த - குளிர்ந்த, குமுதம் - அல்லி, ஒளிர்ந்த - விளக்க மாகிய.

அப்பதியில் ஒரு சிறந்த வைத்தியர் இருந்தார். அவர் வைத்திய நூற்களை முறையுற நன்குய்ப் பயின்று தேர்ந்தவர். அறநெறியினின்றும் நீங்காத நல்லொழுக்கம் உடையவர். அன்பும் அருளும் நிரம்பிய மனத்தினர். நோயாளிகளிடத்து நிகழ்கின்ற நோயை அதன் குறி களால் இன்னது என்று துணிந்து, பிறகு அந்நோய் வந்த தன் காரணத்தை ஆராய்ந்து அறிந்து, பின்பு அந் நோயைத் தீர்க்கும் உபாயத்தினை அறிந்து, பின்னர் அவ் வுபாயத்தினைச் செய்யும் போது பிழையாமற் செய்யும் திறத்தினர்; திருமாமகள் நாதன்பால் நீங்காத அன்பு வாய்ந்தவர்.

அவர் நீராடுதற்பொருட்டு அப்பொய்கைக்கு வந்து, அதில் உள்ள அல்லிமலர்களுள் ஒன்றன் இடையில் பிறைமதி அன்ன நெற்றியும், முழுமதி புரையும் முகமும், பவழக்கிண்ணம் போன்ற வாயும், காந்தள் மலரின் இதழ்களை ஒக்கும் விரல்களும் உடையதாய், ஒளிமிக்க செம்மணி என விளங்கும் அப் பச்சிளம் குழவியைக் கண்டு, வியப்பும் களிப்பும் ஒன்றோடு ஒன்று போட்டி

யிட்டுக் கவர்ந்துகொண்ட மனத்தினராய் விரைந்து சென்று, அக்குழந்தையை மிக்க ஆர்வத்தோடு எடுத்து, மார்புடன் அணைத்து, முத்தம் இட்டு, "எம்பெருமான் நம்முடைய மகப்பேறு இல்லாத குறையினை நீக்க இக் குழவியை நமக்கு அருளினன் போலும்" என்று மகிழ்ச்சி என்னும் வெள்ளத்துள் மூழ்கிய மனத்தினராய் அக்குழந்தையை எடுத்துக்கொண்டு, தம் மனைக்கு வந்து, மனைவியின் கையில் அம்மகவைத் தந்து, அது கிடைத்த விதத்தினையும் கூறினர். அவ்வம்மையும் மகப்பேறு இன்மையால் வாடியிருந்த மனத்தினள் ஆதலின், மிக்க அவாவோடு அக்குழவியைக் கையில் ஏந்தி, மார்புடன் அணைத்து, அதற்கு முத்தம் அளித்து, முகிலினைக் கண்டு வாடிய பயிர் தழைத்தாற்போல மனத்துயர் ஒழிந்து, மகிழ்வடைந்தனள். பிறகு அவ்விருவரும் அக்குழந்தை குமுத மலரிலிருந்து கிடைக்கப் பெற்றமையால் அதற்குக் **குமுதவல்லி** எனப் பெயரிட்டுத் தங்கள் அன்பின் உறையுள் அம்மகவே எனக் கொண்டு போற்றி வளர்த்துவந்தனர். அச்செல்வ மகளும் அக்குழவிப் பருவத்தில் சப்பாணி கொட்டியும், அவர்களுக்கு முத்தம் அளித்தும், அவர்கள்முன் தளர்நடை நடந்து சென்றும், அவர்களை மகிழ்வித்தனள்.

ஐந்து வயதானவுடன் கல்வி சற்கத் தொடங்கிக், கற்க வேண்டுவனவற்றைக் கற்று விளங்கினள். அச் செல்விக்கு மணம் புரிவித்தற்கு உரிய பருவம் எய்திற்று. அப்போது அப்பொற் கொடியின் எழிலைக் கண்ட மலர்க்கணைச் செல்வன், "முன்னே சீதாப்பிராட்டியார் தோன்றியதனால் இராமனை வென்றேம்; உருக்குமணிப்பிராட்டி, நப்பின்னை என்பவர்கள் தோன்றியதனால் கண்ணனை வென்றேம்; திரௌபதி தோன்றியதனால் பாண்டவர்

களை வென்றோம் ; வள்ளிநாயகி தோன்றியதனால் செவ்வேளை வென்றோம். இங்ஙனம் முன்னே போற்றற்கு அரிய மகா புருடர்களை நாம் வெல்லுதற்கு அச்செல்வியர்களின் தோற்றம் உதவி புரிந்தது. இச்செல்வியின் தோற்றத்தால், நாம் இப்போது ஒரு மகா புருடனை வெல்லுவோம் என்பதில் ஐயுறவில்லை'' என்று எண்ணி மகிழ்ந்தான். அப்பொற்பாவையின் தாய், தன் கணவராகிய வைத்தியரிடம் சென்றாள். வைத்தியர், ''அன்புடையாய், நீ இப்பொழுது என்பால் வந்ததற்குக் காரணம் யாது'' என்றார். அவ்வம்மை ''அன்புடையீர், நம்முடைய செல்வி மணப் பருவம் எய்தி இருத்தலால், அவளைத் தக்கார் ஒருவருக்கு மணம் புரிவித்தற்கு உரிய முயற்சியை நாம் செய்தல் வேண்டும் அன்றோ? அதனைக் கூறவே தங்களிடம் வந்தேன்'' என்றாள். வைத்தியர், '' அன்புடையாய், நீ கூறியபடி நாம் அதற்காக முயற்சி செய்யவேண்டியது நம்முடைய இன்றியமையாத கடமையேயாகும்; ஆயினும், நம்முடைய செல்வியின் கருத்தை அறிந்துகொண்டுதான் நாம் அதற்காக முயலுதல் வேண்டும். '' நீ சென்று நம் செல்வியை என்னிடம் அனுப்பு,'' என்றார். அவ்வம்மையும் அவ்வாறே சென்று, அம்மதிமுக மடக்கொடியை வைத்தியர் இடத்துக்கு அனுப்பினள்.

அப்பிறைநுதற் செல்வி, வைத்தியரிடம் வந்து, அவரை வணங்கி, அருகில் அமர்ந்து,''எந்தையீர், என்னைத் தாங்கள் அழைத்ததன் காரணம் யாது?'' என்றாள்.

வைத்தியர், ''எங்கள் அரும்பெறற் செல்வமே, நீ குழவிப் பருவத்தில் உன் குதலைச் சொற்கள் முதலியவற்றால் உன் அன்னையையும் என்னையும் மகிழ்வடையச்

செய்தாய். உன்னை ஒத்த மென்மொழிச் சிறுமியர்களுடன் நீ கூடிச் சிற்றில் இழைத்தும், அம்மனை கழங்கு முதலியவற்றை ஆடியும், விளையாடிய விளையாட்டுகளை நாங்கள் கண்டு களிப்பென்னும் கடலுள் ஆழ்ந்தோம். பிறகு, நீ கற்கத் தொடங்கிக் கற்கவேண்டிய நூற்களை நன்கு கற்று, 'இச்சிறுமியைப் பெற்றோர் இவளைப் பெறுதற்கு எவ்வித நோன்பை நோற்றனரோ'? என்று கண்டோர் யாவரும் கூறும் புகழை எங்களுக்கு உண்டாக்கினை. இத்தகைய எங்கள் அருமைச் செல்வமாகிய நீ இப்பொழுது மணத்தற்கு உரிய பருவம் எய்திருக்கின்றாய். ஆதலின், உன்னைத் தக்கார் ஒருவருக்கு மணம் புரிவித்து மகிழ் வெய்தக் கருதியுள்ளோம். அதனைப் பற்றிய உன் கருத்தினை அறிதற்காகவே உன்னை இங்கு வருவித்தேன்" என்றார்.

அக்குயில்மொழிச் செல்வி, வைத்தியரை நோக்கி, "எந்தையீர், என் பிறப்பைப் பற்றியதாகிய அரிய செய்தி ஒன்று உளது. அதனை யான் கூறினால், அஃது உங்களுக்கு வியப்பாகத் தோன்றுவதோடு, 'ஏதேனும் ஒரு தெய்வத்தின் ஆவேச முற்றதனால் இங்ஙனம் இவள் கூறுகின்றனள் போலும்' என்று தாங்கள் நினைத்தலும் கூடும். அவ்வையம் பின் நடப்பனவற்றால் நீங்கிவிடும். நான் சுமங்கலை என்னும் பெயரை உடைய ஒரு தேவமாது. நான் என் தோழியர்களுடன் இமயவரைக்குச் சென்று, அதன் அரிய வளங்களைச் சுற்றித் திரிந்து பார்த்துக் கொண்டிருந்தேன். அங்கு ஓரிடத்தில் கபில முனிவர் பல முனிவர்களுக்குப் பல அரும்பொருள்களைக் கூறிக்கொண்டிருந்தார். அவற்றைக் கேட்டுக்கொண்டிருந்த முனிவர்களுள் ஒருவர் மிக்க விகார வடிவினராயிருந்தார். நான் அவரைக் கண்டு பரிகசித்தேன்.

கபில முனிவர் அதனைக் கண்டு, சினம் கொண்டு, 'பெண்ணே, நீ பூமியில் ஒரு மானிடப் பெண்ணாய்ப் பிறந்து, ஒரு மனிதனுக்கு மனைவியாய் வாழக் கடவாய்' என்று சபித்தனர். நான் அஞ்சி நடுங்கி, அவரை வணங்கி, 'சுவாமி, இளஞ்சிறு பெண்ணாகிய அடியேன் அறியாமையாற் செய்த இப்பிழையைப் பொறுத்தருள்க' என்று வேண்டினேன். கபில முனிவர், என்பால் இரக்கம் கொண்டு, 'பெண்ணே, நீ அஞ்சற்க. நான் உனக்கு இட்ட சாபம் ஒரு நல்ல செயலுக்குத் துணைபுரிவதாகும். தமிழகத்தில் கங்கையும் விழையும் புண்ணியத்தினை உடைய காவிரியாறு தன்பால் பாயப்பெற்று விளங்கும் சோழவளநாட்டிலே, உலகம் உய்யப் பரகாலர் என்பவர் ஒருவர் அவதரித்திருக்கின்றார். அவர் "அகலகில்லேன் இறையும் என்று அலர்மேல்மங்கை உறையும் மார்பனாகிய இறைவனுடைய ஐம்படைகளுள் ஒன்றாகிய சார்ங்கம் என்னும் வில்லின் அமிசமாய்த் தோன்றியவர். அவர் சிறந்த அருங்கலைச் செல்வர். அரியேறு அன்ன ஆண்மையர்; அவர் ஒப்பற்ற தோள்வன்மையும் வாள்வன்மையும் உடையவர்; ஆதலால், இப்பொழுது வென்றியே வேண்டிப், பகைவர்களை வேரற நூறிப் போர்க்களவேள்வி புரிதலையே தமக்கு உரிய செயலாகக் கொண்டிருக்கின்றார். நீ அவரைத் திருமாமகள் நாதரையும், அவருடைய அடியார்களையும் போற்றும் அடியாராகத் திருத்தி, அவர் தம் மனைவியாயிருந்து, அதனால் உன்குறை நீங்கப்பெற்றுப், பொன்னுலகை அடைக' என்று அருளினர்.

"பிறகு நான் தாங்கள் என்னைக்கண்டு எடுத்த பொய்கையில் என் தோழியரோடு வந்து நீராடலானேன். அப்பொழுது நான் அப்பொய்கையில் உள்ள அல்லி மலர்களுள் ஒன்றன் பேரெழிலைக் கண்டு அதனையே நோக்கிக்

கொண்டிருந்தேன். என் தோழியர்கள் என்னை விட்டுச் சென்றுவிட்டார்கள். நான் பின்னர் நடக்கவேண்டியவற்றை எண்ணி, அவ்வல்லி மலரில் ஒரு குழவி யாகித் தங்கினேன். தாங்கள் என்னைக் கண்டு எடுத்துவந்து தங்கள் புதல்வியாகக் கொண்டு, மிக்க அருமையாக வளர்த்தீர்கள். அப்பரகாலரே தங்கள்பால் வருவார். அதனால், நான் கூறியவற்றின் தன்மையை அறிந்துகொள்வீர்கள். அவர் வரின் அவரிடம் கூறவேண்டிய செய்திகள் இரண்டு உள'' என்று உரைத்து, அவற்றையும் அவருக்குக் கூறினள். வைத்தியர் அவற்றைக் கேட்டு வியப்பும் களிப்பும் ஒருங்கு எய்தி, "என் அருமைச் செல்வியே, நின்னிடம் செல்க'' என்று கூறி அவளை அவளிடத்திற்கு அனுப்பினர்.

## பரகாலர் குமுதவல்லியாரை மணந்துகொள்ளல்

அச்செல்வி இங்ஙனம் இருக்க, அப்பொற்கொடியின் வனப்பின் மேன்மையினையும், குணநலங்களையும் கண்டறிந்த சிலர் பரகாலரிடம் சென்று, ''வெல் போர்ச் செல்வரே, திருநாங்கூர் என்னும் பதியில் உள்ள ஒரு வைத்தியருக்கு ஒரு பெண் இருக்கின்றனள். அவளது அழகைக் கண்டால் உலகில் உள்ள அழகிற் சிறந்த மாதர்கள் யாவரும் 'இவள் அழகுக்கு முன் நம்முடைய அழகு பொன்னுக்கு முன்னை பித்தளையை ஒப்பதேயாகும்' என்றே எண்ணுவார்கள். அப்பொற்பாவைக்கு, வனப்புக்கு ஏற்ற குணநலங்களும் அமைந்து, 'இவள் நறு நாற்றம் அமைந்த பொன்மலரே யாவள்' என்று அவளை அறிந்தோர் யாவரும் சொல்லும்படி சிறந்து விளங்குகின்றனள். அவளே தங்கள் இல்லக்கிழத்தியாதற்கு உரிய ஏற்றம் உடையாள். அவளைத் தாங்கள் மனைவியாகப்

பெறின், தங்கள் இல்லறம் நல்லறமாய் விளங்குவதோடு தங்கள் வாழ்க்கையும் இன்பத்தின் வடிவமாய் இலகுறும்'' என்றனர்.

திருமங்கை மன்னருக்கு அவற்றைக் கேட்டவுடன் அவ்வேற்கண்ணுள்பாலே மனம் செல்வதாயிற்று. அவர் தம் அமைச்சர்களிடம் அதனைத் தெரிவித்தார். அவர்கள், ''வீரச்செல்வரே, அறநெறியின் வழுவாத நல்லோர் தக்க பருவத்துத் தக்காள் ஒரு நங்கையை மணந்து கொள்ளுதல் தம் மனம் அவ்வறநெறியினின்று வழுவுதலின்றி, உறுதியுற நிற்றற்கு உதவிபுரிவதாகும். தாம் இன்றே நாங்கூருக்குச் சென்று அத்தேமொழி நங்கையாரின் தந்தையாருக்குத் தங்கள் கருத்தைத் தெரிவித்தால், அவர் தங்கள் கருத்துக்கு உடன்படுவார் என்பதில் ஐயுறவு இல்லை. இன்றே புறப்படுவீர்'' என்றார்கள். பரகாலரும் தமது 'ஆடன்மா' என்னும் பரியின்மீது இவர்ந்து, திருநாங்கூரை அடைந்து, அவ்வைத்தியரது மாளிகை உள்ள தெருவை அணுகினார். அப்பாய்மா அம்மாளிகையின் அருகிற் சென்றது. அப்போது அப்பொற்பாவை அம்மாளிகையின் மாடியில் இருந்தனள். அச்செல்வியைப் பரகாலர் நோக்கி, ''நம்முடைய செவி வழியாகப் புகுந்து, நம் மனத்தைத் தனக்கு உரிமையாக்கிக்கொண்ட பாவை இம்மடமானே போலும்! இந்நங்கை நம் மனைவாழ்க்கைக்கு உரியவளானால் நம்முடைய வாழ்க்கை இன்பத்தின் உறையுளாய்ச் சிறந்து விளங்கும் என்பதில் ஐயமில்லை'' என்று எண்ணினார். அம்மடமானும் அவரைக் கண்டாள். ''முனிவர் கூறிய பரகாலர் இவரேபோலும்! இவருடைய திண்டோள்களின் தோற்றமும், முகப்பொலிவும் இவரை அவரே என இனிது கூறுகின்றன. இவரைக் கண்டவுடன் நமக்குக் கண் முதலியன

இடப்பால் துடித்தலின், அவரே இவர் என்பதில் ஐயம் இல்லை" என்று எண்ணினள்.

பரகாலர் அப்பரிமாவினின்று இறங்கி, ஒரு பணியாளன் மூலமாகத் தமது வருகையை அவ்வைத்தியருக்குத் தெரிவித்தார். வைத்தியர் உடனே எதிர்கொண்டு வந்து, பரகாலரைத் தம்மில்லத்துக்குள் அழைத்துச் சென்று, ஓர் உயர்ந்த ஆதனத்தில் அவரை வீற்றிருக்கச் செய்து, தம் மனத்திற்கொண்ட உவகையினால் மலர்ந்த முகத்துடன் அவரை நோக்கி, "அருங்கலை விநோதரும் அருந்திறற் செல்வரும், அன்புறை மனத்தரும் ஆகிய தங்கள் வரவால், மாதவன் வரவால் மகிழ்கூர்ந்த விதுரர் மனம்போல, என்மனம் மகிழ்கூர்வதாயிற்று. தாங்கள் என் சிறு குடிலுக்கு வந்தருளியதன் காரணத்தை அறிய விழைகின்றேன்" என்று கூறினர். பரகாலர், "வாகட நூற்களையும், பிறநூற்களையும் நுண்ணிதின் ஆய்ந்து உணர்ந்த அறிஞரே, எனக்கு அருமருந்தாதற்கு உரிய தேன் ஒன்று தங்களிடம் உளது. அவ்வினிய தேனைப் பெறுதற்கே தங்களிடம் வந்தேன்" என்றனர்.

[1]'அருங்கலைப் புலமையும், அரியேறு அன்ன [2]வெல் போர்த்திறனும், அன்பும், அருளும் அமைந்த

1. "எங்கள் ஈசன் எம்பிரானை இருந்தமிழ் நூற்புலவன், மங்கையாளன் மன்னுதொல்சீர் வண்டறை தார்க்கலியன்"
—(பெரிய திருமொழி, முதற் பத்து, 7-ம் திருமொழி பா. 10)

"பொய்ம்மொழி யொன்றில்லாத மெய்ம்மையாளன்
புலமங்கை குலவேந்தன் புலமை ஆர்ந்த
அம்மொழிவாய்க் கலிகன்றி இன்பப்பாடல்"
—(பெ. திருமொழி 6-ம் பத்து, 6-ம் திருமொழி பா. 10)

2. "கடமாரும் கருங்களிறு வல்லான் வெல்போர்க் கலிகன்றி"
—(ஷை 2-ம் பத்து 5-ம் திருமொழி பா. 10)

தங்கள் விழைவுக்கு என் மனம் மாறுகொள்ளாது. ஆயினும், என் செல்வியின் கருத்தை அறிந்துகொண்டு அல்லாமல் அவள் மணவினையைப் பற்றி எதனையும் செய்தல் ஆகாது என்பது என் உறுதியான கருத்தாகும். ஆதலின், அவளை வருவித்து, அவள் கருத்தினை முதலில் அறிந்துகொள்ளுதல் இன்றியமையாததாகும்'' என்று கூறி, அத்தேமொழிச் செல்வியாரை வருவித்து, அவருக்குப் பரகாலரைக் காட்டி,

"என் அருமைச் செல்வியே, இவர் அருங்கலைகள் வல்ல புலவர் தலைவர்; வெல்போர்ச் செல்வர்; ஆலிநாட்டிறைவர்; கொடிமாட மங்கை வேந்தர்; நற்குணக்குன்று; அருள்மாரி; பாரணிந்த தொல்புகழாளர்; பரகாலர் என்னும் திருப்பெயர் உடையவர். இவர் உன் அன்பினைப் பெற விரும்புகின்றனர். இது நமக்குப் பெரும் பேறாகும்'' என்றனர். அம்மெல்லியார், "எந்தையீர், தங்கள் கருத்திற்கு யான் மாறு கூறும் எண்ணம் உடையேன் அல்லேன். ஆயினும், என் மனம் திருமாமகள் நாதன் அடியவராயிருப்பவரை யன்றிப் பிறரை மணம் புரிந்து கொள்ளச் சிறிதும் விரும்பாது. ஆதலின், இவர் என்னை மணக்க விரும்பினால் 'தீயிற் பொலிகின்ற செஞ்சுடராழி திகழ்திருச் சக்கரத்தின் கோயிற் பொறியாலே ஒற்றுண்டு, எம்பெருமானுக்குக் குடிகுடி யாட்செய்யும்' தொண்டர் குலத்தவராய் வருதல் வேண்டும்'' என்றனர். பரகாலரும் அதற்கு உடன்பட்டுத் திருநறையூரை அடைந்து, திருநறையூர் நம்பியின் திருமுன்பே வந்து, தமது கருத்தை விண்ணப்பித்து, நம்பியால் திருவிலச்சினை முதலியன அளிக்கப் பெற்றுத், திருமண் அணிந்து கொண்டு, தொண்டர் குலத்தவராய் வைத்தியர் மாளிகையை அடைந்தனர்.

குமுதவல்லியார், தம்முடைய தந்தையாரை நோக்கி, "எந்தையீர், எனக்கு மற்றும் ஒரு நோன்பு உண்டு. அது நாள்தோறும் ஆயிரம் பாகவதர்கட்கு அமுது அளித்தல் வேண்டும் என்பது. அதற்கு இவர் உடன் படுவராயின், இவரை யான் மணம்புரிந்து கொள்வதிற் சிறிதும் தடையிராது" என்று கூறினர். பரகாலரும் அது செய்வதாக உறுதி கூறினர். பிறகு வைத்தியர் பரகாலருக்குக் குமுதவல்லியாரை மணம் புரிவிக்கும் பொருட்டுத் தம்முடைய மனையை அலங்கரித்தனர். பெரியோர்களும், மற்றும் பல ஆடவரும், மகளிரும், மழலைவாய் மக்களும் வந்து அம்மாளிகையில் நிறைந் தனர். பெரியோர்கள் வாழ்த்த, மலர்க்குழன் மங்கை யர்கள் மங்கலப் பாடல்கள் பாட, யாவரும் நறுமணச் சுண்ணங்களையும் மண மலர்களையும் மழை எனச் சொரிய, மனத்தைக் கவரும் இன்னிசை மலிந்த இயங்கள் பல ஒலிக்கப் பரகாலருக்கும், குமுதவல்லியாருக்கும் முறைப் படி திருமணம் இனிது நடந்தது.

பரிதிவானவன் பரகாலருடைய திருமணச் சிறப்பை மேற்றிசையில் உள்ளவர்களுக்குச் சென்று சொல்ல விழைந்தவன்போல மேற்றிசையை அடைந்தனன். தனது தண் குழலின் நிறத்தால் தன் இனம் என்னும்படி அமைந்து, தன்னோடுறவுகொண்ட குமுதவல்லியாராகிய தன் தோழியார் தம் கொழுநருடன் கூடி இன்புறுதற்கு உதவி புரிதல் வேண்டும் என்று எண்ணி வந்தாற்போல இருள் வந்து எங்கும் பொலிந்தது. ஆண்மையிற் சிறந் தவராகிய பரகாலரை மலர்க்கணைக் கிழவன் வெல்லுதற்கு அவனுக்குத் துணையாகப் பெரும்படையொடு வந்த வேந்து என எண்ணரிய உடுக் கூட்டங்கள் தன்னைச் சூழத் தண்கதிர்ச் செல்வன் தோன்றினன். தென்றற்

காற்றுக் கருவேளின் கணைகளாகிய மலர்களின் நறு மணத் தாதுக்களை வாரிக்கொண்டு வந்து எங்கும் பரப்பிற்று.

அழகிய இள மாதர்களாற் பூமாலை சூட்டப்பெற்ற பொற்கொடிபோன்ற குமுதவல்லியாரும் கற்பக மன்னனைப் பரகாலரும் முதுநல மாதர்கள் வாழ்த்தக் கொழும்பொன் அறை புக்கனர். பரகாலர் கண்கள் குமுதவல்லியாருடைய கண்ணருளை நோக்கின. குமுத வல்லியாருடைய கடைக்கண்வாளி பரகாலருடைய மார்பிற் சென்று தைத்து, உள்ளத்திற் புக்குத் தங்கியது. இருவர் உயிரும் ஒருயிர் ஆயின. பரகாலர் குமுதவல்லியாரது மலர்மாலையிற் படிந்த வண்டை நோக்கி, "அணி மலர் நறுந்தேன் ஆர்இசை அளியே, நீ கண்ட மலர் களுள் இச்செல்வியின் கண்மலர் போலச் சிறிது மலர்ந்த வுடன் கண்டார் உள்ளத்தைக் கொள்ளை கொண்டு, உயிரையும் உருகச் செய்யும் தன்மை வாய்ந்த மலரைக் கண்டது உண்டோ? நீ பொது நின்று கூறுக" என்றார். குமுதவல்லியார் புன்முறுவல் பூத்து, முகத்தைக் கோட்டிப், பரகாலரைத் தம்முடைய கடைக்கண்ணாற் சினத்துடன் நோக்கினர். பரகாலர், "கடல் பெறாத அமுதே, கனியே, தேனே, ஆருயிர் மருந்தே, அணிகிளர் பாவாய், உன் சினத்திற்குக் காரணமாக என்னால் நேர்ந்த பிழை யாதோ? அதனை அருளுக" என்றார்.

அருங்கலைச் செல்வரே, தாங்கள் வண்டினை நோக்கி, "நீ கண்ட மலர்களுள் இத்தன்மையன உண்டோ?" என்று வினவியதனால், தாங்கள் கண்ட மலர்களும் உள என்பதும், அம்மலர்களுள், அத்தன்மை வாய்ந்தன உள என்பதும் பெறப்படுகின்றனவே. அன்பமை மனத்தீர், தாங்கள் என்னை மணத்தற்கு

முன் வேறு மாதரை மணந்தது இல்லையோ? கூறியருளுவீர்," என்றனர். பரகாலர், "அரும்பெறன் மணியே, உன் முகமதியைக் காணுதற்குமுன் என் மனத்துக் காதற் கடல் வேறு எதனையும் கண்டு பொங்கி எழுந்தது இன்று," என்றார். குமுதவல்லியார், "மெய்ம்மொழிச் செல்வரே, நீங்கள் என்னை மணத்தற்குமுன் கலை மங்கையையும், வீர நங்கையையும் வெற்றி மாதையும் மணந்தமையை யாவரும் அறிவரே," என்றனர். பரகாலர், புன்முறுவல் புரிந்து, "என் ஆருயிர்ப் பாவாய், [1] அவர்களுள், கலை மங்கையும், வீர நங்கையும், இனி நீ உரைத்த தொண்டுகளைப் புரிவதில் ஈடுபட்டிருப்பர். வெற்றிமாது, இனிச் சிறந்த முறையைக் கைக்கொண்டு உயர்நிலை அளிப்பள்" என்றனர். இங்ஙனம் அவர்களுக்கு அவ்விராப்பொழுது ஓர் இமைப்பொழுதாகக் கழிந்துவிட்டது. அவர்கள் "ஆ! என்னே, இவ்விராப்பொழுது இன்னும் சிறிது நேரமேனும் இராப்பொழுதாய் இவ்வளவு விரைவிற் கழிந்துவிட்டதே" என்று எண்ணினார்கள்.

கதிரவன் குணதிசை வரையின் சிகரம் வந்தணைந்தனன். காலையம் பொழுதாயினமையின் மாமலர்களினின்று நறை பெருகி ஒழுகியது. வென்றி வீரனாகிய செங்கோல் மன்னனைக் கண்டவுடன் கொடுஞ் செயலாளர்களின் பெருங்குழு அகன்று ஒழிதல்போலச் செங்கதிர்ச் செல்வனைக் கண்டவுடன் கன இருள் நீங்கி

---

1. இதன் கருத்து-இனி என் கல்வியும் அறிவும் வீரமும் எம்பெருமான் அடியவர்களை ஆராதிப்பதிலேயே செல்லும் என்பதும், உலக நலங்களிற் செல்லும் மனத்தை இனி எம்பெருமான் அருளைப் பெறும் நெறியிற் செலுத்தி வீடடைதலே எனது வெற்றியாகும் என்பதும் ஆகும்.

விட்டது. பறவைகள் எழுந்து ஒலிக்கலாயின. வலியன் என்னும் பறவைகள் ஒன்றோடொன்று கலந்து 'கீச்சுக் கீச்சு' என எழுத்துத் தெரியாத மொழியிற் பேசுவன வாயின. எருமைகளும் ஆநிரைகளும் அவிழ்த்து விடப்பட்டு மேய்தற்பொருட்டுப் பரந்து சென்றன. ஆயர்மாதர்கள் அச்சுத்தாலியும் முளைத்தாலியும் 'கலகல' என்று ஒலிக்கத் தயிர்கடையும் ஓசை எங்கும் பரவிற்று. செங்கற்பொடிக் கூறையையும் வெண்பல்லையும் உடைய துறவிகள் தங்கள் திருக்கோயிலில் சங்கிடுதற்குச் செல்வாராயினர். "மாந்தர்களே, நெற்கதிராகிய பயனைத் தருகின்றன என்பதனைக் கருதி நெற்பயிர்களைப் பேணிக் காத்து, எங்கள் இனத்தை அவமதிக்கின்றீர்கள். நாங்கள் அவற்றினும் சிறந்த முத்துக்களைத் தரும் ஆற்றல் உடையேம் என்பதனை எங்களை நோக்கிக் காண்மின்" என்பன போலப் புற்கள் முத்தன்ன பனித்திவலைகளை முடியிற் கொண்டு பொலிந்தன. யாவரும் காலைக்கடன்களை முடித்துக்கொண்டு, தங்கள் தங்கள் வேலைகளைச் செய்யத் தொடங்கினர்.

இங்ஙனம் பரகாலர் சில நாட்கள் வைத்தியர் மனையிலே தங்கியிருந்து, பிறகு தம்மிடம் செல்லுதற்கு வைத்தியரை விடை கேட்டனர். வைத்தியர் பரகாலரை நோக்கி, "வெல்போர்ச் செல்வரே, தங்கள் அன்பினுக்கு உரியாளாகிய என் அரும்பெறற் செல்வி தங்களுக்கு ஒரு செய்கடமையைக் கூறியதே யன்றி இரண்டாம் முறையும், மற்றொரு செய்கடமையைக் கூறிய போதும் நான் அதற்கு உடன்பட்டதற்குக் காரணம் உண்டு. அதனைக் கேளுங்கள்" என்று கூறிக், குமுதவல்லியாரது பிறப்பின் வரலாற்றைக் கூறினர். பரகாலர் வைத்தியரை நோக்கி, "அறிஞரே, இஃது எம்பெருமான் என்னை ஆட்

கொள்ளப் புரிந்த செயலேயாகும். உங்கள் அருமைச் செல்வி உயர்வற உயர்நலம்உடையனுன நம்பெருமானது அருளின் வடிவமானவளே. யான் தங்கள் அன்பினுற் பெறுதற்கு அரிய பெரும்பேற்றைப் பெற்றேன். தங்கள் அன்பு வாழ்க" என்றனர். வைத்தியர் பல வகை வரிசைகளை வழங்கினர். பரகாலர் அவரிடம் விடை பெற்றுக்கொண்டு குமுதவல்லியாரோடு தமது நகருக்குச் செல்லப் புறப்பட்டனர்.

## பரகாலர் தம்முடைய நகரை அடைதல்

பரகாலரது வருகையை அவருடைய அமைச்சர்களுக்குச் சில தூதர்கள் சென்று தெரிவித்தார்கள். அந்த அமைச்சர்கள், அதனைத் திருமங்கை நகரத்து மாந்தர்களுக்கு வள்ளுவர்களைக் கொண்டு பறை சாற்றுவித்துத் தெரிவித்தார்கள். அந்நகர மக்களின் மனங்களாகிய தாமரைகளில் மகிழ்வென்னும் நறை பெருகி நிறைந்து ததும்பியது. அவர்கள், அந்நகரை விண்ணுட்டவரும் கண்டு வெள்கும்படி அலங்கரித்தார்கள். அஃது, அந்நகரமாகிய நங்கை, 'பரகாலர் இப்பொழுது மணந்து கொண்ட குமுதவல்லியின்பாற் கொள்ளும் அன்பினும் மிக்க அன்பை நம்மிடம் கொள்ளும்படி செய்தல் வேண்டும்' என்று எண்ணித் தன்னைப் பலவகையினுலும் ஒப்பனை செய்து கொண்டது போன்றது. பரகாலர் நகரின் அருகில் வர, அதனை அறிந்த அந்நகர மாந்தர்கள் பேராரவாரம் செய்தார்கள். மணமுரசங்கள் பல ஒலித்தன. அவ்வோசையினுல் கடல் வெள்கி வாயடங்கிற்று. பரகாலர் குமுதவல்லியாருடன் நகரினுட் புக்கனர். அவ்விருவரையும் கண்ட அந்நகர மக்களுடைய மலர்க் கண்கள் மலர்ந்து பொலிந்து விளங்கின. அஃது, அடிய

வர்களுக்கு அருந்தேனைய் இனிப்பவனாகிய திருமாமகள் நாதன் தன் காலாயிரம், கை ஆயிரம், முடி ஆயிரம் அந் நகரிற் பரப்பியிருந்து, தன் அடியவராகிய பரகாலரது திருமணக் கோலத்தை மலர்க்கண்கள் ஆயிரங்களாற் கண்டு மகிழ்தல் போன்று இருந்தது. பரகாலர் குமுத வல்லியாருடன் தம் அரண்மனையை அடைந்தனர். பல இன்இயங்கள் முழங்கின. முதியவர்கள் வாழ்த்தினார்கள். பொற்கொடி மாதர்கள் பூமழை சொரிந்து களித்தார்கள். நகரமும் நாடும் களித்தன. சோழநாட் டிறைவன், பரகாலரது திருமணச் செய்தியைக் கேட்டுப் பல பரிசுகளை வாழ்த்துரை அமைந்த திருமுகத்துடன் அனுப்பினன். "தம்முடைய பல வகை முயற்சிகளால் இந்நாட்டில் இன்மையை இன்மையாக்கிய எம்மிறைவராகிய பரகாலர், வானிலே தோன்றும் உடுக்கணங்களின் தொகையினும் பல்லாண்டுகள் இன்பமுற வாழ்க" என அந்நாட்டினர் அனைவரும் வாழ்த்தினர். அன்பென்னும் சுவையோடு இடப்பட்ட அறுசுவை அடிசிலை அனைவரும் உண்டு களித்தனர்.

## சோழநாட்டு இறைவன் பரகாலருடன் பொருது தோற்றல்

பிறகு பரகாலர், குமுதவல்லியார்பால் தாம் கூறியபடி திருமால் அடியார்களை ஆராதிக்கக் கருதி, அவ்வாறே ஒவ்வொருநாளும் ஆயிரம் பாகவதர்களுக்கு அன்புடன் அறுசுவையோடு கூடிய போனகம் இட்டு, அவர்களை ஆராதித்து வருவாராயினர். அதன்பொருட்டுத் தம்முடைய நாட்டினின்று தமக்குக் கிடைக்கும் குடியிறையாகிய பொருள்களையும் செலவிடலானார். சோழநாட்டு இறைவனுக்குத் தாம் செலுத்துதற்குரிய திறைப் பொருளைச் செலுத்துதலைக் கைவிட்டனர். கவ்வப்

போது அவ்வேந்தர் வேந்தனைச் சென்று காணுதலையும் ஒழித்தனர். பரகாலர் செயலைக் கண்டறிந்த ஒற்றர்கள் சோழநாட்டு இறைவனுக்குக் கூறினார்கள். அவ்வரசர் பிரான், சினம் கொண்டு, [1] கரணக்கிளைஞர்களை வருவித்து "வெற்றிவாள் வீரராகிய பரகாலர் நமக்குச் செலுத்த வேண்டிய அரசிறையின் தொகையைக் கூறுமின்" என்றனன். அவர்களும் கணக்கினை நன்கு ஆய்ந்து, பரகாலர் செலுத்தவேண்டிய தொகையைக் கூறினார்கள். அம்மன்னர் மன்னன் சில வீரர்களை வருவித்து, "வாள் வலிச் செல்வர்களே! பரகாலர் நம்முடைய திறத்து மிக்க பரிவுடையவராய்ப் பல பகைவர்களை வென்று, நம்முடைய புகழ் எங்கும் ஓங்கும்படி செய்த அரிய செயல்களை எண்ணி, நாம் அவரை ஆலிநாட்டிற்கு அரசராக்கி, அவருக்குப் பல வரிசைகளையும் செய்தோம். அவர் அவற்றை மறந்துவிட்டனர் போலும். அவர் வந்து நம்மைக் காணுதலை விட்டதோடு நமக்குச் செலுத்தவேண்டிய அரசிறையைச் செலுத்துதலும் தவிர்ந்தனர். நீங்கள் சென்று அப்பொருளைக் கேளுங்கள். மறுத்தாராயின், அவரைப் பிணித்து இங்குக் கொண்டுவம்மின்" என்று கூறித் தன் புலிப்பொறி அமைந்த ஆவணச்சிட்டையும் தந்தனன். அவ் வீரவேற் செல்வர்கள் அரசனை வணங்கி, அவன்பால் விடைபெற்றுக் கொண்டு, திருமங்கை நகரை

---

1. கரணக்கிளைஞர்—கணக்கர். இவர்கள் கரணத்தியலவர் என்றும் கூறப்படுவர்கள்; அரசருக்கு உரிய ஐம்பெருங்குழு, எண்பேராயம் என்னும் குழுவினருள் எண்பேராயத்தைச் சேர்ந்தவர்கள். ஐம்பெருங்குழுவினராவார்—அமைச்சர், புரோகிதர், படைத்தலைவர், தூதுவர், ஒற்றர் என்னு மிவர். எண்பேராயத்தினராவார்—கரணத்தியலவர், கரும விதிகள், கனகச் சுற்றம், கடைகாப்பாளர், நகரமாந்தர், படைத்தலைவர், யானை வீரர், இவுளி மறவர் என்னு மிவர்

அடைந்து, அவரைக் கண்டு, 'திண்டோள் வீரரே, நீர் நம்முடைய அரசருக்குச் செலுத்தவேண்டிய அரசிறையைப் பெற்றுவரும்படி, அரசர் எங்களை அனுப்பினர். இஃது அரசர் தங்கள்பால் தரும்படி தந்த ஆவணச்சீட்டு,' என்று கூறி, அதனைப் பரகாலரிடத்திற் கொடுத்தார்கள். பரகாலர் அதனைப் பெற்று நோக்கினர். அதில் "நற்புலச் செல்வமும் அருந்திறல் வீரமும் அமைந்த பரகாலரே, நீர் நமக்குச் செலுத்துதற்குரிய இறைப்பொருளைக் காலத்திற் செலுத்தாமல் தவிர்ந்ததற்குக் காரணம் என்? நீர் உலகியல் அறியாதீரோ? இதுவோ நுமது செய்தக்க செய்யும் திறன்? நம்மால் அனுப்பப்படும் இவர்களிடம் எமக்கு நீர் செலுத்தவேண்டிய வரிப்பொருளை மறுமொழி கூறாது செலுத்திவிடக்கடவீர்" என்று எழுதி அரசனுடைய இலச்சினை இடப்பட்டிருந்தது. பரகாலர் அதனைக் கண்டு, யாது செய்வது எனத் தோன்றாமல், மனம் தளர்ந்து, பிறகு சிறிது தெளிந்து, வந்த வீரர்களை உபசரித்து, அவர்களுக்குத் தக்க இருப்பிடம் அளித்து, அவர்களிடம் 'நாளைக்குத் தருகின்றோம், நாளைக்குத் தருகின்றோம்' என எண்டபு சொற்களைச் சொல்லிவந்தனர். அரசனுடைய ஏவலர்களாகிய அவ்வீரர்கள் சில நாட்கள் வரையினும் பொறுத்திருந்து, பிறகு சினம் கொண்டு, பரகாலரை நோக்கி, "நீ வீரனே? நீ குறித்த காலத்தில் அரசிறையைச் செலுத்தத் தவறியதே அன்றி, அரசரால் அனுப்பப்பட்ட நாங்கள் வந்து கேட்டும் உடனே அப்பொருளைத் தராமல் பல தவணைகள் கூறி, எங்களை ஏமாற்றுகின்றாய். நீ உயர் குண முடையை என எண்ணினேம். நீ மிக்க புன்மையன் என்பதனை இப்போது அறிந்தோம். உடனே இறைப்பொருளைச் செலுத்தாயாயின், நாயைப் பிணிப்பதுபோல இருப்புச் சங்கிலிகளால் உன்னைப்

பிணித்துக் கொண்டுபோய் அரசர் முன்னிலையில் விடுவோம்" என்று கூறினார்கள். பரகாலர் அக்கடுமொழிகளைக் கேட்டவுடன் கனலென உள்ளம் கொதித்து, எரி எனக் கண் சிவந்து, அவ்வீரர்களை நோக்கிப், "புல்லிய பேதைகளே, நீங்களோ என்னைப் பிணித்துக்கொண்டு செல்ல வல்லீர்கள். உங்களால் இயலுமாயின் அவ்வாறே செய்ம்மின்" என்று கூறி, எழுவனைய தம்முடைய திண்ணெடுங் கைகளால் அவர்களைத் தாக்கினர். அம் மறவர்கள் அதனால் வலி குன்றி, மனம் சோர்ந்து, அவரைத் திரும்பிப் பார்க்கவும் அஞ்சினவர்களாய்க், கண்டார் "இவர்களுடைய காலின் விரைவு காற்றின் விரைவினும் மிகச் சிறந்தது" என்று கூறும்படி ஓடினார்கள். அங்ஙனம் ஓடிய அவர்கள் அரசன் முன்னிலையினை அடைந்து, "வாழ்க வேந்தர் வேந்தரே, எங்கள் கழற் காலின் வேகமானது எங்கள் உயிரைக் காத்தது. அப்பா, அப்பரகாலன் மிகக் கொடியவன். நீங்கள் எங்கள்பாற் கொடுத்து அனுப்பிய ஆவண ஓலையைப் பரகாலனிடம் கொடுத்து, அரசிறையை உடனே கொடுத்துவிடுதல் வேண்டும் என வற்புறுத்தினோம். உடனே அவன் முன்பின் ஆராயாமல் எங்களை மோதினான். ஆகா! அவன் திண்டோள் வன்மையே வன்மை. எங்களுக்கு உயிர் உடலினுள் இருக்கின்றதோ? வெளியிற் சென்று விட்டதோ? என்னும் ஐயம் உண்டாய்விட்டது. உயிரின் ஆசையால் எங்கள் மனம் தூண்ட, எங்கள் கால்கள் விரைவு கொள்ளலாயின" என்று கூறினார்கள். அம்மன்னர் மன்னனுக்குப் பொறுத்தற்கரிய சினம் பொங்கி எழுந்தது. அக்கோமான், அம்மறவர்களை நோக்கி, "வீரர்களே, உயிர் பிழைத்து வந்தது உங்கள் உடல் வன்மையை உணர்த்துகின்றது. உங்கள் சொற்

கள் நீங்கள் அடைந்த அரிய துன்பத்தினை நன்கு தெரிவிக்கின்றன. நீங்கள் உங்களிடத்திற்குச் செல்லுங்கள்" என்று கூறி, அவர்களை அனுப்பிவிட்டுப் படைத்தலைவர்களை அழைத்துவரும் வண்ணம் ஏவலாளர்களை அனுப்பினன். அவர்கள் சென்று கூற, படைத்தலைவர்கள் அரசன்பால் வந்து, வணக்கம் புரிந்து, "வாழ்க வேந்தர் வேந்தரே, நீங்கள் எங்களுக்கு இப்போது இடக் கருதிய கட்டளையை அறிய விரும்புகின்றோம். அதனைப் பணித்தருள்க" என்றார்கள். அரசன், நிகழ்ந்தவற்றை அவர்களுக்குக் கூறி, "நீங்கள் நால்வகைப் படைகளுடன் சென்று, அப்பரகாலனைப் பிணித்துக்கொண்டு வந்து என்முன் விடுங்கள்," என்றான். அப்படைத் தலைவர்கள் அக்கொற்றவனிடம் விடை பெற்றுக்கொண்டு புறப்பட்டார்கள். தம்மேற் கொடிகளைத் தாங்கிய யானைப்படைகள் இறகுகளைக் கொண்ட பல மலைகள் கால்கள் பெற்றுச் செல்வன போல முன் சென்றன. வில்லைப் பற்றிய வீரர்களைக் கொண்டனவும் நல்லியற் பரிகள் பூட்டப்பெற்றனவுமாகிய தேர்ப்படைகள், தம்முடியின்மீது அரியேறுகள் வீறுடன் தங்கியிருக்கப்பெற்ற பொன் வரைகள் உருளைகளைப் பெற்றுச் செல்லுதல் போல அவற்றின்பின் சென்றன. அப்படைகள் ஆகிய கடல்கள் வீசும் அலைகளை ஒப்பக் குதிரைப்படைகள் அணி அணியாக அவற்றுடன் போயின. சூலம், வேல், இருப்புமுள், தோட்டி, பிண்டி, வாலம், மழு, தண்டு முதலிய ஆயுதங்களை ஏந்திய காலாள் வீரர்கள் யுகமுடிவில் உலகத்து உயிர்களை ஒருமிக்க முடிக்க எழுந்த நமனுடைய தூதர்களைப் போலக் கடலும் மேகமும் அஞ்சி வாய் அடங்கும்படி ஆரவாரித்துக்கொண்டு சென்றார்கள்.

அப்படைகள் செல்லும் திறத்தைக் கண்டு பாண்டிய நாடு முதலிய பிற நாட்டு ஒற்றர்கள் மனம் கவன்று, "இப் படைகள் எந்நாட்டின்மீது செல்கின்றன என்பதை நாம் முன்னாக நாடி, அறிந்து, நம்முடைய வேந்தர்களுக்கு உணர்த்துதல் வேண்டும்" என்று எண்ணி அப்படைகள் செல்லும் நெறியை ஆராய்வராயினர்.

அப்படைகள் சென்று, தீவைச் சூழும் கடல் எனத் திருமங்கை நகரைச் சூழ்ந்துகொண்டன. கடலின் ஒலி எனச் சங்குகள் ஒலித்தன. வீர முரசங்கள் இடியேற்றின் முழக்கத்தை எதிர்ப்பனபோல முழங்கின. விற்களின் நாண்களால் உண்டாகும் ஓசைகள் எட்டுத் திசைகளையும் சூழ்ந்து, அவற்றைப் பிளந்து பதினாறு திசைகளாகச் செய்வனபோலப் பேரொலி செய்தன. வீரர்களின் முழக்கங்கள் ஆண்மையிற் சிறந்த களிறுகள் பல ஒருங்கு கூடி முழங்கும் முழக்கங்கள் போன்றன. இங்ஙனம் சோழநாட் டிறைவன் படைகள் வரும் என்பதனை முன்னாகவே உணர்ந்திருந்தவராகிய பரகாலர் தம்முடைய **கடமாகளியானை** என்னும் களிற்றின்மீது இவர்ந்து, தம் படை வீரர்களுடன் மதிலின் புறத்தே வந்து, அப்படையினுட் புகுந்து, திருப்பாற் கடலைக் கலக்கிய மந்தர மலை என அப்படையைக் கலக்கினர். யானைகளின் துதிக்கைகள் அறுப்புண்டன; அவற்றின் கோடுகள் ஒடிந்தன. அவற்றின் மத்தகங்கள் பிளப் புண்டன; அவை குன்றுகள் போன்று குப்புறக் கவிழ்ந்து புவியிற் புரண்டன; குதிரைப்படைகள் அழிந்தன; காலாள் வீரர்களிற் பலர் விண்ணவர்களின் விருந்தினர் ஆயினர். இவ்வாறு [1] தூசிப்படை அழிந்தது; உயிர் எஞ்சின படைவீரர் ஓடலாயினர்.

---

1. தூசிப்படை - முன்னணிப் படை.

“ வீசி வாளினைப் பனைக்கரம் துமித்துயர்,வேழத்
தாசின் மத்தகம் பிளந்துகிம் புரிமருப் பறுத்து
வாசி யின்கணம் துமித்துமன் னரையெலா மடித்துத்
தூசி யின்படை யினைப்பர காலனும் தொலைத்தான்.

—(அரிசமய தீபம், பரகாலச் சருக்கம், செ. 35)

(இ - ள்.) வாளை வீசி, யானைகளின் பனை போன்ற துதிக்கைகளைத் துண்டித்து, குற்றம் அற்ற உயர்ந்த அந்த யானைகளின் மத்தகங்களைப் பிளந்து, கிம்புரி என்னும் அணி பூண்ட தந்தங்களை அறுத்து, குதிரைக் கூட்டங்களை அழித்து, (துணையாக வந்த) சிற்றரசர்களை மடித்து, இவ்வாறாக முன்னணிப் படையைப் பரகாலர் அழித்தனர் எ-று.

கிம்புரி யானைக் கொம்பில் அணியும் ஒருவகைப் பூண்.

அங்ஙனம் ஓடுகின்ற படை வீரர்களைப் படைத் தலைவர்கள் தடுத்து நிறுத்தி, மற்றும் உள்ள யானைப் படை, குதிரைப்படை முதலிய படைகளோடும் கருடனை நோக்கி வரும் நாகங்களைப்போல வந்து, பரகாலனை நோக்கி, வீரனே, “நீ மற்றை நாட்டுப் படைத்தலைவர்களை யும் மன்னர்களையும் வென்றமையைக் கருதி, மனச் செருக்கு உற்று, உன்னைப்போலச் சோழ நாட்டுப் படைத் தலைவர்களாகிய எங்களையும் அவமதித்தனை போலும். எங்கள் போர் வன்மையை நீ அறிதற்கு உரிய சமயம் இதுகாறும் உனக்கு வாய்த்திலது. இப்பொழுது எங்கள் போர் வன்மையை நீ நன்கு உணர்வாய். பிடியானையினால் களிற்றி யானையை அகப்படுத்துவதுபோல, எங்கள் போர் வன்மையினால் உன்னை அகப்படுத்தித், திறமுடைய பாகன் மதயானையை

இருப்புச் சங்கிலிகளாற் பிணித்துக்கொண்டு போவது போலப் பிணித்துக்கொண்டு போய் நம் வேந்தர் வேந்தர் முன் விடுவேம். அதனைக் காணுதி.'' என்று கூறினார்கள். பரகாலர், "வீரர்களே, 'யார்க்கும் சொல்லுதல் எளிய; சொல்லிய வண்ணம் செயல் அரிய ஆம்' என்னும் பொன் மொழியை நீங்கள் அறியீர்கள் போலும்.'' அங்ஙனம் செய்ய வல்லீர்களாயின், செய்ம்மின். நீ என்று கூறி, அப்படையினுட் புகுந்து யானைகளின்மீதும், குதிரைகளின்மீதும் இவர்ந்து வந்த வீரர்களையும், காலாள் வீரர்களையும் சுழற்காற்றுச் சுழன்று வீசிக் காட்டில் உள்ள மரங்களை அழிப்பதுபோல அழிக்கலானார். அப்படை வீரர்களிற் சிலர் கூவிக்கொண்டு ஓடினர். சிலர் பரகாலருடைய திருவடிகளைத் தங்கள் முடிக்கு அணியாகக் கொண்டனர். சிலர் தங்கள் மனவலி பரகாலருடைய மோதுதலாற் புரட்டப்பட்டு ஏங்கினர். சிலர் பிணக்குவியலிடைப் புகுந்து மறைந்தனர். சிலர் பருக்கைக் கற்களை உடைய மேட்டு நிலத்துச் சென்று பதுங்கிக்கொண்டனர். சிலர் பரகாலரது வீரப்புகழைக் கூறிக் குரல் வேறுபட்டனர்; சிலர் குருதியுள் மூழ்கினர்.

"அரற்றி ஓடினர் சிலர்சிலர் அடிமுடி அணிந்தார்
பிரற்றி யேங்கினர் சிலர்சிலர் பிணத்தினுட் கரந்தார்
பரற்றி டற்பதம் படிந்தனர் சிலர்புகழ் படித்தே
குரற்றி ரிந்தனர் சிலர்சிலர் குருதியுட் குளித்தார்"

—(அரிசமய தீபம், பரகாலச் சருக்கம் செ. 38).

பிரற்றி - வாயில் வந்தன சொல்லி, கரந்தார் - மறைந்தனர், பரல்திடல் பதம் - பருக்கைக் கற்களை உடைய மேட்டு நிலம், குருதி - இரத்தம்.

பரகாலருடைய மோதுதலாற் படைத் தலைவர்கள் உடல் சோர்ந்து மனவாட்டம் உற்றனர்; ஆயினும், வாட்டம் அற்ற ஓட்டத்தினராய்ச் சென்று, சோழ நாட்டு இறைவனது முன்னிலையை அடைந்து, நாணத்தினால் தலைவணங்கி நின்றார்கள். அங்ஙனம் நின்ற படைத் தலைவர்களை அம்மன்னர் மன்னன் நோக்கிப், புன்னகை, புரிந்து, "வீரர்களே, நீங்கள் பரகாலனால் உயிர் நீங்காமல் பிழைத்து வந்தமை, உங்கள் உடல் வன்மையை நன்கு விளக்குகின்றது. உங்கள் தலை வணக்கம் பரகாலனது வெற்றியை இனிது உணர்த்துகின்றது. பாண்டியனுடைய படைக்கடலுக்கு மந்தரமலையாகிச், சேரனுடைய படைக் காட்டிற்கு வெந்தீயாய் விளங்கிய உங்கள் வீரம், பரகாலனுக்குமுன் சூரியன்முன் ஆன பனியாய் ஒழிந்தமையை எண்ண என் மனம் மிகவும் வருந்துகின்றது. இது நன்று நன்று." என்று கூறிக் கோபத்தினால் வெப்பமாகப் பெருமூச்சு விட்டான். அம்மன்னன் கண்கள் கொழுங் கனல் எனச் சிவந்தன. அவ்வேந்தனுடைய புருவவில் நெற்றியின்மேற் சென்றது. அம்மன்னர் மன்னன், படைத்தலைவர்களை நோக்கி, "நம்முடைய படைகளைக் கூட்டுங்கள்; மண்ணுலகில் எப்பாலவரும் அஞ்சுதற்குரிய எனது விற்போர் வன்மையைச் சிறிதும் பரகாலன் மதித்திலன் போலும். நன்று நன்று. அவனது நெஞ்சுரம்! நான் சென்று, அப்பரகாலன் வலியைத் தொலைத்து, அவனைச் சங்கிலிகளாற் பிணித்துக்கொண்டு வந்து, கோளரியைக் கூட்டில் அடைப்பதுபோலச் சிறையில் அடைத்தபின்னரே நான் செய்தற்குரிய மற்றைக் கடமைகளைச் செய்வேன்." என்று, பகைவர்மீது வெகுண்டு எழும் உருத்திரமூர்த்தியே என்று எவரும் எண்ணும்படி கனன்று கூறினன்.

படைத் தலைவர்கள் படைகளை விரைவில் திரட்டி விட்டனர்; முரசுகள் இடியென முழங்கின; சங்குகள் ஒலித்தன; வீரர்கள் ஆர்ப்புச், சேனையைப் புலவர்கள் கடல் எனக் கூறுதல் உண்மை என யாவரும் எண்ணச் செய்தது. அச்சேனையின் பெருந்திரளைக் கண்ட அந்நகர மாந்தர்களிற் சிலர், "இவ்விறைவர் பேரரசர்களோடு பொருதற்குச் சென்ற காலங்களிலும் இவ்வளவு பெரிய படையுடன் சென்றவரல்லரே! தம் படைத் தலைவர்களுள் ஒருவராகிய பரகாலரோடு பொருதற்காகவோ இப்பெரும் படைக்கடலைத் திரட்டிக்கொண்டு செல்கின்றனர்!" என்றனர். சிலர், "விண்ணவர் கோனே தன் பெரும்படையுடன் வந்து எதிர்ப்பினும் பரகாலருக்கு வெந்நிட்டு ஓடி விடுவன் என்பதிற் சிறிதும் ஐயம் இன்று. நம்மிறைவர் அவர் திறத்தினை உணர்ந்தே அவருடன் பொர இப்பெரும்படையைத் திரட்டிக் கொண்டு செல்கின்றனர்." என்றனர். சேனை புறப்பட்டது; வீரர்களுடைய ஆயுதங்களின் ஒளி சூரியனுடைய கதிர்களின் ஒளியை மழுங்கச் செய்தது; யானைப்படைகளும், தேர்ப்படைகளும், குதிரைப்படைகளும் காலாட் படைகளும் செல்வதனால் உண்டான தூளிகள் வானிற் சென்று பரவி, வானினும் மற்றோர் மண்ணுலகைத் தோற்றுவித்தன. அவ்வேந்தர் வேந்தன், இராவணனுடைய மைந்தர்களுள் ஒருவனாகிய அட்சகுமாரன் பெரும்படையுடன் அநுமாரோடு பொருதற்குச் சென்றாற்போல அப்பெரும்படைத்திரளோடு பரகாலருடன் பொரச் சென்றனன். சேனைகள் திருமங்கை நகரைச் சூரியனைச் சூழ்ந்த ஊர்கோள் எனச் சூழ்ந்தது. ஒற்றர்களால் அரசன் வரவை உணர்ந்த பரகாலர் தமது 'ஆடன்மா' என்னும் குதிரைமீது இவர்ந்து, தம்முடைய

அமைச்சர்களுடனும், படைகளுடனும் சென்று, அவ்வேந்தர் வேந்தனுடைய சேனையினுட் பாய்ந்து, ஊழியின் இறுதியில் தோன்றிக் கடலைக் கலக்கும் பெருங்காற்றென அப்படைக்கடலைக் கலக்கலாயினர். அப்படையினின்று பல்லாயிர வீரர்கள் அஞ்சி ஓடினார்கள். "இங்கு ஓடும் வீரர்களின் தொகை, பரகாலரால் வான் அடைந்த வீரர்களின் தொகையை எண்ணி உறையிடற்கு உரியனவேயாம்." என்று கண்டோர் கூறலாயினர். பரகாலருடைய போர்த்திறம், என்றும் அச்சம் புக்கறியாத அவ்வேந்தர்பிரான் மனத்தினும் இனிது புக்குத் தங்கும்படி செய்தது. வெவ்விய காற்றினால் வாடிய தாமரை மலர்போல அக்கோமானது முகத்தாமரை, தன் மானத்தைக் கவர்ந்து கொண்ட வருத்தத்தினால் வாடியது. பரகாலர் அவ்வேந்தன் முகவாட்டத்தினைக் கண்டு, அவர் எதிரிற் றமது பரியைச் செலுத்தி நிறுத்தினர். அவ்விறைவன் பரகாலரைக் கண்டவுடன் கொடுஞ்சினம் அவன் மனத்தைக் கவர்ந்து எழுந்தது. அவன் கனல் எனக் கண்கள் சிவக்கப், பரகாலரை நோக்கி, "இருந்தமிழ் நூற் புலவனே ![1] உன் கடமையைச் செய்யாமல் விட்டதேயன்றி, உனக்குப் பல நலங்களைப் புரிந்த என்னை எதிர்த்துப் பொருதல்தான் உன் கல்வி அறிவுக்கு அழகு போலும். நன்று நன்று ! உன் நன்றி உடைமை." என்று கூறினான். அச்சொற்கள் பரகாலர் நெஞ்சிற் கூரிய அம்பு எனச் சென்று, தைத்து, அவரை வருத்தியது. பரகாலர் வேந்தனை நோக்கி, "வேந்தர் வேந்தரே, நீர்முன் அனுப்பிய தூதர்களால் நிகழ்ந்ததையும், பின் என்பால் நீர் செய்தற்குரியதையும் ஆராயாமல் என்மேல் போருக்கு வந்தீர் ; என்னோடு பொர வந்தாரை வணங்குதல் என்

1. பெரிய திருமொழி, முதற்பத்து, 7-ம் திருமொழி பா. 10.

இயல்பு அன்று; ஆகலின், உம்மை எதிர்த்துப் பொரு தேன். இனி உம்முடன் போர் புரியேன். இனி நீர் செய்வன செய்வீர்." என்று கூறித், தம் கைப்படைகளை எறிந்துவிட்டுப் பரியினின்றும் இறங்கித் தரையில் நின்றனர். பரகாலருடைய மொழிகள், அவ்வேந்தன் மனத்தைக் கவர்ந்துகொண்டு, அதன்கண் எழுந்த சினத்தை முற்றும் ஒழித்துவிட்டன. அக்கோமான் பரகாலரை நோக்கி, "அரும்புல வீரரே, அரவானது தன் மாணிக்கத்தை இழக்கத் துணியாது. அதுபோல உம்மை இழக்க என் மனம் சிறிதும் துணியாது. ஆதலின், உமது உயிருக்கு இடையூறு ஒன்றும் புரியேன். ஆயினும், நீர் எனக்குச் செலுத்தவேண்டிய இறைப் பொருளைப் பெறுதொழிதல் அரசர்தம் முறைமைக்கு ஏற்றது அன்று. ஆதலின், அதனை நீர் செலுத்தும் அளவும் உம்மைச் சிறைப்படுத்துகின்றேன்." என்று உரைத்துப், பின் தன் அமைச்சனை நோக்கி, "அமைச்சர்களே, இவ்வீரரை, எமக்குச் செலுத்துதற்கு உரிய இறைப்பொருளைச் செலுத்தும் வரையினும் சிறையி லிடுமின்." என்று கூறிவிட்டு, எஞ்சிய படைகளுடன் தன் நகருக்குச் செல்லப் புறப்பட்டனன். அவ்வமைச்சர், பரகாலரைச் சிறைக்கோட்டத்திற்கு அழைத்துச் சென்று சிறையில் வைத்தனர்.

பரகாலர், திருமகள்நாதனை மனத்துட்கொண்டு, "எம்பெருமானே, நீ [1] 'உடன்மிசை உயிரெனக் கரந் தெங்கும் பரந்திருப்பவன்.' நீ என் மனத்தை விட்டக லாய்; நான் எங்கிருப்பினும் நீ அங்கிருத்தி. ஆதலின், உன்னை நான் போற்றுதலில் எனக்கு இடையூறு சிறிதும்

1. திருவாய்மொழி, முதல் திருமொழி, பா. 7.

இன்று. எம்பெருமானே, நின்னையே நினைந்து நின்பால் மால்கொண்ட சிந்தையராய், மெய்சிலிர்த்து, ஆடிப் பாடிப் பொன்னிப் பேர் ஆறுபோல் வரும் கண்ணீரை உடையவர்களாய், 'அரங்கவோ!' என்று அழைப்ப வர்களாகிய மெய்ந்நின்ற ஞானத்தினராம் அடியவர்களை ஆராதித்தற்கு இயலாத நிலைமை எனக்கு உண்டாயிருத் தலையே எண்ணி, என்மனம் ஆற்றாத துயர்க்கடலில் ஆழ்வதாயிற்று. அத்துயரை நீக்கிக்கொள்ள யான் செய்தற்கு உரியது யாது உளது. என்னுயிர் நாதனே, இத்துயர் நீங்கும் அளவும் யான் உணவு கொள்ளேன்." என்று கூறி, மூன்றுநாள் வரையினும் உணவு கொள்ளு தல் இன்றி இருந்தனர். அணிமாடங்கள் மலிந்த பெரிய தெருக்களை உடைய அத்திகிரி என்னும் திருக்கச்சிப் பதியின்கண் எழுந்தருளியுள்ள பேரருளாளன், மூன்றும் நாள் இரவு பரகாலரது கனவில் தோன்றி, "என் அன் பினுக்கு உறைவிடமாகிய அன்பனே, வருந்தற்க. நீ சோழ நாட்டிறைவனுக்குச் செலுத்தவேண்டிய இறைப் பொருளைத் தருகின்றேன். கச்சிப்பதிக்கு வருக." என்று அருளினன். அப்பரமன்றன் அவ்வருண்மொழி யைக் கேட்டு, அவரது மனத்துயர் நீங்கியது போல இரவு நீங்கியது. அமைச்சர் அவரிடம் இறைப்பொருள் கேட்க வந்தார். அவர் அவ்வமைச்சரை நோக்கி, "அறிஞரே, திருக்கச்சிப்பதியின்கண் மணிபொன் முதலிய சில பொருள்கள் சேமித்து வைக்கப்பட்டிருக்கின்றன. தாம் அங்கு வரின், இறைப் பொருளைத் தந்துவிடுகிறேன்." என்று கூறினர். அவ்வமைச்சர் அரசபிரானிடம் சென்று, அதனை உரைக்க, அவ்வேந்தர் வேந்தன், "அமைச்சரே, அச்சொல்லின் உண்மையையும் பார்ப் போம். நீர் தக்க காவலுடன் அவரைக் கச்சிப்

பதிக்கு அழைத்துச் செல்லுவீராக.'' என்று கூறினன். அமைச்சர் அவ்வாறே பரகாலர்பால் வந்து, அவரைத் தக்க காவலுடன் திருக்கச்சிக்கு அழைத்துச் சென்றனர். பரகாலர் அப்பதியிற் சில இடங்களைச் சோதித்துப் பார்த்தனர். பொருள் கிடைத்திலது. அதனால், அவர் மிகவும் மனம் சோர்ந்து கிடந்தனர். அவருக்கு அச்சோர்வினால் துயில் உண்டாயிற்று. அவர் கனவில் பேரருளாளன் தோன்றி, "என் அருமைச் செல்வனே, துயரற்க. அழகு மிக்க வேகவதி யாற்றின் கரையிலே நாம் குறித்த பொருட்குவியல் இருக்கின்றது.'' என்று கூறி, அப்பொருள் உள்ள இடத்தையும் குறிப்பிட்டு உரைத்தருளினன். பரகாலர் அமைச்சருடன் அப் பரமன் குறித்த இடத்திற்குச் சென்று சோதித்து, அப்பொருட்குவியலைக் கண்டு எடுத்து, அதினின்றும் அரசிறையை அமைச்சரிடம் செலுத்தினர். அமைச்சர் அப்பொருளை ஏவலாட்கள் எடுத்துக்கொண்டு வரப் பரகாலருடன் உறையூரை அடைந்து, அவரைச் சிறைக் கோட்டத்தின் புறத்தே நிறுத்திவிட்டு, அரசனிடம் சென்று, "வாழி, அரசர்க்கரசரே, பரகாலர், தங்களுக்குச் செலுத்துதற்கு உரிய அரசிறை முழுதையும் செலுத்திவிட்டனர். இதோ அப்பொருள்.'' என ஏவலாட்கள் கொண்டுவந்த அப்பொருளை அரசனுக்குக் காட்டிப், பின்னர்ப் பரகாலருக்கு அப்பொருள் கிடைத்த வகையையும் கூறினர். அரசன் அமைச்சர் கூறிய வற்றைக் கேட்டு, உளம் நடுங்கி, "ஆ! பரகாலர் திருமகள் நாதன் மெய்யடியார் ஆவர். அவர் உலகப் பற்றினை முற்றும் துறந்திட்ட மெய்ஞ்ஞானச் செல்வர். நான் அவரது தன்மையை உணராமல் அவரைப் பலவகையாலும் வருந்தும்படி செய்துவிட்டேன். இப்பெரும்

பாவத்தைப் போக்கிக்கொள்ளுதற்கு உரிய வழி அவர் அருளைப் பெறுதலே யாகும். அமைச்சரே, நீரே சென்று அவரை இங்கு விரைவில் அழைத்து வருவீராக.'' என்று கூறினன்.

அமைச்சர் சென்று பரகாலரை வணங்கினார். பரகாலர், அவ்வமைச்சரை நோக்கி, "அறிஞரே நீர் என்னை வணங்குதலாகுமோ?'' என்றார். அமைச்சர் "மெய்ஞ் ஞானச் செல்வரே, நீங்கள் தேவர்களும் வணங்கத் தக்க மேன்மையினை உடையீர்கள் எனின், யான் வணங் குவது அருமை உடையதோ? நம்முடைய அரசர் உங்கள் வரவை எதிர்நோக்கிக் கொண்டிருக்கின்றனர். நீங்கள் வந்தருளுதல் வேண்டும்.'' என்றனர். பரகாலர், "இஃதும் எம்பெருமானுடைய அடியவர்களின் திரு வருளே.'' என்று உளத்துட் கொண்டு அவ்வமைச்ச ருடன் அவ்வேந்தர் வேந்தர்பாற் சென்றனர். அம் மன்னர் மன்னன், "கங்கையிற் புனிதமான காவிரி நடுவு பாட்டு ஆயிரவாய் அரவணையின்கண் அறிதுயில் அமர்ந் தருளும் இறைவன் திருவருளை இனிது பெற்ற பெரியீரே, உங்கள் மாண்பினை உணராமல் நான் பல இன்னல்களை உங்களுக்குப் புரிந்துவிட்டேன். நீங்கள் அவற்றைப் பொறுத்தருளி, இப்பொருள்களை ஏற்றுக்கொண்டு, என்கண் இன்னருள் புரிதல்வேண்டும்.'' என்று கூறிப் பரகாலர், அரசிறையாக அளித்த பொருளையும் மற்றும் பல பொருள்களையும் அவருக்கு வழங்கினன். பரகாலர், அரசனை நோக்கி, "மன்னர் மன்னரே நீங்கள் முன்னும் என்பால் பேரன்பு பூண்டு, என்னை ஆலிநாட்டிற்கு அரசனுக்கி, ஒப்பரிய சிறப்புக்களைச் செய்தீர்கள். என் மனம் உலகப் பற்றினின்று நீங்கித் திருமாமகள் நாதன் அடியவர்களை ஆராதிப்பதிற் சென்றுவிட்டமையின்,

உங்களுக்கு யான் செலுத்துதற்குரிய அரசிறையைச் செலுத்துதலினின்று தவிர்ந்தேன். இங்ஙனம் நான் புரிந்த பல குற்றங்களையும் மறந்து, இப்பொழுதும் என்கண் பேரருள் புரிந்தீர். உம்முடைய அன்பும், அருளும், கொற்றமும், புகழும் நீடு வாழ்வனவாக.! எம்பெருமான் திருவருளும், அவன் திருமார்பில் 'அகலகில்லேன் இறையும்' என்று உறையும் உலக அன்னையின் திருவருளும் உம்மிடம நிலைத்து நிற்பனவாக.!'' என்று அம்மன்னர் பிரானை வாழ்த்தினர். அவ்வேந்தர் வேந்தன் இனிது மகிழ்ந்து, பரகாலருடன் கச்சிக்குச் சென்ற சில காவலர்களை விளித்துப் பரகாலருடைய வருகையை முன்னுக அவருடைய தேவியாருக்கும், அமைச்சர் முதலியவர்கட்கும் அறிவிக்கும்படி திருமங்கை நகருக்கு அனுப்பினன். பிறகு தான் பரகாலருக்கு வழங்கின பொருள்களை ஓர் தேரில் ஏற்றிப் பரகாலரை அதில் வீற்றிருக்கச் செய்து, ஒரு வேலினையும் அவர் கையிற் றந்து, சில வீரர்களை அவருடன் திருமங்கை நகருக்குச் செல்லும்படி பணித்தனன். பரகாலர் அம்மன்னர் மன்னன்பால் விடைபெற்றுத் திருமங்கை நகரை நோக்கிப் புறப்பட்டார். அவ்விறைவர் பிரான் சிறிது தூரம் பரகாலரைத் தொடர்ந்து பின் சென்று, பிறகு அவர்பால் விடை கொண்டு மீண்டனன்.

சோழநாட்டிறைவனுடைய அமைச்சர் திருமங்கை நகரினின்று பரகாலரைச் சிறைப்படுததிச் சென்றதனை எண்ணி அவருடைய அமைச்சர்களும் மற்றையோரும் அவருடைய கட்டளையின்றி, யாதும் செய்தற்கு இயலாதவர்களாய்த் துயரக்கடலில் மூழ்கி யிருந்தார்கள். அவருடைய ஆருயிரனையவராகிய குமுதவல்லியார், தம் துன்பக்கடலின் எல்லை காணுதவராய் வருந்தலாயினர்.

அவருடைய அன்புள்ள தோழியர்கள் அவர் அருகில் வந்து, "அருங்குணச் செல்வியே, நீ இங்ஙனம் வருந்துதல் உன் அறிவுடைமைக்கு ஏற்றது அன்று. உன் கொழுநர் அணிகிளர் அருவியார் திருவேங்கடத்தப்பன் திருவருளால் விரைவின் மீண்டு வருவர். பத்துடை அடியவர்கட்கு எளியவனாகிய அப்பெருமான் அன்பருட் சிறந்த உன்னுடைய நாயகரின் இடுக்கணைக் கண்டும் வாளா இருப்பனோ? அப்பெருமான் யானையரசு 'ஆதிமூலமே' என்று அழைத்த சொல் முடிதற்கு முன் சென்று, அதற்கு முதலையினால் உற்ற இடுக்கணைக் களைந்து, அதனைக் காத்தருளிய பேரருளாளன் அல்லனோ? நீ வருந்துதல் ஒழிக." என்று கூறினார்கள். குமுதவல்லியார் அத்தோழியர்களை நோக்கி, "என் அன்பிற்கு உரியீர், யான் வருந்துவது என்பொருட்டாக அன்று. என் அன்பரை நான் மணத்தற்குமுன் அவர்பால் 'நாள் தோறும் திருமகள்நாதர் அடியார்கள் ஆயிரம்பேரை ஆராதிக்க உடன்படுவீராயின் உம்மை நான் மணந்து கொள்வேன்' என்று கூறினேன். அவர் அதற்கு உடன்பட்டு உறுதிமொழிகூறி, என்னை மணந்துகொண்டு, அவ்வாறே அப்பேரருளாளன் அடியார்களை ஆராதிக்கத் தொடங்கினர். பிறகு அவருடைய மனம் முழுதும் அப்பரமனுடைய அடியவர்களை ஆராதிப்பதிலேயே படிந்து விட்டது. ஆதலின், அவர் இப்போது பல நாட்களாக அன்பருக்கு எளியனாகிய அப்பெருமான்றன் அடியார்களை ஆராதித்தற்கு இயலாமற் போனதை எண்ணி, அவர்மனம் எவ்வாறு வருந்துகின்றதோ? என எண்ணியே என்மனம் துன்பக்கடலில் மூழ்குவதாயிற்று. என்மனம் அத்துன்பக்கடலினின்று கரை சாருதற்கு உரிய வழியைக் காணமல் என்வருத்தம் தணிதல் எவ்

வாறு கூடும்?" என்று கண்ணீர் பெருகிக்கொண்டிருந்தனர்.

அப்போது சோழநாட்டிறைவனால் அனுப்பப்பட்ட காவலர்கள் சென்று, பரகாலர் சிறையினின்று மீண்டு வரும் செய்தியை அவருடைய அரண்மனையின் வாயிற் காவலர்களுக்குத் தெரிவித்தார்கள். வாயிற் காவலர்கள் விரைந்து சென்று, குமுதவல்லியாருக்கும் அமைச்சர் முதலியவர்களுக்கும் தெரிவித்தார்கள். அச்செய்தியைக் கேட்டவுடன் குமுதவல்லியார் மனமும் அமைச்சர் முதலியவர்களின் மனமும் தண்முகில் பெயலாற் குளிர்ந்து தழைத்த பயிர்களைப் போலக் குளிர்ந்து தழைத்தன. பரகாலர் விரைந்து வந்து, தம் அரண்மனையை அடைந்து, குமுதவல்லியார்பால் சென்றனர். பரகாலரைக் கண்டவுடன் குமுதவல்லியார் தம் திருமுகம் சூரியனைக் கண்ட செந்தாமரைமலர் என மலர்ந்து பொலிந்தது. பரகாலர், பேரருளாளன் திருவருளால் திருக்கச்சியிற் பொருட்குவியலைக் கண்டு எடுத்து அரசிறையைச் செலுத்தியதையும், பிறகு சோழநாட்டிறைவன் செய்தனவற்றையும் கூறி, "அன்புடையாய், வென்றியேவேண்டி, வீழ்பொருட்கு இரங்கித் திரிந்து, உழன்ற யான், உன் அன்பைப் பெற்றமையால் நம் பெருமானுடைய ஆராத காதல் அடியவர்களை ஆராதிக்கும் பேறலரும் பேற்றினைப் பெற்று, உய்ந்தேன். உன் அன்பு என்பால் நீடு மன்னி வாழ்வதாக." என்று உரைத்தனர் குமுதவல்லியார், "என் ஆருயிர்க்கு உயிராகிய இறைவரே, முன்னே கபிலமுனிவர் எனக்குச் சாபங் கொடுத்தபோது 'இச்சாபத்தினின்று தப்பும் விதம் யாது?' என என்மனம் மிகவும் நடுங்கியது. அவர் என்னைச் சபித்திலர். எனக்கு உயர்வு ஒப்பு இல்லாத இனிய அருளே

புரிந்தனர். இன்றேல் யான் தங்கள் அன்பினுக்கு உரியளாம் இப்பெறலரும் பெரும்பேற்றைப் பெற்றிருப்பேனோ? தங்கள் அன்பினுக்கு உரியளாய் இருக்கும் இப்பேற்றினை விட்டு அந்தமில் வீட்டின் இன்பம் பெறுவதாயினும் வேண்டேன்'' என்றனர். பரகாலர் குமுதவல்லியாரைத் தழுவிக்கொண்டு அவருக்கு முத்தங்கள் அளித்து, "அன்புடையாய், நம்பெருமான் அடியார்களை ஆராதித்தற்கு உரியவற்றை யான் சென்று செய்தல் வேண்டும்.'' என்று உரைத்துக், குமுதவல்லியாரிடம் விடைபெற்றுக்கொண்டு, அமைச்சர்பாற் சென்றனர். அங்கிருந்த அமைச்சர் முதலியோர் தண்மதியைக் கண்ட கடல்போல மகிழ்ந்து ஆரவாரித்தனர். பரகாலர் அமைச்சர் முதலியவர்களை நோக்கித், திருக்கச்சியில் எழுந்தருளியிருக்கும் அருட்பெருந்தேவியின் நாதன் திருவருளால் தாம் கச்சியில் பொருட் குவியலைக் கண்டு எடுத்து, அரசிறையைச் செலுத்தியதையும் சோழநாட்டிறைவன் தமக்குச் செய்த நலங்களையும் கூறினர். அமைச்சர்களுள், ஒருவர், "வாழ்க எம் இறைவரே,

"மாறாய தானவனை வள்ளுகிரால் மார்பிரண்டு
கூறாகக் கீறிய கோளரியை—வேறாக
ஏத்தி யிருப்பாரை வெல்லுமே மற்றவரைச்
சாத்தி யிருப்பார் தவம்''

(நான்முகன் திருவந்தாதி, பா. 18.)

என்று பெரியார் அருளிய பொருண்மொழி பொய்க்குமோ?

"பெருகு மதவேழம் மாப்பிடிக்கு முன்னின்
றிருக் கணிளமூங்கில் வாங்கி—அருகிருந்த
தேன் கலந்து நீட்டும் திருவேங்கடம்.''

(இரண்டாம் திருவந்தாதி, பா. 75.)

என்னும் மாண்பார் திருமயிலையின்கண் எழுந்தருளியுள்ள அப்பனை மனத்துட்கொண்டு புரிந்த அருந்தவத்தினராகிய உங்களை இந்திரன் முதலிய தேவர்களும் வணங்கி நலம் புரிவார்கள் எனின், சோழநாட்டிறைவர் உங்களுக்கு நலம் புரிந்தது ஒரு வியப்பிற்று ஆகுமோ?" என்றனர். பரகாலர் "அறிஞர்களே, சோழ நாட்டிறைவர் எனக்குப் பல நலங்களைப் புரிந்ததற்குக் காரணம் என் தவம் அன்று;

"உளதென் றிருமாவா ருண்டில்லை என்று
தளர்த லதனருகும் சாரார் — அளவரிய
வேதத்தான் வேங்கடத்தான் விண்ணோர் முடிதோயும்
பாதத்தான் பாதம் பயின்று."

(இரண்டாந் திருவந்தாதி, பா. 45.)

என்று பெரியார் அருளியபடி இலகும் ஞானச் செல்வர்களாகிய நம்பெருமான் அடியவர்களின் திருவருளே அதற்குக் காரணம் ஆகும். அறிஞர்களே, நம்பெருமான் அடியவர்களை ஆராதிக்கும் பேறு இடையிற் பல நாட்கள் தவிர்ந்துவிட்டது நமக்குப் பெருங்குறைவாகும். நீங்கள் சென்று அவர்களை ஆராதித்தற்கு உரியவற்றை விரைவிற் செய்யுங்கள்" என்று கூறினர். அவர்களும் அதற்கு உரியவற்றை விரைவிற் செய்து முடித்தார்கள். பரகாலர், மீண்டும் அன்று முதல் இடையறவு இன்றித் திருமங்கை நாதன் அடியார்களை ஆராதிக்கலானார்.

## திருமங்கை மன்னர் திருமந்திரம் பெறுதல்

இங்ஙனம் அடியார்களை ஆராதிப்பதில் அவரிடம் இருந்த பொருள்கள் யாவும் செலவாய்விட்டன. அதனாற் பரகாலர் மனம் வருந்திப் பின் பல முறையாக ஆய்ந்து எண்ணி, 'இனி வழிபறி செய்து, அதனால் வரும் பொரு

ளைக் கொண்டே அடியார்களை ஆராதித்தல்வேண்டும். அதனை அன்றி வேறு வழி இன்று' என்று தமக்குள் முடிவு செய்து, பின் நீர்மேல் நடப்பான், நிழல் ஒதுங்குவான், தாளூதுவான், தோலாவழக்கன் என்னும் மதி நுட்பமும், வீரமும், ஆய்வன ஆய்ந்து வினை செய்யும் ஆற்றலும், அன்பும் உடையவர்களாகிய தன் அமைச்சர்கள் நால்வரையும் அழைத்து அவர்களிடம் தம் கருத்தினைக் கூறினர். அவர்கள்,

'பொருள்கருவி காலம் வினையிட னோடைந்தும்
இருடீர எண்ணிச் செயல்.'

(திருக்குறள், பொருட்பால், வினைசெயல் வகை செ. 5.)

என்றபடி செய்வனவற்றை நன்கு ஆய்ந்து செய்தல் வேண்டும்' எனத் தமக்குள் ஆய்ந்து, பிறகு பரகாலரை நோக்கி, "எம்மிறைவரே முன்னே நாம் திருமணங்கொல்லையில் உள்ள அரசமரத்தின் அடியில் பதுங்கியிருத்தல் வேண்டும். பின் ஒற்றர்களை அனுப்பி வழியில் வருவார்பால் உள்ள பொருள் அளவையும், அவர்கள் செல்லும் நெறி முதலியவற்றையும் ஆய்ந்து வந்து சொல்லும்படி செய்து, அவர்கள் நம்மிடம் வரும் சமயம் அறிந்து, வழிப்பறி செய்தலே தகுதியாம்." என்று கூறினார்கள். பரகாலர் அவர்கள் கூறியபடியே திருமணங்கொல்லையில் உள்ள அரசமரத்தின் அடியிற் பதுங்கியிருந்து வழிபறிசெய்து, அதனாற் பெறும் பொருள்களைக்கொண்டு அடியார்களை ஆராதிக்கலாயினர்.

யாருமோர் நிலைமையன் என அறிவரியவனும் தன் அடியார்களால் எளிதின் அறிதற்கு உரியவனும் ஆகிய பெருமான், பரகாலருக்கு அடியார்களை ஆராதிப்பதில் உள்ள அன்பின் பெருக்கினை எண்ணி, அவருக்குத் தனது எட்டெழுத்தால் ஆன மறையை உபதேசித்து, அவரை

ஆட்கொள்ளக் கருதி, உலகினுக்கு இன்னுயிராய் விளங்கும் காவேரியாற்றின் இடையில் அரவணையில் அறிதுயில் அமர்ந்திருக்கும் அவ்வழகிய மணவாளன் பார்ப்பன மணவாளக் கோலம் கொண்டனன். உலக அன்னையாகிய அணிமலர்ச் செல்வி மணவாளப் பெண்ணின் கோலம் கொண்டருளினள். அவர்கள், அப்பொழுது சூரியனையும் மங்கச் செய்யும் பல வகை யான ஆரங்களையும், தோளணி முதலிய கையணிகளையும், சூரியனும் சந்திரனும் தனித்தனி இவ்விரண்டு மாற்றுருவம் கொண்டு வந்து அவர்களுடைய காதுகளில் அமைந்தாற்போன்ற குழைகளையும், சுக்கிரன் முதலிய ஒளி மிக்க உடுக்கள் கண்டு "இவை நம்முடைய செருக்கு அடங்கும்படி நம்மினும் மிக்க ஒளி உடையனவாக நான்முகனாற் படைக்கப்பட்ட வேறு உடுக்கள் போலும்" என்று மயங்கி எண்ணும்படி அமைந்த ஒளியினைக் கொண்டு விளங்கும் மணிகள் பதித்த விரலாழிகளையும் அணிந்திருந்தார்கள். அவர்கள் அப்பொழுது அணிந்திருந்த அணிகள், 'தாம் இராமனாகவும் சீதாப் பிராட்டியாகவும் அவதரித்து மணம் புரிந்து கொண்ட காலத்து அணிந்துகொண்ட அணிகளினும் மேலான அணிகளை அணிந்துகொண்டு, தம் ஆராத காதல் அடியவருக்கு முன் செல்லக் கருதி, அணிந்துகொண்டார்கள் போலும்' என வானோர்கள் கண்டு கூறத் தக்கனவாய் விளங்கின.

> "சென்றால் குடையாம் இருந்தால்சிங் காதனமாம்
> நின்றால் மரவடியாம் நீள்கடலுள்—என்றும்
> புணையாம் மணிவிளக்காம் பூம்பட்டாம் புல்கும்
> அணையாம் திருமாற் கரவு."

(முதல் திருவந்தாதி, பா. 53.)

என்றபடி அப்பரமனை என்றும் நீங்காமல் நின்று தொண்டு

புரியும் ஆதிசேடன் அவர்கள் இவர்ந்து செல்லுதற்கு உரிய பல வகை மணிகளைக் கொண்ட பொற்சிவிகை ஆயினன். சில தேவர்கள் அச்சிவிகையைச் சுமந்து செல்வோர் ஆயினர். கருடன், சேனைத்தலைவர் முதலியவர்கள் உயர்வான பல வகை அணிகளை அணிந்து சூழ்ந்து வரும் உறவினர்கள் ஆனார்கள். மற்றுஞ் சில தேவர்கள் பரிவார மாந்தர்கள் ஆனார்கள். முத்தமிழும், நான்மறைகளும் மணமக்களை வாழ்த்தும் முதியவர்கள் ஆயின. பரகாலருடைய ஒற்றர்கள் மறைவின் இருந்து அவர்கள் எந்நெறியாகச் செல்கின்றார்கள் என்பதனைக் கூர்ந்து நோக்கிக்கொண்டு அவர்களைப் பின் தொடர்ந்தார்கள். அவர்கள், பரகாலர் பதுங்கிக்கொண்டிருக்கும் திருமணங் கொல்லை வழியாகச் செல்லும் நோக்கம் உடையவர்களாக இருத்தலை நன்கு உணர்ந்துகொண்டு, அவரிடம் விரைந்து சென்று, "வாழ்க எம்மிறைவரே, ஒரு மணமகனும், மணமகளும் தங்கள் உறவினரும் பிறரும் சூழ வருகின்றார்கள். அவர்கள் அணிந்துள்ள அணிகள் இவ்வுலகை முழுதையும் கொள்ளத் தக்க விலைமதிப்பை உடையன என்றே நாங்கள் கருதுகின்றோம். அவர்களைச் சூழ்ந்து வரும் அவர்களுடைய உறவினர்களும் பிறரும் மிகச் சிறந்த அணிகளை அணிந்துகொண்டிருக்கின்றார்கள். அவர்கள், இவ்வழியாகச் செல்லும் நோக்கம் கொண்டவர்களாய் வருகின்றார்கள். இன்னும் சிறிது நேரத்திற்குள் அவர்கள் தரித்துள்ள மாலைகளின் மணம், அவர்கள் வரவை முன்னாக வந்து தங்களுக்குத் தெரிவிக்கும். 'யானை வரும் பின்னே; மணியோசை வரும் முன்னே.' என்பது சிறந்ததாகிய பழமொழி யன்றோ? அவர்கள் அணிந்திருக்கும் அணிகளை நாம் பெற்றுக் கொள்வோமானால், பிறகு நாம் இவ்வாறு வழிபறி

செய்தல் வேண்டிடி இராது. அவற்றின் விலையாக நாம் பெறும் பொருளைக்கொண்டே இனி எந்நாளும் பல ஆயிரம் அடியார்களை ஆராதித்தல் கூடும் என்பதனை நாங்கள் உறுதியாக உரைக்கின்றோம்.'' என்று கூறினார்கள்.

பரகாலர் மகிழ்ச்சி மிக்கவராய் அவர்கள் வரவை எதிர் நோக்கி அவ்வரசின்கீழ் பதுங்கிக்கொண்டிருந்தனர். அங்கு வரும் மணமக்கள் முதலியவர்கள் சூடிக்கொண்டுள்ள மலர் மாலைகளின் நறுமணம், நல்லார் பால் நல்லார் சார்தல்போலப் பரகாலர்பாற் சென்று அவரை மகிழ்வித்தது. அவர் அம்மணம் வந்த வழியை மறைவில் இருந்து நோக்கினர். அவ் வழியில் வரும் அம்மணமக்கள் முதலியவர்கள் அணிந்திருக்கும் அணிகளில் அமைந்துள்ள மணிகளின் ஒளியின் திரட்சி, மற்றொரு சூரியன் அவ்வழியில் தோன்றியதுபோல அவருக்குத் தோன்றியது. பரகாலர் "சூரியன் உதயம் ஆவதற்குமுன் அருணன் உதயம் ஆவதுபோல இச்சூரிய உதயத்திற்குமுன் நறுமணம் ஆகிய அருணனது உதயம் நமக்குப் புலனாயிற்று. ஒற்றர்கள் கூறிய படியே இப்பொழுது வருவோரின் அணிகளை நாம் பெற்றுக்கொண்டால் இனி நாம் வழிப்பறி செய்தல் வேண்டியிராது'' என்று எண்ணிக்கொண்டிருந்தனர். அவர் அங்ஙனம் எண்ணிக்கொண்டிருக்கையில் மணமக்களோடு கூடிய அக்குழு அவ்வரசமரத்தின் அருகில் வந்துவிட்டது. உடனே பரகாலர், வில், வாள், வேல், தண்டு முதலிய படைகளைக் கொண்ட தம்முடைய அமைச்சர்களோடும், மற்றும் பல வீரர்களோடும் தாம் ஒளி மிக்க வாளினைக் கையினில் ஏந்தி, அக்குழுவினர்முன் சென்று, அக்குழுவினரை நோக்கி, "அன்புடையவர்களே, உங்கள் அணி

கள் முதலியவற்றை மாறு ஒன்றும் கூறாமல் கொடுத்து விடுதல்வேண்டும். இன்றேல் உங்கள் உயிர்கள் எங்கள் வாள் முதலிய படைகளுக்கு இரையாய்விடும்" என்று கூறினர். அக்குழுவின் தலைவனாகிய மணமகன் தன் அணிகளை எல்லாம் களைந்து கொடுத்துவிட்டு, மற்றவர்களுக்கும் அவர் அவர் அணிந்துள்ள அணிகளையும் களைந்து கொடுத்துவிடும்படி கூறினன். அவர்களும் அவ்வாறே தாங்கள் அணிந்துள்ள அணிகளை எல்லாம் களைந்து கொடுத்துவிட்டார்கள். பரகாலர், எல்லாரும் எல்லா அணிகளையும் களைந்து கொடுத்துவிட்டார்களா?' என்பதை அறிய அக்குழுவினுட் புகுந்து 'எல்லாரையும் தனித்தனி நோக்கலானார். மணமகன் ஒழிந்த மற்றவர்கள் எல்லா அணிகளையும் களைந்து கொடுத்துவிட்டிருத்தலை அறிந்தார். ஆனால், மணமகனது வலக்கையின் ஒரு விரலில் மட்டும் ஓர் மணி ஆழி யிருத்தலைக் கண்டு, "நீ இதனை ஏன் கழற்றித் தரவில்லை." என்று கேட்டார். மணமகன், "ஐய, இது கழற்ற இயலாததா யிருக்கின்றது." என்றான். பரகாலர், உடனே தம் பற்களாற் கடித்து அக்கைவிர லாழியைக் கழற்றினர். மணமகன், அதனைக் கண்டு,* "நம் கலியனோ?" என்றான். பரகாலர் மணமகளை

* அது முதற்பரகாலருக்குக் கலியன் என்றும் பெயரும் வழங்குவதாயிற்று. இப்பெயரைப் பரகாலர் தம்முடைய திருமொழிகளின் ஈற்றுப் பாசுரங்களாகிய நாந்திச் செய்யுட்களில் மிகுதியாகக் கூறியிருக்கின்றார். அந்நாந்திச் செய்யுட்களை நோக்கி அறிக. ஆனால் சில நாந்திச் செய்யுட்களில், 'கலிகன்றி' என்பதனையும் தம் பெயராகக் குறித்துள்ளார். அது இவர் தம்மை அடைந்தவர்களுக்கு வரையறை இன்றிப் பொருள் வழங்கி அவர்கள் கலியை (வறுமையை)ப் போக்கிய ஈகையினால் உண்டானது போலும். இவர் அத்தகைய ஈகையாளர் என்பதனைக் "காரார் புயற்கைக் கலிகன்றி" (3-ம் பத்து, 2-ம் திருமொழி, பா. 10.) எனவும், "ஆலிமன் அருண்மாரி" (4-ம் பத்து, 3-ம் திருமொழி, பா. 10.) எனவும், கற்றார் பரவு மங்கையர்கோன் காரார்

நன்கு நோக்கிவிட்டுப், பிறகு தம் பணியாளர்களை விளித்து, "இவ்வணிகளை ஒரு சுமையாகக் கட்டி எடுத்துக்கொள்ளுங்கள்." என்றனர்.

பணியாளர்கள் அவ்வணிகள் அனைத்தையும் சுமையாகக் கட்டி எடுக்கப் பார்க்க, அஃது அவர்களாற் பெயர்க்கவும் முடியாததாயிருந்தது. பிறகு சில வீரர்கள் சென்று அதனை எடுக்க, அவர்களாலும் அஃது எடுக்க முடியாததாயிற்று. பின்பு அமைச்சர்கள் அதனை எடுக்கப் பார்த்தனர். அவர்களாலும் அதனை எடுக்க முடியவில்லை. பின் பரகாலர் தாமே அதனை எடுக்க அவராலும் அஃது எடுக்க முடியாததாயிருந்தது. அதனாற் பரகாலர் சினங்கொண்டு, மணமகனை நோக்கி, மறையவனே, இதனை நாங்கள் எடுக்க முடியாத படி நீ ஏதோ மந்திரம் செய்துவிட்டனை. அம்மந்திரத்தை எனக்கு நீ கூறுவிடின் என் கைவாள் உன் உடலில் மூழ்கிவிடும்." என்றனர்: *மணமகன், "வீரனே, சினங்கொள்ளவேண்டா. அம்மந்திரத்தை உனக்குக் கூறுகின்றேன். அருகில் வருக." என்று கூறியருளினன். [1]பரகாலரும் மணமகன் அருகிற் செல்ல, அம்மணமகன் அவர் செவியில் மந்திரங்கள் எல்லாவற்றினும் சிறந்ததும், 'அடியார் படுதுயர்

---

புயற்கை கலிகன்றி' (5-ம் பத்து, முதல் திருமொழி, பா. 10.) எனவும், "காரார் புயல்தடக்கை கலியன" (6-ம் பத்து, 3-ம திருமொழி, பா. 10.) எனவும் இவர் அவ்வீற்றுப் பாசுரங்களிற் கூறியவற்றான் அறிக.

1. "சிஷ்ட பரிக்கிரகமாம்... உத்கிருஷ்டதமமாகச் சொல்லப்படுகிற மூலமந்திரமான பெரிய திருமந்திரத்தை நாராயணனைத் தனக்குத்தானே உபதேசித்துக் கொண்ட இழவு தீரக் கிழிச்சீரையோடே தனத்தைக் கொடுப்பாரைப்போலவே, 'பெற்றதாயினும் ஆயின செய்யும் நலந்தரு சொல்லை நான் கண்டுகொண்டேன்' என்று தம் வாயாரச் சொல்லும்படி ஆழ்வாருடைய வலத்திருசெவியிலே உபதேசித்தருளி" என்ற ஆறாயிரப் படி குருபரம் பாராப்ரபாவத் தொடரை ஈண்டு நோக்குக.

ஆயினவெல்லாம் நிலந்தரம் செய்வதும், அருளொடு பெருநிலம் அளிப்பதும், பெற்ற தாயினும் ஆயின செய் வதும் ஆகிய திருவெட்டெழுத்தினை உபதேசித்தருளி னன். *மணமகளாகிய திருமாமகளும் பரகாலருக்கு ஞானம் உண்டாகும்படி திருமலர்க் கண்களால் அவரை நோக்கி அருள்புரிந்தனள். பிறகு அவர்கள் அனைவரும் மறைந்துவிட்டார்கள். பரகாலருக்கு ஞானம் உண்டா யிற்று. "ஆ! என்னே வியப்பு? எம்பெருமானே, என்னை ஆட்கொள்ளக் கருதி, மணவாளக்கோலம் பூண்டு, குருவாகி வந்து, எனக்குத் தன் உயர்வொப்பில்லாத திருமந்திரத்தை உபதேசித்தருளினன். அப்பரஞ்சுடர் மூர்த்தியின் திருமார்பில் 'அகலகில்லேன் இறையும்' என்று அமர்ந்திருப்பவளும் எல்லா உயிர்களுக்கும் அன்னையும் ஆகிய பிராட்டியும் என்னைத் தாயின் இன்னருள் தோன்ற நோக்கி அருள் புரிந்தனள்." என்று கூறி, அவர்கள் பேரருளை எண்ணிப் புகழ்ந்து, மகிழ்ந்து ஆடினர். அவர் கண்களினின்று அருவி என நீர் பெரு கியது. தமது ஞானக்குறைவுகளையும், அவர்களுடைய யும், தாம் பெற்ற மந்திரத்தின் மேன்மையையும் எண்ணி எண்ணி மனங்கரைந்தனர். அம்மந்திரத்தினிடத்தும், அம்மந்திரத்தின் பொருளினிடத்தும் தமக்கு உண்டான உள்ளடங்காத பேரன்பினால்,

### எழுசீர்க்கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

1. வாடினேன் வாடி வருந்தினேன் மனத்தால்
   பெருந்துயர் இடும்பையிற் பிறந்து

---

* "அருள்மாரி" என்னும்படி பெரிய பிராட்டியார் அருளாலே உண்டான தக்கஞானக்கண்களாலே கண்டு, அநுபவித்து," என்ற ஆறாயிரப்படி குருபரம்பரா ப்ரபாவத் தொடர்மொழிகளை கண்டு நோக்குக.

கூடினேன் கூடி யிளையவர் தம்மோ
டவர்தரும் கலவியே கருதி
ஓடினேன் ஓடி உய்வதோர் பொருளால்
உணர்வெனும் பெரும்பதம் தெரிந்து
நாடினேன் நாடி நான் கண்டு கொண்டேன்
நாராயணா வென்னும் நாமம் (பா. 1)

(பெரிய திருமொழி, முதற்பத்து, முதல் திருமொழி.)

என்று தொடங்கிப் பத்துப் பாசுரங்களைப் பாடினர். அவற்றினின்று மற்றும் சில பாசுரங்களை அடியிற் காண்க.

2. "சேமமே வேண்டித் தீவினை பெருக்கித்
தெரிவைமார் உருவமே மருவி
ஊமனார் கண்ட கனவிலும் பழுதாய்
ஒழிந்தன கழிந்தஅந் நாள்கள்
காமனார் தாதை நம்முடை அடிகள்
தம்மடைந் தார்மனத் திருப்பார்
நாமம்நான் உய்ய நான்கண்டு கொண்டேன்
நாராய ணாவென்னும் நாமம். (பா 3.)

3. "குலந்தரும் செல்வம் தந்திடும் அடியார்
படுதுயர் ஆயின வெல்லாம்
நிலந்தரம் செய்யும் நீள்விசும் பருளும்
அருளொடு பெருநிலம் அளிக்கும்
வலந்தரும் மற்றும் தந்திடும் பெற்ற
தாயினும் ஆயின செய்யும்
நலந்தரும் சொல்லை நான்கண்டு கொண்டேன்
நாராய ணாவென்னும் நாமம். (பா. 9.)

4. "மஞ்சுலாம் சோலை வண்டறை மாநீர்
மங்கையார் வாட்கலி கன்றி
செஞ்சொலால் எடுத்த தெய்வநன் மாலை
இவை கொண்டு சிக்கெனத் தொண்டீர்

அஞ்சும்போ தலைமின் துயாவரின் நினைமின்
துயரிலீர் சொல்லினும் நன்றாம்
நஞ்சுதான் கண்டீர் நம்முடை வினைக்கு
நாராய ணாவென்னும் நாமம். (பா. 10)

## திருமங்கை மன்னர் பதிகள் தோறும் சென்று பரமனைப் பாடுதல்

பரகாலர் இங்ஙனம் பாடியவுடன் உலகத்துயிர்களுக் கெல்லாம் தந்தையாகிய இறைவன், உலகத்துயிர்கட் கெல்லாந் தாயாய் அருளோர் வடிவு கொண்டாற்போல் இலகும் திருமாமகள் தன்மார்பில் பொலிந்து விளங்க, மின்னற்கொடி தன்கண் ஒளி விட்டு விளங்கப்பெற்ற கார்முகில் பொன்மலைமீது இவர்ந்து விளங்கும் தோற்றம் போலக் கருடன்மீது இவர்ந்து, நான்முகன் முதலிய தேவர்கள் புடைசூழ்ந்துவரப், பரகாலருக்கு முன் வானின்கண் வந்தருளி, அவரை நோக்கி, "என் அன்பிற்கு உறைவிடமாகிய செல்வனே, உன்னுடைய சீரிய கூரிய தீஞ்சொல் தமிழ்ப் பாட்டுக்களைக் கேட்பதில் எனக்கு வேட்கை மிக்கது. உன் இன்பத்தமிழ்ப் பாட்டுக்களை நானும் உன் அன்னையாகிய திருமாமகளும் கேட்டு மகிழ்வெய்தவும், உலகத்து மக்கள் கற்று உய்யவும் திருப்பதிகளுக் கெல்லாம் நீ சென்று பாடுவாயாக." என்று கூறியருளி மறைந்தனன். பரகாலர் "எம்பெருமான் திருவருள் என்னே? 'வென்றியே வேண்டி வீழ்பொருட் கிரங்கி, நின்றவா நில்லா நெஞ்சினை' உடையவனாய்த்திரிந்த சிற்றறிவினன் ஆகிய என்னை ஆட்கொள்ளும் பொருட்டு உலக அன்னை யாகிய பெரிய பிராட்டியுடன் மணவாளக்கோலம் பூண்டு வந்து, எனக்கு அஞ்சினவன்போல் நடித்துத், தானும் பிராட்டியும் அணிந்திருந்த அணிகளை யெல்லாம்

கழற்றிக் கொடுத்ததே அன்றி, யசோதைப்பிராட்டி உரலிற் கட்டிச் சிறு கோல் கொண்டு அடிக்க, அவ்வடி பட்டு, அழுதிருந்து ஏங்கிய எளிமையினும் மிக்க எளிமை உடையவனாய்த், தன் கைவிரலாழியை யான் பல்லாற் கடித்து வாங்குதற்கு அஞ்சி, நடுங்கி, இணங்கி யிருப்பவன் போல் இருந்து, "நம் கலியனோ" என்று கூறியருளிய அவனுடைய அன்பின் தன்மை என் சொல்லிற் சொல்லி அடங்குவதாகுமோ? அன்றியும் மயர்வற மதிநலம் உடையவராகிய திருக்குருகூரின் செல்வர் திருவாய் மலர்ந்தருளியனவாகிய 'பாலேய் தமிழர் இசைகாரர் பத்தர் பரவும்' 'அமர் சுவை ஆயிரம்,' பாக்களை இனிது மடுத்த தன் திருச்செவிகளால் என் புன்றமிழ்ப் பாக்களையும் கேட்க விழைந்தனனே! என்னே வியப்பு!! இதற்கு அவனது பேரருள் காரணமாகுமே அன்றி, வேறு காரணம் இன்று" என்று கூறி, அன்பினால் தம்முடைய கண்களின் நீர் அருவி எனப் பெருகத் தம்மை மறந்து நின்று, பிறகு தெளிந்து, "எம்பெருமான் கட்டளையை யான் புரியக்கடவேன். அமைச்சர்களே, அன்புடைய வீரர்களே, நான் எம்பெருமான் எழுந்தருளியிருக்கும் பதிகளுக்குச் சென்று, அக்கார்முகில் வண்ணனைச் சேவித்துத் தமிழ்க்கவிகள் பாடிப் போற்றி வருகின்றேன். நீங்கள் இந்நாட்டு மக்களை இனிது காத்துக்கொண்டிருங்கள்." என்று கூறினர். அமைச்சர்கள், "எம்மிறைவரே, நாங்களும் உங்களுடன் வந்து, உங்களுக்குத் தொண்டு புரிய விரும்புகின்றோம். ஆதலின், தக்கார் பிறரை இந்நாட்டினைக் காத்தற்கு, தாங்கள் ஏற்படுத்தியருளுதல் வேண்டும்." என்று கூறினார்கள். அங்குப் பரகாலருடன் இருந்த மற்றை வீரர்களும் அவ்வாறே கூறினார்கள். பரகாலரும் அவர்கள் உறுதியாகிய விழைவை உணர்ந்து, அவர்கள்

கருத்துக்கு உடன்பட்டுத் தக்காரை அந்நாட்டினைக் காக்க ஏற்படுத்தி, அந்த அமைச்சர்கள் முதலியவர்களுடனும் [1] தம்முடைய மனைக்கிழாத்தியாராகிய குமுதவல்லியாருடனும் வடநாட்டை நோக்கிப் புறப்பட்டார். அமைச்சர்களும் மற்றை வீரர்களும் அடியார்களுக்கு உரிய கோலம் கொண்டவர்களாய், அதனோடு வீரர்களுக்கு உரிய படைகளையும் கொண்டு, 'ஸ்ரீ இராமன் காட்டிற்குச் செல்கையில் இலக்குமணன் அப்பெருமானுக்குத் தொண்டு செய்யத் தான் மட்டும் அப்பெருமானுடன் சென்றனன். அப்பெருமானுடைய அடியவராகிய இவருக்கும், இவருடைய மனைக் கிழத்தியாருக்கும் தொண்டு செய்ய நம்முடைய மனைவியருடன் செல்லக்கடவோம்' என்று கருதியோ? அன்றி, 'நாம் இவருடன் பல பதிகளுக்கும் சென்று இவர்களுக்குத் தொண்டு புரிதலாலும், அப்பதிகளில் எழுந்தருளியுள்ள பரஞ்சுடர் மூர்த்தியைச் சேவித்தலாலும் நாம் எய்தும் பயனை நம் மனைவியரும் எய்தும்படி செய்தல் வேண்டும்' என்று எண்ணியோ? யாதோ தத்தம் மனைவியருடன் சென்றார்கள்.

[2] ஆலிநாடர் வடநாட்டில் உள்ள பதிகளைச் சேவிக்கக் கருதிச் செல்கையில் அந்நெறியில் உள்ள கிருட்டினை, கோதாவரி என்னும் ஆறுகளில் நீராடிச் சென்றனர்.

---

1. "பின்பு திருமங்கையாழ்வாரும் பத்னீஸஹிதராய் மந்த்ரிகளோடே புறப்பட்டுப் பினாகிநீ, க்ருஷ்ணை, கோதாவரீ நதிகளிலே தீர்த்தமாடி, ஸ்ரீ பத்ராசலத்தையும், ஸிம்ஹாசலத்தையும், கூர்மநாதனையும், ஸ்ரீ புருஷோத்தமனையும் ஸேவித்து," என ஆறாயிரப்படி, குருபரம்பரா ப்ரபாவம் என்னும் நூலில் உள்ள தொடர்களை ஈண்டு நோக்குக.

2. பரகாலருக்கு ஆலிநாடர், திருமங்கை மன்னர், திருமங்கை ஆழ்வார், கலியன், கலிகன்றி என்னும் திருப்பெயர்கள் உண்டு. இவற்றை அவருடைய நாந்திச் செய்யுட்களை நோக்கிக் காண்க.

அங்ஙனம் அவர் செல்கையில் ஆங்காங்குப் பலர் அவரை யும் அவருடன் உள்ள மற்ற அடியார்களையும் எதிர் கொண்டுவந்து, பணிந்து, பல உபசாரங்களைப் புரிந்தனர். *திருமங்கை மன்னர் இவ்வாறு சென்று, பரதகண்டம் என்று கூறப்படும் இவ்விந்து தேயத்தின் வட எல்லையாக விளங்குவதும், ஆசியாக் கண்டத்தில் உள்ள மற்றை நாடு களின்று இவ்விந்து தேயத்தைத் தனியாகப் பிரிக்க எண்ணி நான்முகனால் அமைக்கப்பட்ட ஒப்பரிய மதிற் சுவர்போல் விளங்குவதும், உலகில் மற்றை எல்லா வரை களினும் உயர்வானதும், வான் அளாவிய எண்ணரிய குவடுகளோடு கூடியதும் ஆகிய இமயமலையை அணுகி, அவ்வரைக்கண் உள்ள 'திருப்பிரிதி' என்னும் பதியை அடைந்தனர்.

அப்பதியில் உள்ளவர்கள் அவரையும் அவர் குழு வினரையும் எதிர்கொண்டுவந்து, அடிவணங்கிப், பலவகை உபசாரங்களைச் செய்து, அக்கோயிலுக்கு அவர்களை அழைத்துச் சென்றார்கள். பரகாலர், அப்பதியில் எழுந் தருளி உள்ள இறைவனைக் கண் குளிரச் சேவித்து, உளங் கொண்டு போற்றிக், கண்ணீர் மல்க ஆடி ஆடி, அகங் கரைந்து, அப்பெருமானது பேரருளைப் பல முறையும் எண்ணியதனால் தம் மனத்துக்கண் எழுந்த அன்பின் பெருக்கு மனத்துள் அடங்காது எழுதலால்,

**அறுசீர்க்கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்**

"வாலி மாவலத் தொருவன
　　துடல்கெட வரிசிலை வளைவித்தன்
றேல நாறுதண் டடம்பொழில்
　　இடம்பெற இருந்தநல் இமயத்துள்
ஆலி மாமுகில் அதிர்தர
　　அருவரை அகடுற முகடேறிப்

பீலி மாமயில் நடஞ்செய்யும்
தடஞ்சுனைப் பிரிதிசென் றடைநெஞ்சே"

என்று தொடங்கிப் பத்துப் பாசுரங்களைப் பாடினர். அப்பதிகத்தின் ஈற்றுப் பாசுரத்தை அடியிற் காண்க.

[1]"கரிய மாமுகில் படலங்கள்
கிடந்தவை முழங்கிடக் களிறென்று
பெரிய மாசுணம் வரையெனப்
பெயர்தரு பிரிதியெம் பெருமானை
வரிகொள் வண்டறை பைம்பொழில்
மங்கையர் கலியன் தொலிமாலை
அரிய இன்னிசை பாடுநல்
லடியவர்க் கருவினை அடையாவே"

(பெரிய திருமொழி, முதல் பத்து 2-ம் திருமொழி.)

திருமங்கை மன்னருடைய பாடல்களுள், பெரும் பான்மையன அவர் எந்தப் பதியைப் பற்றிப் பாடுகின்றாரோ அந்தப் பதி, குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், குறிஞ்சியேனும் முல்லையேனும் திரிந்தாகிய பாலை என்னும் நிலங்களுள் இந்நிலத்தைச் சேர்ந்தது என்பதை நன்கு விளக்குவனவாயிருக்கின்றன. இப்பதிகத்திலேயே அத்திறத்தினை,

"ஆலி மாமுகில் அதிர்தர
அருவரை யகடுற முகடேறிப்
பீலி மாமயில் நடஞ்செய்யும்
தடஞ்சுனைப் பிரிதிசென் றடைநெஞ்சே." (பா. 1)

எனவும்,

---

1. இங்ஙனம் திருமங்கை மன்னர் முதலிய பெரியார்கள் பதிகங்களின் ஈற்றிற்பாடும் செய்யுட்கள் 'பயன் கூறுவன' எனவும், 'சாத்துப்பாட்டு' எனவும் கூறப்படும். பொதுவின் இங்ஙனம் நூல் ஆசிரியர் பெயர் முதலியன அமைய நூலின் ஈற்றில் அந்நூல் ஆசிரியராலேயே பாடப்படும் செய்யுட்கள் நாந்திச் செய்யுட்கள் எனப்படும்.

"விலங்கல் போல்வன விறலிரும்
　　சினத்தன வேழங்கள்து யர்கூரப்
பிலங்கொள் வாளெயிற் றரியவை
　　திரிதரு பிரிதிசென் றடைநெஞ்சே." (பா. 2)

எனவும்,

"கடிகொள் வேங்கையின் நறுமலர்
　　அமளியின் மணியறை மிசைவேழம்
படியி னேடுவண் டிசைசொலத்
　　துயில்கொளும் பிரிதிசென் றடைநெஞ்சே."
(பா. 3)

எனவும்,

"இறங்கி ஏனங்கள் வளைமருப்
　　பிடந்திடக் கிடந்தரு கெரிவீசும்
பிறங்கு மாமணி அருவியொ
　　டிழிதரு பிரிதிசென் றடைநெஞ்சே" (பா. 4)

எனவும்,

வரைசெய் மாக்களி றிளவெதிர்
　　வளர்முளை அளைமிகு தேன்தோய்த்துப்
பிரச வாரிதன் னிளம்பிடிக்
　　கருள்செயும் பிரிதிசென் றடைநெஞ்சே." (பா. 5)

எனவும் வருவனவற்றால் அறிக.

பிறகு திருமங்கை மன்னர் வதரிக்குச் சென்று இரண்டு திருமொழிகள் பாடினர். அவற்றுள், ஒவ்வொன்றினின்றும் முதற் பாசுரத்தையும் ஈற்றுப் பாசுரத்தையும் அடியிற் காண்க.

அறுசீர்க்கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

முற்ற மூத்துக் கோல்துணையா
　　முன்னடி நோக்கிவளைந்து
இற்ற கால்போல் தள்ளி மெள்ள
　　இருந்தங்கி ளையாமுன்

பெற்ற தாய்போல் வந்த பேய்ச்சி
பெருமுலை யூடுயிரை
வற்ற வாங்கி யுண்ட வாயான்
வதரிவ ணங்குதுமே.

வண்டு தண்டேன் உண்டு வாழும்
வதரிநெ டுமாலை
கண்டல் வேலி மங்கை வேந்தன்
கலியனொ லிமாலை
கொண்டு தொண்டர் பாடி யாடக்
கூடிடில் நீள்விசும்பில்
அண்ட மல்லால் மற்ற வர்க்கோர்
ஆட்சிய றியோமே.

(முதற் பத்து, 3-ம் திருமொழி. பா. 1, 10.)

## எழுசீர்க்கழி நெடிலடி ஆசிரிய விருத்தம்

ஏனமு னாகி யிருநில மிடந்தன்
றிணையடி யிமையவர் வணங்கத்
தானவ னாகந் தரணியிற் புரளத்
தடஞ்சிலை குனித்தவென் றலைவன்
தேனமர் சோலைக் கற்பகம் பயந்த
தெய்வநன் னறுமலர் கொணர்ந்து
வானவர் வணங்கும் கங்கையின் கரைமேல்
வதரியாச் சிராமத்துள் ளானே.

வருந்திரை மணிநீர்க் கங்கையின் கரைமேல்
வதரியாச் சிராமத்துள் ளானைக்
கருங்கடல் முந்நீர் வண்ணனை எண்ணிக்
கலியன்வா யொலிசெய்த பனுவல்
வரஞ்செய்த ஐந்தும் ஐந்தும்வல் லார்கள்
வானவ ருலகுடன் மருவி
இருங்கட லுலகை யாண்டுவெண் குடைக்கீழ்
இமையவ ராகுவர் தாமே.

(ஷை பத்து, 4-ம் திருமொழி, பா. 1, 10.)

வதரியைப் பற்றிய இரண்டு திருமொழிகளுள், முதல் திருமொழியில் முதுமைப் பருவத்தைப் பற்றிக் கூறியிருப்பன நோக்குந்தோறும் இன்பம் பயப்பனவா யிருக்கின்றன. அவற்றுள், முன் காட்டியதையன்றி மற்றொன்றை அடியிற்காண்க.

முதுகு பற்றிக் கைத்த லத்தால்
　　முன்னொரு கோலூன்றி
விதிர்வி திர்த்துக் கண்சு ழன்று
　　மேற்கிளைக் கொண்டிருமி
இதுவென் னப்பர் மூத்த வாவென்
　　றிளையவர் ஏசாமுன்
மதுவுண் வண்டு பண்கள் பாடும்
　　வதரிவ ணங்குதுமே.　　　　(பா. 2)

வதரியைப்பற்றிய இரண்டாம் திருமொழியில் உள்ள கங்கையின் வர்ணனையையும் நன்கு நோக்குக.

பிறகு திருமங்கை மன்னர் சாளக்கிராமத்துக்குச் சென்று ஒரு திருமொழியும், நைமிசாரணியத்துக்குச் சென்று ஒரு திருமொழியும், சிங்கவேள் குன்றத்துக்குச் சென்று ஒரு திருமொழியும் பாடினர். சிங்கவேள் குன்றத்தைப் பற்றிப் பாடிய திருமொழியின் முதற்செய்யுளையும், ஈற்றுச் செய்யுளையும் அடியிற் காண்க.

அறுசீர்க்கழி நெடிலடி ஆசிரிய விருத்தம்

அங்கண் ஞால மஞ்ச வாங்கோர்
　　ஆளரி யாயவுணன்
பொங்க ஆகம் வள்ளு கிரால்
　　போழ்ந்தபு னிதனிடம்
பைங்கண் ஆனைக் கொம்பு கொண்டு
　　பத்திமை யாலடிக்கீழ்ச்

செங்கண் ஆளி இட்டி றைஞ்சும்
சிங்கவேள் குன்றமே. (பா. 1)

செங்கன் ஆளி இட்டி றைஞ்சும்
சிங்கவேள் குன்றுடைய
எங்கள் ஈச னெம்பி ரானை
இருந்தமிழ் நூற்புலவன்
மங்கை ஆளன் மன்னு தொல்சீர்
வண்டறை தார்க்கலியன்
செங்கை ஆளன் செஞ்சொன் மாலை
வல்லவர் தீதிலரே. (பா. 10)

(முதற் பத்து, 7-ம் திருமொழி.)

இத்திருமொழியில் திருமங்கை மன்னர் சிங்கவேள் குன்றத்தைப் பற்றிக் கூறியிருப்பனவற்றை நோக்கின், அம்மலை குறிஞ்சி திரிந்த பாலை போலும் என்று தோன்றுகின்றது. அன்றியும் அவற்றைக் குறிஞ்சிக்கும் பாலைக்கும் மயக்கம் கூறுவன என்று கூறுதலும் ஆம் எனவும் தோன்றுகின்றது. இவ்விரு கருத்துக்களுட் பின்னதே வலியுடைத்து என்னலாம். அவற்றை அடியிற் காண்க.

[1]மலைத்த செல்சாத் தெறிந்த பூசல்
வன்துடி வாய்கடுப்பச்
சிலைக்கை வேடர் தெழிப்ப ருத
சிங்கவேள் குன்றமே. (பா. 2)

---

1. இப்பாக்களுள், நாலாம் பாசுரத்தின் முதல் அடியில் 'பொன்' எனவும், எட்டாம் பாசுரத்தின் முதல் அடியில் 'கனும்' எனவும், ஒன்பதாம் பாசுரத்தின் முதல் அடியில் 'முதும்' எனவும், ஓரசைச் சீர்கள் வந்துள்ளன. இங்ஙனம் வருதலாம் என்பதனை யாப்பருங்கலக் காரிகை. 6-ம் சூத்திரத்தில் 'ஓரசையேநின்றும் சீராம்' என்றதனாலும், அதன் 11-ம் சூத்திரத்தில், 'உரிமையின் கண்ணின்மை ஓரசைச் சீருக்குதாரணமே' என்று கூறிக் காட்டிய உதாரணச் செய்யுளானும் அறிக.

ஓய்ந்த மாவும் உடைந்த குன்றும்
அன்றியும் நின்றழலால்
தேய்ந்த வேயும் அல்ல தில்லாச்
சிங்கவேள் குன்றமே. (பா. 3)

கவ்வு நாயும் கழுகு முச்சிப்
போதொடு கால்சுழன்று
தெய்வம் அல்லாற் செல்ல வொண்ணாச்
சிங்கவேள் குன்றமே. (பா. 4)

நின்ற செந்தீ மொண்டு சூறை
நீள்விசும் பூடிரியச்
சென்று காண்டற் கரிய கோயில்
சிங்கவேள் குன்றமே. (பா. 5)

எரிந்த வேயின் முழையு ணின்று
நீணெறி வாயுழுவை
திரிந்த ஆனைச் சுவடு பார்க்கும்
சிங்கவேள் குன்றமே. (பா. 6)

கனைத்த தீயும் கல்லு மல்லா
வில்லுடை வேடருமாய்
தினைத்த னையும் செல்ல வொண்ணாச்
சிங்கவேள் குன்றமே. (பா. 7)

காய்த்த வாகை நெற்றொ லிப்பக்
கல்லதர் வேய்ங்கழைபோய்த்
தேய்த்த தீயால் விண்சிவக்கும்
சிங்கவேள் குன்றமே. (பா. 8)

நெல்வி மல்கிக் கல்லு டைப்பப்
புல்லிலை யார்ந்ததர்வாய்ச்
சில்லி சில்லென் றொல்ல றாத
சிங்கவேள் குன்றமே. (பா. 9)

பின்பு திருமங்கை மன்னர் தமிழ் நாட்டின் வட எல்லையாய் விளங்கும் திருவேங்கடத்தை அடைந்து அவ

வரையின்கண் எழுந்தருளியிருக்கும் மலர் மங்கை மணாளனாகிய ஒப்பில் அப்பனைப் பற்றி நான்கு திருமொழிகள் பாடினர். முறையே அவற்றின் முதல் இறுவாய்ப் பாசுரங்களை அடியிற் காண்க.

### எழுசீர்க்கழி நெடிலடி ஆசிரிய விருத்தம்

கொங்க லர்ந்தம லர்க்கு ருந்தமொ
    சித்த கோவலன் எம்பிரான்
சங்கு தங்குத டங்க டல்துயில்
    கொண்ட தாமரைக் கண்ணினன்
பொங்கு புள்ளினை வாய்பி ளந்தபு
    ராணர் தம்மிடம் பொங்குநீர்ச்
செங்க யல்திளைக் குஞ்சு னைத்திரு
    வேங்க டம்மடை நெஞ்சமே.
செங்க யல்திளைக் குஞ்சு னைத்திரு
    வேங்க டத்துறை செல்வனை
மங்கை யர்தலை வன்க லிகன்றி
    வண்ட மிழ்ச்செஞ் சொல் மாலைகள்
சங்கை யின்றித்த ரித்து ரைக்கவல்
    லார்கள் தஞ்சம தாகவே
வங்க மாகடல் வையங் காவல
    ராகி வானுல காள்வரே.

(முதற் பத்து, 8-ம் திருமொழி, பா. 1, 10)

### கலித்துறை

தாயே தந்தையென் றும் தார
    மேகிளை மக்களென் றும்
நோயே பட்டொழிந்தேன் உன்னைக்
    காண்பதோர் ஆசையினால்
வேயேய் பூம்பொழில் சூழ்விரை
    யார்திரு வேங்கடவா

நாயேன் வந்தடைந்தேன் நல்கி
　　யாளென்னைக் கொண்டருளே.

கண்ணா யேழுல குக்குயிர்
　　ஆயவெங் கார்வண்ணனை
விண்ணோர் தாம்பர வும்பொழில்
　　வேங்கட வேதியனைத்
திண்ணார் மாடங்கள் சூழ்திரு
　　மங்கையர் கோன்கலியன்
பண்ணார் பாடல்பத் தும்பயில்
　　வார்க்கில்லை பாவங்களே.

(முதற் பத்து, 9-ம் திருமொழி, பா. 1, 10)

## தரவு கொச்சகக் கலிப்பா

[1] கண்ணார் கடல்சூ ழிலங்கைக் கிறைவன்றன்
திண்ணா கம்பிளக் கச்சரஞ் செலவுய்த்தாய்
விண்ணோர் தொழும்வேங் கடமா மலைமேய
அண்ணா அடியேன் இடரைக் களையாயே.

வில்லார் மலிவேங் கடமா மலைமேய
மல்லார் திரடோள் மணிவண்ணன் அம்மானைக்
கல்லார் திரடோள் கலியன் சொன்னமாலை
வல்லாரவர் வானவர் ஆகுவர் தாமே.

(முதற் பத்து, 10-ம் திருமொழி, பா. 1, 10)

## ஆசிரியத்துறை

வானவர் தங்கள் சிந்தை போலஎன்
　　நெஞ்ச மேயினி துவந்து மாதவ,

மானவர் தங்கள் சிந்தை யமர்ந்துறை
　　கின்ற வெந்தை

கானவ ரிடுகா ரகிற்புகை
　　யோங்கு வேங்கடம் மேவி மாண்குறள்,

1. இத்திருமொழியுடன் முதற் பத்து முடிந்தது. அடுத்த திருமொழி இரண்டாம் பத்தின் முதல் திருமொழியாம் என அறிக,

ஆனஅந் தணற் கின்றடி மைத்தொழில்
பூண்டாயே.

மின்னு மாமுகில் மேவு தண்திரு
வேங்க டம்மலை கோயில் மேவிய,
அன்ன மாய்நி கழ்ந்த அமரர் பெருமானை,
கன்னி மாமதில் மங்கை யர்கலி
கன்றி யின்தமி ழாலு ரைத்தஇம்,
மன்னு பாடல்வல் லார்க்கிட மாகும்
வானுலகே.

(2-ம் பத்து, முதல் திருமொழி, பா, 1, 10.)

திருவேங்கடத்தைப் பற்றிய இந்நான்கு திருமொழி களுள், இரண்டாம் திருமொழியில், குருதி பெருகப் பிறரால் தாக்கப்பட்டான் ஒருவன், வேந்தன்பாற் சென்று, தன் குறையைக் கூறித், தனது துகிலிற் படிந்துள்ள செந்நீர்க் கறையைக் காட்டுதல்போல, இருவினைகளால் தாக்கப் பட்டுள்ள குறையைக் கூறித் தம்மனமாகிய துகிலிற் படிந்துள்ள அஞ்ஞானமாகிய செந்நீர்க் கறையைக் காட்டு வாராய்த் திருமங்கை மன்னர் பாடியிருக்கும் பாசு ரங்கள் நோக்கும்தோறும் நெருப்பின்கண் இட்ட வெண் ணெய்போல மனத்தைக் கரைவிப்பனவாய் இருக்கின்றன. அவற்றுள் முதலிற் காட்டிய பாசுரத்தை யன்றி மற்றுஞ் சில பாசுரங்களை அடியிற் காண்க.

மானேய் கண்மடவார் மயக்கிற் பட்டு மாநிலத்து
நானே நானாவித நரகம் புகும்பா வஞ்செய்தேன்
தேனேய் பூம்பொழில் சூழ்திரு வேங்கட மாமலைஎன்
ஆனாய் வந்தடைந் தேனடி யேனையாட் கொண்டருளே.

கொன்றேன் பல்லுயிரைக் குறிக்கோ ளொன்றிலா மையினால்
என்றே னுமிரந் தார்க்கினி தாகவு ரைத்தறியேன்
குன்றேய் மேக மதிர்குளிர் மாமலை வேங்கடவா
அன்றே வந்தடைந் தேனடி யேனையாட் கொண்டருளே.

(1-ம் பத்து, ஒன்பதாம் திருமொழி, பா, 2, 3.)

இங்ஙனமே முதல் திருமொழியினும் ஆறும் திருமொழியினும் கூறியிருக்கின்றனர். அவற்றினின்று ஒவ்வொரு பாசுரத்தை அடியிற் காண்க.

வென்றியே வேண்டி வீழ்பொருட் கிரங்கி
　　வேற்கணார் கலவியே கருதி
நின்றவா நில்லா நெஞ்சினை உடையேன்
　　என்செய்கேன் நெடுவிசும் பணவும்
பன்றியாய் அன்று பாரகம் கீண்ட
　　பாழியான் ஆழியான் அருளே
நன்றுநான் உய்ய நான்கண்டு கொண்டேன்
　　நாராய ணாவென்னும் நாமம்.
　　　　(1-ம் பத்து, முதல் திருமொழி, பா. 4)

இடும்பையால் அடர்ப்புண் டிடுமினோ துற்றென்
　　றிரந்தவர்க் கில்லையே என்று
நெடுஞ்சொலால் மறுத்த நீசனேன் அந்தோ
　　நினைக்கிலேன் வினைப்பயன் றன்னை
கடுஞ்சொலார் கடியார் காலனார் தமரால்
　　படுவதோர் கொடுமிறைக் கஞ்சி
நடுங்கிநான் வந்துன் திருவடி அடைந்தேன்
　　நைமிசா ரணியத்து ளெந்தாய்.
　　　　(1-ம் பத்து, 6-ம் திருமொழி, பா. 5)

பின்பு திருவெவ்வுளூரை அடைந்து ஒரு திருமொழியும், பின் திருவல்லிக்கேணியைச் சார்ந்து பார்த்தசாரதியைச் சேவித்து ஒரு திருமொழியும், அதன் பிறகு திருநீர்மலைக்குச் சென்று நீர் வண்ணனைச் சேவித்து ஒரு மொழியும் பாடினர். பின்னர்த் திருக்கடன் மல்லையை அடைந்து தல சயனத்திறைவனைச் சேவித்து இரண்டு திருமொழிகள் பாடினர். அவற்றின் முதல் இறுவாய்ப் பாசுரங்களை அடியிற் காண்க.

### எண்சீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

பாராய துண்டுமிழ்ந்த பவளத் தூணைப்
படுகடலில் அமுதத்தைப் பரிவாய் கீண்ட
சீரானை எம்மானைத் தொண்டர் தங்கள்
சிந்தையுள்ளே முளைத்தெழுந்த தீங்க ரும்பினைப்
போரானைக் கொம்பொசித்த போரேற் றினைப்
புணர்மருதம் இறநடந்த பொற்குன் றினைக்
காரானை இடர்கடிந்த கற்ப கத்தைக்
கண்டதுநான் கடன்மல்லைத் தலசய னத்தே.

படநாகத் தணைகிடந்தன் றவுணர் கோனைப்
படவெகுண்டு மருதிடைபோய்ப் பழன வேலித்
தடமார்ந்த கடன்மல்லைத் தலசய னத்துத்
தாமரைக்கண் துயிலமர்ந்த தலைவர் தம்மைச்
சடமாரும் கருங்களிறு வல்லான் வெல்போர்க்
கலிகன்றி ஒலிசெய்த இன்பப் பாடல்
திடமாக இவையைந்தும் ஐந்தும் வல்லார்
தீவினையை முதலரிய வல்லார் தாமே.

(2-ம் பத்து 5-ம் திருமொழி, பா. 1, 10)

### தரவு கொச்சகக் கலிப்பா

நண்ணாத வாளவுணர் இடைப்புக்கு வானவரைப்
பெண்ணாகி அமுதூட்டும் பெருமானார் மருவினிய
தண்ணார்ந்த கடன்மல்லைத் தலசயனத் துறைவாரை
எண்ணாதே யிருப்பாரை இறைப்பொழுதும் எண்ணோமே.

கடிகமழு நெடுமறுகில் கடன்மல்லைத் தலசயனத்
தடிகளடி யேநினையும் அடியவர்கள் தம்மடியான்
வடிகொண்ட வேல்வலவன் கலிகன்றி ஒலிவல்லார்
முடிகொண்டு மன்னவர்தம் முதல்வர்முதல் ஆவாரே.

(2-ம் பத்து, 6-ம் திருமொழி, பா. 1, 10)

பின்பு திருவிடவெந்தையைச் சார்ந்து நித்தியக்கலியாணப் பெருமானைச் சேவித்து ஒரு திருமொழி பாடினார். அதன் முதல் இறுவாய்ப் பாசுரங்களை அடியிற் காண்க.

### எழுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

திவளும்வெண் மதிபோல் திருமுகத் தரிவை
 செழுங்கடல் அமுதினிற் பிறந்த
அவளும்நின் ஆகத் திருப்பதும் அறிந்தும்
 ஆகிலும் ஆசைவி டாளால்
குவளையம் கண்ணி கொல்லியம் பாவை
 சொல்லுநின் தாணயந் திருந்த
இவளை உன் மனத்தால் என்னினைந் திருந்தாய்
 இடவெந்தை எந்தைபி ரானே.

அன்னமு மீனும் ஆமையும் அரியும்
 ஆயவெம் மாயனே அருளாய்
என்னுமின் தொண்டர்க் கின்னருள் புரியும்
 இடவெந்தை எந்தைபி ரானை
மன்னுமா மாட மங்கையர் தலைவன்
 மானவேற் கலியன்வாய் ஒலிகள்
பன்னிய பனுவல் பாடுவார் நாளும்
 பழவினைப் பற்றறுப் பாரே.

(2-ம் பத்து, 7-ம் திருமொழி, பா. 1, 10)

இத்திருமொழியில் தலைவனைப் பிரிந்த தலைவியின் வருத்தத்தைக் கண்டு நற்றாய் வருந்திக் கூறுதலாகிய துறை அமைந்திருக்கின்றது.

பிறகு திருமங்கை மன்னர் திரு அட்டபுயகரம் என்னும் பதியை அடைந்து, ஆதிகேசவப் பெருமானைச் சேவித்து ஒரு திருமொழி பாடினர். அதன் இரண்டாம் பாசுரம், தமிழ் மொழியில் இவர்க்கு உள்ள பற்றையும் நன்குமதிப்பையும் தெரிவிப்பதாய் இருக்கின்றது. ஆதலின், அதன் முதல் இறுவாய்ப் பாசுரமும் அடியில் தரப்படுகின்றன; காண்க.

### எண்சீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

வெந்திறல் வீரரில் வீரர் ஒப்பார்
 வேதமு ரைத்திமை யோர்வ ணங்கும்

செந்தமிழ் பாடுவார் தாம்வ ணங்கும்
　　தேவரி வர்கொல்தெ ரிக்க மாட்டேன்
வந்துகு றளுரு வாய்நி மிர்ந்து
　　மாவலி வேள்வியில் மண்ண ளந்த
அந்தணர் போன்றிவர் ஆர்கொல் என்ன
　　அட்டபு யகரத் தேனென் றாரே.

மன்னவன் தொண்டையர் கோன்வ ணங்கும்
　　நீண்முடி மாலை வயிர மேகன்
தன்வலி தன்புகழ் சூழ்ந்த கச்சி
　　*அட்டபு யகரத் தாதி தன்னைக்
கன்னிநன் மாமதிள் மங்கை வேந்தன்
　　காமரு சீர்க்கலி கன்றி குன்றா
இன்னிசை யால்சொன்ன செஞ்சொல் மாலை
　　ஏத்தவல் லார்க்கிடம் வைகுந் தமே.

(2-ம் பத்து, 8-ம் திருமொழி, பா. 2, 10.)

இத்திருமொழியில், தலைவி தோழிக்கு அறத்தொடு நிற்றலாகிய துறை அமைந்திருக்கின்றது. இதில் அமைந்திருக்கும் துறை, தோழி 'யாரே இவர்? இவர் மனத்து எண்ணம் யாது?' என்று கூறுதலாம் என்றலுமாம்.

பின்பு பரமேச்சுர விண்ணகரம் என்னும் கோயிலை அடைந்து, அதில் எழுந்தருளியிருக்கும் பரமபத நாதனைச் சேவித்து, ஒரு திருமொழி பாடினர். அதன் முதல் இறுவாய்ப் பாசுரங்களை அடியிற் காண்க.

### எழுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

சொல்லுவன் சொற்பொருள் தானவையாய்ச் சுவையூ
　　றொலிநாற் றமுந்தோற் றமுமாய்
நல்லரன் நான்முகன் நாரணனுக் கிடந்தான்
　　தடஞ்சூழ்ந் தழகா யகச்சிப்

*இப்பதி திருக்கச்சியைச் சேர்ந்த பதிகளுள் ஒன்று.

பல்லவன் வில்லவன் என்றுலகில் பலராய்ப்
பலவேந்தர் வணங்கு கழல்
பல்லவன் மல்லையர் கோன்பணிந்த
பரமேச் சுரவிண் ணகர மதுவே.

பார்மன்னு தொல்புகழ்ப் பல்லவர்கோன் பணிந்த
பரமேச் சுரவிண் ணகர்மேல்
கார்மன்னு நீள்வயல் மங்கையர்தம் தலைவன்
கலிகன் றிகுன்று துரைத்த
சீர்மன்னு செந்தமிழ் மாலைவல்லார் திருமா
மகள்தன் அருளால் உலகில்
தேர்மன்ன ராயொலி மாகடல்சூழ் செழுநீர்
உலகாண்டு திகழ்வர் களே.

(2-ம் பத்து, 9-ம் திருமொழி பா. 1, 10.)

பின்னர்த் திருக்கோவலூரை அடைந்து ஒரு திருமொழி பாடினர். அதன் பின்பு திரு அயிந்திரபுரத்தை அடைந்து ஒரு திருமொழி பாடினர். அதிலிருந்து மூன்றும் பத்துத் தொடங்குகின்றது. அதன் முதல் இறுவாய்ப் பாசுரங்களை அடியிற் காண்க.

அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

இருந்தண் மாநிலம் ஏனம
தாய்வளை மருப்பினி லகத்தொடுக்கிக்
கருந்தண் மாகடற் கண்டுயின்
றவனிடம் கமலநன் மலர்த்தேறல்
அருந்தி இன்னிசை முரன்றெழும்
அளிகுலம் பொதுளியம் பொழிலூடே
செருந்தி நாண்மலர் சென்றணைந்
துழிதரு திருவயிந் திரபுரமே.

மூவ ராகிய ஒருவனை
மூவுல குண்டுமிழ்ந் தளந்தானைத்
தேவர் தானவர் சென்றுசென்
றிறைஞ்சத்தண் திருவயிந் திரபுரத்து

மேவு சோதியை வேல்வல
வன்கலி கன்றிவி ரித்துரைத்த
பாவு தண்டமிழ்ப் பத்திவை
பாடிடப் பாவங்கள் பயிலாவே.
(3-ம் பத்து, முதல் திருமொழி, பா. 1, 10.)

இத்திருமொழியில் இவர் வயல் நிலத்தைப் பாடியவை இன்ப வளம் அமைந்தனவாய் இருக்கின்றன. அவற்றுட் சிலவற்றை அடியிற் காண்க.

வரைச்சாரல்;
பின்னு மாதவிப் பந்தலில்
பெடைவரப் பிணியவிழ் கமலத்துத்
தென்ன வென்றுவண் டின்னிசை
முரல்தரு திருவயிந் திரபுரமே. (பா. 2)

வரைச்சாரல்,
மொய்கொள் மாதவி சண்பக
முயங்கிய முல்லையம் கொடியாடச்
செய்ய தாமரைச் செரும்பனை
திகழ்தரு திருவயிந்திர புரமே. (பா. 3)

மிடைந்து,
சாறு கொண்டமென் கரும்பிளம்
கழைதகை விசும்புற மணிநீழல்
சேறு கொண்டதண் பழனம
தெழில்திகழ் திருவயிந் திரபுரமே. (பா. 4)

பொன்மலர் திகழ்வேங்கை,
கோங்கு செண்பகக் கொம்பினில்
குதிகொடு குரக்கினம் இரைத்தோடித்
தேன்க லந்ததண் பலங்கனி
நுகர்தரு திருவயிந் திரபுரமே. (பா. 5)

மணி வரைநீழல்,
அன்ன மாமல ரவிந்தத்
தமளியிற் பெடையொடும் இனிதமரச்
செங்கெ லார்கவ ரிக்குலை
வீசுதண் திருவயிந் திரபுரமே. (பா. 7)

பின்பு திருமங்கை மன்னர் தில்லைத் திருச்சித்திர கூடத்தை (சிதம்பரத்தை) அடைந்து, கோவிந்தராசனைச் சேவித்து இரண்டு திருமொழி பாடினர். அவற்றுள், முதல் திருமொழியின் முதல் இறுவாய்ப் பாசுரங்களை அடியிற் காண்க.

எண்சீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

ஊன்வாட வுண்ணா துயிர்கா வலிட்
　　டுடலிற் பிரியாப் புலனைந்து நொந்து
தாம்வாட வாடத் தவஞ்செய்ய வேண்டா
　　தமதா விமையோ ருலகாள கிற்பீர்
கானாட மஞ்ஞைக் கணமாட மாடே
　　கயலா டுகா னீர்ப்பழனம் புடைபோய்
தேனாட மாடக் கொடியா டுதில்லைத்
　　திருச்சித்திர கூடம் சென்றுசேர் மின்களே.

சீரார் பொழில்சூழ்ந் தழகா யதில்லைத்
　　திருச்சித் திரகூடத் துறைசெங்கண் மாலுக்கு
ஆராத வுள்ளத் தவர்கேட் டுவப்ப
　　அலைநீ ருலகுக் கருளே புரியும்
காரார் புயற்கைக் கலிகன் றிகுன்றா
　　ஒலிமாலை யோரொன் பதோடொன் றும் வல்லார்
பாரார் உலகம் அளந்தான் அடிக்கீழ்
　　பலகா லநிற்கும் படிவாழ்வர் தாமே.

(3-ம் பத்து, 2-ம் திருமொழி, பா. 1, 10.)

பிறகு திருமங்கை மன்னர் சீகாழியை அடைந்தனர். அவர் புறப்பட்டுச் செல்கையில் அவருடன் செல்லும் அடியவர்கள் ‘நாலு கவிப்பெருமாள் வந்தார், நம் கலியர் வந்தார், ஆலி நாடர் வந்தார், கொங்குமலர்க் குழலியர் வேள் வந்தார், மங்கை வேந்தர் வந்தார், பரகாலர் வந்தார்; என்று விருதூதிச் செல்வார்கள். அவ்வாறே அவ்வடியவர்கள் அங்கும் திருமங்கை மன்னருக்குமுன் விருதூதிச் செல்ல, அப்போது திருஞான சம்பந்தருடைய

அடியவர்களிற் சிலர் அங்கு வந்தார்கள். அவர்கள் திருமங்கை மன்னரை நோக்கி, "எங்கள் சம்பந்தப் பெருமாள் இருக்கும் இடத்தில், நீர் நாலு கவிப்பெருமான் என்று விருதூதிச் செல்லுதல் தகாது" என்று கூறினார்கள். திருமங்கைமன்னர், "உங்கள் சம்பந்தப் பெருமாளை யாம் காணவேண்டும். நீங்கள் சென்று எமது கருத்தினை அவருக்கு உணர்த்துமின்" என்றருளினர். அவர்கள் அவ்வாறே திருமங்கை மன்னர் கருத்தைத் திருஞான சம்பந்தருக்குத் தெரிவிக்கச் சென்றார்கள். பிறகு திருமங்கை மன்னர் தம்முடைய அமைச்சர்களை நோக்கி, "எனக்கு எம்பெருமான் திருஉருவம் எதிரில் இருந்தால் அன்றி வாக்கு இனிது உண்டாகாது. ஆதலின், நீங்கள் இப்பதியில் உள்ள வைணவர் யாரேனும் தம்முடைய ஆராதனத்திற்கு வைத்திருக்கும் எம்பெருமான் படிவத்தை வேண்டிப் பெற்றுக்கொண்டு வம்மின்" என்றருளிச் செய்தனர். அப்பொழுது அங்குத் திருமங்கை மன்னரைச் சேவிக்க வந்திருந்தவராகிய ஒரு வைணவ மூதாட்டியார் திருமங்கை மன்னரை நோக்கிச் "சுவாமீ, அடியேன் சிறுகுடிலில் அடியேனுடைய ஆராதனையை ஏற்க எழுந்தருளியிருக்கும் வெண்ணெய் உண்ட தாடாளனைத் தங்கள் திருமுன் கொணர்ந்து கொடுக்கின்றேன். தாங்கள் கவலையுறல் வேண்டா" என்று கூறி, விரைந்து தம் இல்லம் சென்று தம் ஆராதனைக்கு உரிய அத்தாடாளன் படிவத்தைக் கொணர்ந்து கொடுத்தனர்.

அதன்பிறகு திருஞான சம்பந்தருடைய அடியார்கள் வந்து, திருமங்கை மன்னரை நோக்கித், "தங்களை எங்கள் சம்பந்தப் பெருமாள் காண விழைகின்றனர்," என்றார்கள். உடனே திருமங்கை மன்னர் தம் அடியார்

களுடன் திருஞான சம்பந்தர் இடத்திற்குச் சென்றருளினர். திருஞான சம்பந்தர் அவரைக் கண்டவுடன் எதிர்கொண்டு வந்து, உபசரித்துத், தக்க இருப்பிடம் அமைப்பித்து, அதில் வீற்றிருக்கச் செய்து, தாமும் அருகில் வீற்றிருந்து, சிறிது நேரம் அவருடன் அளவளாவிப் பேசிக்கொண்டிருந்தார். பிறகு திருஞான சம்பந்தர் திருமங்கை மன்னரை நோக்கி, "அரும்புலச் செல்வரே, தங்கள் வாக்கினின்று வரும் அருங்கவி அமுதினைப் பருக என் செவிகள் விழைகின்றன" என்றார். திருமங்கை மன்னர், "அன்பிற் சிறந்த ஞானச் செல்வரே, தங்கள்பால் வந்த எனக்கு, தாங்களே முதலில் தங்கள் கவியமுதமாகிய விருந்தினை அளித்தல் முறைமையாகும்" என்றனர். திருஞான சம்பந்தர் அதற்கு இணங்கி *ஒரு பதிகம் பாடினர். திருமங்கை மன்னர் அதனைக் கேட்டுத் திருஞான சம்பந்தரைப் பலபடியாகப் பாராட்டிவிட்டு, முன் வைணவ மூதாட்டியார் அளித்த தாடாளன் படிவத்தை எதிரில் இருக்க வைத்துக்கொண்டு ஒரு திருமொழி பாடினர். அதினின்றும் சில பாட்டுக்களை அடியிற் காண்க.

**எண்சீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்**

ஒருகுறளாய் இருநிலமூ வடிமண் வேண்டி
உலகனைத்தும் ஈரடியால் ஒடுக்கி ஒன்றும்
தருகவென மாவலியைச் சிறையில் வைத்த
தாடாளன் தாளணைவீர் தக்க கீர்த்தி
அருமறையின் திரள்நான்கும் வேள்வி ஐந்தும்
அங்கங்கள் அவையாறும் இசைகள் ஏழும்
தெருவில்மலி விழாவளமும் சிறக்கும் காழிச்
சீராம விண்ணகரே சேர்மினீரே. (பா. 1)

* திருஞான சம்பந்தர் அப்போது பாடிய பதிகம் இது எனக் குறிக்கப்பட்டிலது. மேலும் இவ்வரலாற்றுக் குறிப்புச் சைவ நூல்களில் காணப்படவுமில்லை.

பைங்கண்விறற் செம்முகத்து வாலி மாளப்
படர்வனத்து கவந்தனொடும் படையார் திண்கை
வெங்கண்விறல் விராதனுக விற்குனித்த
விண்ணவர்கோன் தாளணைவீர் வெற்புப்போலும்
துங்கமுக மாளிகைமேல் ஆடம் கூறும்
துடியிடையார் முகக்கமலச் சோதி தன்னால்
திங்கள்முகம் பனிபடைக்கும் அழகார் காழிச்
சீராம விண்ணகரே சேர்மினீரே. (பா. 6)

பிறைதங்கு சடையானை வலத்தே வைத்துப்
பிரமனைத்தன் உந்தியிலே தோற்றுவித்துக்
கறைதங்கு வேற்றடங்கண் திருவை மார்பில்
கலந்தவன்தாள் அணைகிற்பீர் கழுநீர்கூடித்
துறைதங்கு கமலத்துத் துயின்று கைதைத்
தோடாரும் பொதிசோற்றுச் சுண்ணம் நண்ணிச்
சிறைவண்டு களிபாடும் வயல்சூழ் காழிச்
சீராம விண்ணகரே சேர்மினீரே. (பா. 9)

செங்கமலத் தயனனைய மறையோர் காழிச்
சீராம விண்ணகரென் செங்கண் மாலை
அங்கமலத் தடவயல்சூழ் ஆலி நாடன்
அருண்மாரி அரட்டமுக்கி அடையார் சீயம்
கொங்குமலர்க் குழலியர்வேள் மங்கை வேந்தன்
கொற்றவேற் பரகாலன் கலியன் சொன்ன
சங்கமுகத் தமிழ்மாலை பத்தும் வல்லார்
தடங்கடல்சூழ் உலகுக்குத் தலைவர் தாமே. (பா. 10)
(3-ம் பத்து 4-ம் திருமொழி.)

திருஞான சம்பந்தர் அத்திருமொழியை (பதிகத்தை)க் கேட்டு உவகை மிகுந்து, "வென்றிவேல் தடக்கையும், விழுப்புலச் செல்வமும் வாய்ந்த அறிஞரே, 'நாற்கவிப் பெருமான்' என்னும் சிறப்புப்பெயர் தங்களுக்கே உரியது ஆகும். முற்றவப் பயனுக அன்பின் உறையுளாய் அமைந்த மனத்தினராகிய தங்களுடன் அளவளாவித் தங்கள் அருங்கவி யமுதினைப் பருகி மகிழ்வுறும்

பேற்றினைப் பெற்றேன். இதனிற் சிறந்த இன்பம் யாதுளது? என்றனர். திருமங்கை மன்னர், "நான் மறையோரும், செந்தமிழ் வாணரும் புகழ் ஞானச் செல்வரே, அன்பிற் சிறந்த அறிஞராகிய தங்கள் கவியமுதைப் பருகிப், பின் என் கவிகளைத் தங்கள் செவிகளில் ஏற்பிக்கும் பேற்றினைப் பெற்ற என் முன்னைத் தவமே சிறந்த தவமாகும். தங்களுக்கும் வேறு பதிகளுக்குச் செல்ல வேண்டிய கடமை இருக்கும். எனக்கும் அவ்விதக் கடமை உண்டு. ஆதலின், விடை கொள்கின்றேன்' என்று கூறித் திருஞானசம்பந்தரிடம் விடைபெற்றுக் கொண்டு திருவாலியை நோக்கிச் சென்றனர்.

திருஞான சம்பந்தர், தம்முடைய திருக்கூட்டத்தில் உள்ள அடியார்களை நோக்கி, "அன்பர்களே, இன்று நாம் கண்ட திருமங்கை மன்னர் மாண்பார் பல கலை உணர்விலும் ஞானத்திலும் யாவரும் புகழ்தற்கு உரிய சிறப்பினை உடைய பெரியராவர். அவர் வீரத்திலும் ஒப்புயர்வு அற்றவர். அத்தகைய அவர் நம்முடன் பேசுகையில் தம் வீரச்சிறப்பினை முற்று மறந்து, அன்பினையே நம்பால் காட்டி, அவர் கூறிய இன்மொழிகள் நாம் என்றும் கருதுதற்கு உரியனவாய் இருக்கின்றன. அவருடன் பேசிக்கொண்டிருந்த பொழுது, இன்பம் விளைக்கும் பொழுதாய் இருந்தது. அவருடைய பாட்டின் சொல் வளமும் பொருள் வளமும் மனத்தைக் கவரக்கூடியனவாய் இருக்கின்றன. அவை என்றும் என்னால் மறகககக் கூடியனவல்ல" என்று கூறினர்.

பிறகு திருமங்கை மன்னர், திருவாலியை அடைந்து மூன்று திருமொழிகள் பாடினர். அவற்றுள், ஒவ்வொன்றிலுமுள்ள முதல் இறுவாய்ப் பாசுரங்களை அடியிற் காண்க.

### ஆசிரியத் துறை

வந்துனதடி யேன்மனம்புகுந்தாய்புகுந்ததற் பின்வணங்கும்
சிந்தனைக் கினியாய், திருவேளன் ஆருயிரே,
அந்தளிரணி யாரசோகி னிளந்தளிர்கள் கலந்தவையெங்கும்
செந்தழல் புரையும் திருவாலி யம்மானே.

புல்லிவண் டறையும்பொ ழில்புடை சூழ்தென் னாலி யிருந்த
மாயனை
கல்லின் மன்னுதிண் டோள்கலி யனொலி செய்த
நல்ல வின்னிசை மாலை நாலுமோரைந்து மொன்றும்
வல்ல ராயுரைப் பார்க்கிட மாகும்வா னுலகே.

(3-ம் பத்து, 5-ம் திருமொழி, பா. 1, 10.)

### தரவு கொச்சகக் கலிப்பா

தூவிரிய மலருழக்கித் துணையோடும் பிரியாதே
பூவிரிய மதுநுகரும் பொறிவரிய சிறுவண்டே
தீவிரிய மறைவளர்க்கும் புகழாளர் திருவாலி
ஏவரிவெஞ் சிலையானுக் கென்னிலைமை உரையாயே.

மையிலங்கு கருங்குவளை மருங்கலரும் வயலாலி
நெய்யிலங்கு சுடராழிப் படையானை நெடுமாலைக்
கையிலங்கு வேற்கலியன் கண்டுரைத்த தமிழ்மாலை
ஐயிரண்டு மிவைவல்லார்க் கருவினைகள் அடையாவே.

(3-ம் பத்து, 6-ம் திருமொழி, பா. 1, 10.)

### கலித்துறை

கள்வன்கொல் யானறி யேன்கரி யானொரு காளைவந்து
வள்ளிம ருங்குலென் றன்மட மானினைப் போதவென்று
வெள்ளிவ ளைக்கைபற் றப்பெற்ற தாயரை விட்டகன்று
அள்ளலம் பூங்க ழனிஅணி யாலிபு குவர்கொலோ.

தாய்மனம் நின்றிரங் கத்தனி யேநெடு மால்துணையாப்
போயின பூங்கொடி யாள்புன லாலி புகுவரென்று
காய்சின வேற்கலி யனொலி செய்தமிழ் மாலைபத்தும்
மேவிய நெஞ்சுடை யார்தஞ்ச மாவது விண்ணுலகே.

(3-ம் பத்து, 7-ம் திருமொழி, பா. 1, 10.)

திருமங்கை மன்னர் பின்னர் நாங்கூரைச் சார்ந்த மணிமாடக் கோயிலை அடைந்து, நந்தா விளக்காகிய பெருமானை உள்ளம் குளிரச் சேவித்து, வணங்கி, ஒரு திருமொழி பாடினர். அதன் முதல் இறுவாய்ப் பாசுரங்களை அடியிற் காண்க.

**எண்சீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்**

நந்தா விளக்கே அளத்தற் கரியாய்
நாரா யணனே கருமா முகில்போல்
எந்தாய் எமக்கே அருளாய் எனநின்
றிமையோர் பரவும் இடமெத் திசையும்
கந்தா ரமந்தேன் இசைபா டமாடே
களிவண் டுமிழற் றநிழல் துதைந்து
மந்தா ரநின்று மணமல் குநாங்கூர்
மணிமா டக்கோயில் வணங்கென் மனனே.

வண்டார் பொழில்சூழ்ந் தழகா யநாங்கூர்
மணிமா டக்கோயில் நெடுமா லுக்கென்றும்
தொண்டா யதொல்சீர் வயல்மங் கையர்கோன்
கலியன் னொலிசெய் தமிழ்மா லைவல்லார்
கண்டார் வணங்கக் களியா னைமீதே
கடல்சூ ழுலகுக் கொருகா வலராய்
விண்டோய் நெடுவெண் குடைநீ ழலின்கீழ்
விரிநீ ருலகாண் டுவிரும பு்வரே.

(3-ம் பத்து, 8-ம் திருமொழி, பா. 1, 10.)

திருமங்கை மன்னர் பிறகு நாங்கூரைச் சேர்ந்த (2) வைகுந்த விண்ணகரம், (3) அரிமேய விண்ணகரம், (4) திருத்தேவனார் தொகை, (5) திருவண்புருடோத்தமம், (6) திருச்செம்பொன் செய்கோயில், (7) திருத்தெற்றியம்பலம் (8) திருமணிக்கூடம், (9) திருக்காவளம்பாடி, (10) திருவெள்ளக்குளம், (11) திருப்பார்த்தன்பள்ளி என்னும்

*(செவிலித்தாய் தலைவியின் தன்மையைத் தலைவனுக்குக் கூறியது.)

திருப்பதிகளில் எழுந்தருளியுள்ள எம்பெருமானைச் சேவித்து ஒவ்வொரு பதியினும் ஒவ்வொரு திருமொழியைப் பாடினர். பின்னர், திருவிந்தளூர், வெள்ளியங்குடி, புள்ளம்பூதங்குடி, கூடலூர், திருவெள்ளறை என்னும் பதிகளைச் சேவித்து, அவற்றுள் ஒவ்வொரு பதிக்கும் ஒவ்வொரு திருமொழி பாடினர். பின்பு பொன்னிபொன்னி என்று உலகத்தவர் போற்றும் காவிரியாற்றின் இடையில், குடதிசை முடியை வைத்துக் குணதிசைபாதம் நீட்டி, வடதிசை பின்பு காட்டித், தென்திசை இலங்கை நோக்கிக் கடல் நிறக் கடவுள் எந்தை அரவணையில் மலர்க்கண் துயின்றருளும் திருக்கோலத்தைக் கண்களும் மனமும் குளிரச் சேவித்து, கண்மலரின் நின்று நீர்மல்க, ஆடி ஆடி அகங்கரைந்து அவ்வருளாளனுடைய இசை பாடிப் பாடி 'அரங்கவோ, அமலவோ' என்று கூவிக் கூவிப் போற்றி ஐந்து திருமொழிகள் பாடினர்.

அவற்றுள், ஒவ்வொன்றினின்றும் முதல் இறுவாய்ப் பாசுரங்களை அடியிற் காண்க.

**கலித்துறை**

உந்தி மேல்நான் முகனைப்படைத்
தானு லகுண்டவன்
எந்தை பெம்மான் இமையோர்கடா
மைக்கிடம் என்பரால்
சந்தி னோடு மணியுங்கொழிக்
கும்புனற் காவிரி
அந்தி போலும் நிறத்தார்வயல்
சூழ்தென்ன ரங்கமே.

அல்லி மாதர் அமருந்திரு
மார்வன ரங்கத்தைக்
கல்லின் மன்னு மதிள்மங்கையர்
கோன்கலி கன்றிசொல்

நல்லி சைம்மா லைகள்நாலிரண்
டும்மிரண் டும்முடன்
வல்ல வர்தாம் உலகாண்டுபின்
வானுல காள்வரே.

(5-ம் பத்து, 4-ம் திருமொழி, பா. 1, 10.)

### அறுசீர்க்கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

வெருவாதாள் வாய்வெருவி வேங்கடமே
வேங்கடமே என்கின் றாளால்
மருவாளால் என்குடங்கால் வாணெடுங்கண்
துயில்மறந்தாள் வண்டார் கொண்டல்
உருவாளன் வானவர்தம் உயிராளன்
ஒலிதிரைநீர்ப் பௌவங் கொண்ட
திருவாளன் என்மகளைச் செய்தனகள்
எங்ஙனம்நான் சிந்திக் கேனே.

சேலுகளும் வயல்புடைசூழ் திருவரங்கத்
தம்மானைச் சிந்தை செய்த
நீலமலர்க் கண்மடவாள் நிறைவழிவைத்
தாய்மொழிந்த அதனை நேரார்
காலவேல் பரகாலன் கலிகன்றி
யொலிமாலை கற்று வல்லார்
மாலைசேர் வெண்குடைக்கீழ் மன்னவராய்ப்
பொன்னுலகில் வாழ்வர் தாமே.

(5-ம் பத்து, 5-ம் திருமொழி, பா. 1, 10.)

### தரவு கொச்சகம்

கைம்மான மழகளிற்றைக் கடற்கிடந்த கருமணியை
மைம்மான மரதகத்தை மறையுரைத்த திருமாலை
எம்மானை எனக்கென்றும் இனியானைப் பனிகாத்த
அம்மானை யான்கண்ட தணிநீர்த்தென் னரங்கத்தே.

ஆமருவி நிரைமேய்த்த அணியரங்கத் தம்மானைக்
காமருசீர்க் கலிகன்றி ஒலிசெய்த மலிபுகழ்சேர்
நாமருவு தமிழ்மாலை நாலிரண்டோ டிரண்டினையும்
தாமருவி வல்லார்மேல் சாராதீ வினைதானே.

(5-ம் பத்து, 6-ம் திருமொழி, பா. 1, 10.)

திருமங்கை மன்னர் திருவரங்கத்து இறைவனுற் கவரப்பெற்ற மனத்தினராய், அப்பதியில் சில நாட்கள் தங்கியிருந்து, பின்பு திருப்பேர், நந்திபுர விண்ணகரம் என்னும் பதிகளை அடைந்து அப்பதிகளுள் ஒவ்வொன்றி லும் ஒவ்வொரு திருமொழி பாடியருளினர். பிறகு திரு விண்ணகரம் என்னும் பதியை அடைந்து அப்பதியில் எழுந்தருளியுள்ள உப்பிலிஅப்பனை மனம் குளிரச் சேவித்து மூன்று திருமொழிகள் பாடினர். பின்பு திரு நறையூரை அடைந்து, அப்பதியில் நம்பிக்கை நாச்சியா ருடன் எழுந்தருளியிருக்கும்* நம்பி 'தாய் நினைந்த கன்றே ஒக்கத் தன்னை நினைக்கச் செய்து' இவர் திரு உள்ளத்தைக் கவர்ந்து கொண்டமையால் இவர் கண்களில் நீர்மல்க மனம் உருகி நம்பியைப்பற்றிப் பத்துத் திருமொழிகள் பாடினர். அவற்றின் முதல் இறுவாய்ப் பாசுரங்களை ஈண்டுக் காட்டின் மிகப் பெருகுமாகலின், அவற்றினின்று சில பாசுரங்கள் மட்டும் காட்டப்படுகின்றன.

இவர் நறையூரைப்பற்றிப் பாடிய பத்துத் திருமொழி களுள் முதல் திருமொழியில் முதுமைப் பருவத்தின் தன் மையைப்பற்றிக் கூறும் திறம் நோக்குந்தோறும் இன்பம் பயப்பனவாயிருக்கின்றன. அவற்றுட் சிலவற்றை அடியிற் காண்க.

**கலித்துறை**

கண்ணும் சுழன்று பீளைபோ
 டுளைவந் தேங்கிளைல்
பண்ணின் மொழியார் பையக
 டமினென் றதமுன். (பா. 1)

கொங்குண் குழலார் கூடியி
 ருந்துசி ரித்துநீர்
இங்கென் இருமி எம்பால்வந்த
 தென்றிக ழாதமுன். (பா. 2)

* (7-ம் பத்து, 3-ம் திருமொழி, பா. 2).

இவற்றுள் நகைச்சுவையும் அமைந்திருக்கின்றது. மூன்றாம் திருமொழியுள் செங்கட் சோழனைப் பற்றி இவர் கூறியிருப்பவை நோக்கற்கு உரியனவாகும். அவற்றை அடியிற் காண்க.

### எண்சீர்க்கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

வம்பவிழும் செண்பகத்தின் வாசமுண்டு
மணிவண்டு வகுளத்தின் மலர்மேல் வைகும்
செம்பியன்கோச் செங்கணான் சேர்ந்தகோயில்
திருநறையூர் மணிமாடம் சேர்மின் களே. (பா. 1)

உழும்செறுவில் மணிகொணர்ந்து கரைமேல் சிந்தி
உலகெல்லாம் சந்தனமும் அகிலும் கொள்ளச்
செழும்பொன்னி வளம்கொடுக்கும் சோழன் சேர்ந்த
திருநறையூர் மணிமாடம் சேர்மின் களே. (பா. 2)

கவ்வைமா களிறுந்தி விண்ணி ஏற்றக்
கழல்மன்னர் மணிமுடிமேல் காகம் ஏறத்
தெய்வவாள் வலங்கொண்ட சோழன் சேர்ந்த
திருநறையூர் மணிமாடம் சேர்மின் களே. (பா. 3)

வெங்கண்மா களிறுந்தி விண்ணி ஏற்ற
விறல்மன்னர் திறலழிய வெம்மா உய்த்த
செங்கணான் கோச்சோழன் சேர்ந்த கோயில்
திருநறையூர் மணிமாடம் சேர்மின் களே. (பா. 4)

இவர் இத்திருமொழியின் ஈற்றுப் பாசுரத்தில் தம்மைப்பற்றிக் கூறுவன நன்கு நோக்கற்கு உரியனவாகும். அவற்றை அடியிற் காண்க.

'பொய்ம்மொழியொன் றில்லாத மெய்ம்மை ஆளன்
புலமங்கைக் குலவேந்தன் புலமை ஆர்ந்த
அம்மொழிவாய்க் கலிகன் றி இன்பப் பாடல்'

(6-ம் பத்து, 6-ம் திருமொழி.)

இத்திருமொழியின் பாசுரங்களின் ஈற்றுச் சீர்கள் 'களே'என ஓரசைச் சீரால் அமைந்திருக்கின்றன. இவை

ருடைய பாசுரங்களுள் சிலவற்றுள், ஓரசைச் சீர்கள் அமைந்துள்ளன.

ஏழாம் திருமொழியின் பாசுரங்களின் பின் இரண்டடிகளில் இவர் மருதநிலத்தை வருணித்திருக்கும் பகுதிகள் நன்கு நோக்கற்கு உரியனவாகும். அவற்றை அடியிற் காண்க.

### அறுசீர்க்கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

வேலும் சேயும் அனையாரும் வேற்கணாரும் பயில்வீதி
நாளும் விழவி னொலியோவா நறையூர் நின்ற நம்பியே.
(பா. 1)

பனிசேர் முல்லைப் பல்லரும்பப் பானல் ஒருபால் கண்காட்ட
கனிசேர் கமல முகங்காட்டும் நறையூர் நின்ற நம்பியே.
(பா. 2)

புள்ளார் புறவில் பூங்காவி புலன்கொள் மாதர் கண்காட்ட
நள்ளார் கமல முகங்காட்டும் நறையூர் நின்ற நம்பியே.
(பா. 3)

களியா வண்டு கள்ளுண்ணக் காமர் தென்றல் அலர்தூற்ற
நளிர்வாய் முல்லை முறுவலிக்கும் நறையூர் நின்ற நம்பியே
(பா. 4)

பள்ளிக் கமலத் திடைப்பட்ட
பகுவாய் அலவன் முகம்நோக்கி
நள்ளி ஊடும் வயல்சூழ்ந்த
நறையூர் நின்ற நம்பியே.
(பா. 6)

இவற்றுள் இரண்டாம் பாசுரத்தின் அடிகளிலும், மூன்றாம் பாசுரத்தின் அடிகளிலும் திணைமயக்கம் கூறப்பட்டுள்ளது.

'பனிசேர் முல்லை பல்லரும்ப' என்றதும், 'புள்ளார் புறவில் பூங்காவி புலன்கொள் மாதர் கண்காட்ட' என்றதும் மருதத்திணையோடு முல்லைத் திணை மயங்கியதாம் என அறிக. அன்றியும் ஆறாம் பாசுரத்தின் அடிகளில், 'பள்ளிக்

கமலத் திடைப்பட்ட பருவாய் அலவன் முகம் நோக்கி, நள்ளி ஊடும்' என்று மருதத்திணைக்கு உரிய உரிப் பொருளாகிய ஊடல் நண்டின்மேல் வைத்துக் கூறப்பட்டிருத்தலையும் நோக்குக. இங்ஙனமே ஆறும்திருமொழியின் பாசுரங்களிலும் மருதநிலத்தையும் காவேரி யாற்றையும் இவர் வருணித்திருப்பன நன்கு நோக்கற்கு உரியன வாகும்.

பிறகு திருச்சேறையை அடைந்து சாரநாதனைச் சேவித்து ஒரு திருமொழி பாடினர். பின்பு திருவழுந் தூரை அடைந்து ஆமருவியப்பனைச் சேவித்து ஐந்து திரு மொழிகள் பாடினர். பின் சிறுபுலியூர், கண்ணமங்கை என்னும் பதிகளை அடைந்து ஒவ்வொரு பதிக்கும் ஒவ் வொரு திருமொழி பாடினர். பின்பு திருக்கண்ணபுரத்தை அடைந்து, சௌரிராசனைச் சேவித்து நான்கு திருமொழி கள் பாடிப் பின் தலைவனைப் பிரிந்த தலைவி இரங்கலாக ஒரு திருமொழி பாடி மீண்டும் திருக்கண்ணபுரத்தைக் குறித்து ஐந்து திருமொழிகள் பாடினர்.

(இதனோடு 8-ம் பத்து முற்றிற்று.)

பின்பு திருக்கண்ணங்குடி, திருப்புல்லாணி, திருக் குறுங்குடி, திருவல்லவாழ் முதலிய பகுதிகளை அடைந்து திருவுறைமார்பனைச் சேவித்துத் திருமொழிகள் பாடிப், பின்பு திருமாலிருஞ்சோலை மலையில் அழகனைச் சேவித்து இரண்டு திருமொழிகள் பாடினர். அவற்றுள் ஒன் றினின்றும் முதல் இறுவாய்ப் பாசுரங்களை அடியிற் காண்க.

**எழுசீர்க்கழி நெடிலடி ஆசிரிய விருத்தம்**

முந்துற வுரைக்கேன் விரைக்குழல் மடவார்
 கலவியை விடுதடு மாறல்
அந்தரம் ஏழும் அலைகடல் ஏழும்
 ஆயவெம் மடிகடம் கோயில்
சங்தொடு மணியும் அணிமயில் தழையும்
 தழுவிவந் தருவிகள் நிரந்து
வந்திழி சாரல் மாலிருஞ் சோலை
 வணங்குதும் வாமட நெஞ்சே.
வண்டமர் சாரல் மாலிருஞ் சோலை
 மாமணி வண்ணரை வணங்கும்
தொண்டரைப் பரவும் சுடரொளி நெடுவேல்
 சூழ்வய லாலிநன் னுடன்
கண்டநல் வேலி மங்கையர் தலைவன்
 கலிகன்வாய் ஒலிசெய்த பனுவல்
கொண்டிவை பாடும் தவமுடை யார்கள்
 ஆள்வரிக் குரைகடல் உலகே.

(9-ஆம் பத்து, 8-ஆம் திருமொழி, பா. 1, 10.)

திருமாலிருஞ் சோலைமலையை இவர் வருணித்திருக்கும் பகுதிகளும் நன்கு நோக்குதற்கு உரியனவாகும்.

பிறகு திருமங்கை மன்னர் திருக்கோட்டியூர், திருமெய்யம், திருப்புல்லாணி, திருத்தண்கால், திருமோகூர், திருக்குறுங்குடி முதலிய பகுதிகளில் எழுந்தருளியுள்ள திருமகள் நாதனைச் சேவித்துத் திருமொழிகள் பாடி வணங்கி மீண்டும் திருவரங்கத்திற்கு வந்தனர்.

அங்ஙனம் வந்த திருமங்கை மன்னர் மற்றும் பல திருமொழிகள் பாடினர். அங்ஙனம் அவர் பாடிய திருமொழிகளின் தொகைக்குப் பெரிய திருமொழி என்பது பெயராயிற்று.

திருமங்கை மன்னர் பிறகு 'குடதிசை முடியை வைத்துக் குணதிசை பாதம் நீட்டி, வடதிசை பின்பு

காட்டித் தென்றிசை இலங்கை நோக்கி,' அரவணையின் கண் திருக்கண் வளர்ந்தருளும் பெரிய பெருமாளுக்கும் திருவரங்கச் செல்வனாரான அழகிய மணவாளருக்கும் விமானம், மண்டபம், திருத்தளிகை, திருமதில், கோபுரம் முதலிய தொண்டுகளைச் செய்யவேண்டும் என்னும் விழை வுடையராய்த் தம்முடைய அமைச்சர்களை அழைத்து, அவர்கள்பால் தம் கருத்தைக் கூறி, 'அத்தொண்டுகளுக்கு வேண்டிய பொருளை ஈட்டுதற்கு உரிய வழி யாது?' என்று வினவினர். அமைச்சர்கள், "எங்கள் அன்புக்கு உரிய இறைவரே! நாகபட்டினத்தில் மாற்று உயர்ந்த பொன்னாற் செய்யப்பட்ட புத்தப் படிவம் ஒன்று உளது; அதனைக் கொணர்ந்து உருக்கி விற்றால், அதனாற் கிடைக்கும் பொருளைக்கொண்டு, தாங்கள் கருதிய தொண்டுகளைச் செய்தல் கூடும்'' என்றார்கள், திருமங்கை மன்னர் அவ்வாறே தம்முடைய பரிவாரங்களுடன் நாகப்பட்டினத்திற்குச் சென்று அந்தப் பொற்படிவத்தைப் பிறர் அறியாமல் கவர்ந்து கொண்டுவந்து, அதனை உருக்கி விற்று, அதனாற் பெற்ற பொருளைக்கொண்டு விமானம், மண்டபம் முதலிய தொண்டுகளைப் புரியத் தொடங்கித் திருமதில் கட்டுகையில் தொண்டரடிப்பொடியாழ்வார் பெரிய பெருமாளுக்குத் திருமாலை சேர்க்கின்ற இடம் நேர்பட, அவ்விடத்தைத் தவிர்ந்து, ஒதுங்கியிருக்கத் திருமதிலைக் கட்டுவித்தருளினர். *தொண்டரடிப்பொடியாழ்வார் அதனை அறிந்து தாம் மலர்கள் கொய்யும் ஆயுதத்துக்குத் திருமங்கை மன்னருடைய திருப்பெயர்களுள், ஒன்றாகிய 'அருள்மாரி' என்னும் திருப்பெயரை யிட்டு மகிழ்வெய்தி

---

*இதனால் தொண்டரடிப்பொடி ஆழ்வார் திருமங்கை மன்னர் காலத்தினர் என்பது தோன்றுகின்றது. இஃது ஆராய்ச்சிக்கு உரியது.

னர். பின்னர்த் திருமங்கை மன்னர் விமானம், மண்டபம், கோபுரம் முதலிய தொண்டுகளைத் திருத்தமுறச் செய்து முடித்துப் பிறகு திருக்குறுந்தாண்டகம், திருநெடுந்தாண்டகம், சிறிய திருமடல், பெரிய திருமடல், திருவெழுகூற்றிருக்கை என்னும் அருள்மொழிப் பாமாலைகளைப் பாடி உலகை வாழ்வித்தருளினர்.

திருமங்கை மன்னர் பாடி அருளிய பிறவிப் பிணிக்கு அருமருந்தன்ன நூற்கள் ஆறாகும். அவை: (1) பெரிய திருமொழி, (2) திருக்குறுந்தாண்டகம், (3) திருநெடுந்தாண்டகம், (4) சிறிய திருமடல், (5) பெரிய திருமடல், (6) திருவெழுகூற்றிருக்கை என்பனவாகும்.

இவற்றை நம்மாழ்வார் அருளிச்செய்த (1) திருவாய்மொழி (2) திருவாசிரியம் (3) திருவிருத்தம் (4) பெரிய திருவந்தாதி என்னும் தமிழ் வேதம் நான்கினுக்கு அமைந்த ஆறு அங்கங்கள் ஆகும் என்பர் வைணவப் பெரியார். அதனை,

> "மாறன் பணித்த தமிழ்மறைக்கு மங்கையர்கோன்
> ஆறங்கம் கூற அவதரித்த—வீறுடைய
> கார்த்திகையிற் கார்த்திகைநாள் என்றென்று காதலிப்பார்
> வாய்த்தமலர்த் தாணெஞ்சே வாழ்த்து."
>
> —(உபதேச ரத்தினமாலை, செ. 9.)

திருமங்கை மன்னர் அருளிய அவ்வருமருந்தன்ன ஆறு நூற்களுள் பெரிய திருமொழியின்கண் நூற்று எண்பது திருமொழிகள் (பதிகங்கள்) இருக்கின்றன. இவை பதினொரு பத்தாக வகுக்கப்பட்டிருக்கின்றன. இவற்றுள் ஒரு பத்து என்பது பத்துத் திருமொழிகள் (பதிகங்கள்) கொண்டது ஆம். ஆனல் பதினோராம் பத்தில் மட்டும் பத்துத் திருமொழிகள் இரா. இரண்டு திருமொழிகள் குறையும்.

பெரிய திருமொழியில் உள்ள திருமொழிகளுள் தொண்ணூற்றேழாம் திருமொழி (10-ம் பத்து, 7-ம் திருமொழி) நீங்கிய மற்றைத் திருமொழிகள் ஒவ்வொன்றிலும் பத்துப் பாசுரங்களே உள்ளன. தொண்ணூற்றேழாம் திருமொழியில்மட்டும் பதினான்கு பாசுரங்கள் உள. ஆதலின், பெரிய திருமொழியின் மொத்தப் பாசுரங்கள் ஆயிரத்து எண்பத்து நான்கு ஆகும். திருக்குறுந்தாண்டகத்தின் பாசுரங்கள் இருபது. திருநெடுந்தாண்டகத்தின் பாசுரங்கள் முப்பது. இவர் திருமொழிகளுள், பெரும்பான்மையன விருத்தங்களே. சிறுபான்மை ஆசிரியத்துறை, வெண்டுறைகளும் இருக்கின்றன. சிறிய திருமடல் பெரிய திருமடல் என்னும் இரண்டும் வெண்பாவாலானவை. திருவெழு கூற்றிருக்கை ஆசிரியப்பாவாலானதாகும். இது சித்திரக்கவியைச் சேர்ந்தது.

இவர், எக்கவிகளையும் விரைவிற் பாடவல்லவர் ஆதலின் ஆசுகவி எனவும், இவர் தாமே தம்பாடலைப் பற்றி,

"பொய்ம்மொழியொன் றில்லாத மெய்ம்மை யாளன்
புலமங்கைக் குலவேந்தன் புலமை யார்ந்த
அம்மொழிவாய்க் கலிகன்றி இன்பப் பாடல்"

என்று கூறியபடி இவருடைய பாசுரங்கள் படிப்பார்க்கு இன்பம் பயப்பனவாய் இருத்தலின், மதுரகவி எனவும், சித்திரக்கவி பாடியிருத்தலின், சித்திரக்கவி எனவும், வித்தாரக் கவிகளைப் பாடியிருத்தலின் வித்தாரக்கவி எனவும் நற்புலச் செல்வர்களாற் புகழ்ந்து போற்றற்கு உரிய நாற்கவிப்பெருமாள் ஆவர். இவருடைய பாசுரங்களுள், அன்பின் சுவையும் அருங்கவிச் சுவையும் கலந்து, ஓதுவார் உள்ளத்தைத் தம்பால் கவர்ந்து, அனலில் இட்ட

வெண்ணெய் என உருகும்படி செய்யும் தன்மையனவாய் இலங்குகின்றன.

இவர் பாடிய திருமொழிகளுள், ஒன்பதாம் பத்து வரையினும் உள்ள திருமொழிகள் வடபாலதாகிய பிரிதி முதல் தென்பாலதாகிய திருக்குறுங்குடி வரையினும் உள்ள பதிகளைப்பற்றிப் பாடியனவாகும். பத்தாம் பத்தினும் பதினோராம் பத்தினும் உள்ள திருமொழிகள் அங்ஙனமன்றி, இராமனையும், கண்ணனையும் பற்றியனவாகவும், இவர் தம்மைத் தலைவியாகவும் திருமகள் நாதனைத் தலைவனாகவும் கொண்டு பாடியனவாகவும் இருக்கின்றன. இப்பாசுரங்கள் இவருடைய அன்பின் பெருக்கை இனிது விளக்குவனவாய் விளங்குகின்றன. அவற்றுட் சிலவற்றை அடியிற் காண்க.

### இராமனைப் பற்றியவை

**எண்சீர்க்கழி நெடிலடி ஆசிரிய விருத்தம்**

இரக்கம் இன்றியெங் கோன் செய்த தீமை
இம்மை யேயெமக் கெய்திற்றுக் காணீர்
பரக்க யாமின்று ரைத்தேனி ராவணன்
பட்ட னினி யாவர்க் குரைக்கோம்
குரக்கு நாயகர் காளிளங் கோவே
கோல வல்வில் ராமபி ரானே
அரக்க ராடழைப் பாரில்லை நாங்கள்
அஞ்சி னோம்தடம் பொங்கத்தம் பொங்கோ.

அங்கு வானவர்க் காகுலந் தீர
அணியி லங்கைஅ ழித்தவன் றன்னைப்
பொங்கு மாவல வன்கலி கன்றி
புகன்ற பொங்கத்தங் கொண்டிவ்வு லகினில்
எங்கும் பாடிநின் றாடுமின் தொண்டீர்
இம்மை யேயிட ரில்லை யிறந்தால்
தங்கு மூரண்ட மேகண்டு கொண்மின்
சாற்றி னோந்தடம் பொங்கத்தம் பொங்கோ.

(10-ம் பத்து, 2-ம் திருமொழி, பா. 1, 10.)

### அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

ஏத்து கின்றோம் நாத்த ழும்ப இராமன் திருநாமம்
சோத்த நம்பி சுக்கி ரீவா உம்மைத் தொழுகின்றோம்
வார்த்தை பேசி ரெம்மை யுங்கள் வானரம் கொல்லாமே
கூத்தர் போல ஆடுகின்றோம் குழமணி தூரமே.

வென்ற தொல்சீர்த் தென்னிலங்கை
　　வெஞ்சமத் தன்றரக்கர்
குன்றம் அன்னார் ஆடி யுய்ந்த
　　குழமணி தூரத்தைக்
கன்றி நெய்நீர் நின்ற வேற்கைக்
　　கலிய னொலிமாலை
ஒன்றும் ஒன்றும் ஐந்தும் மூன்றும்
　　பாடிநின் றாடுமினே.

(10-ம் பத்து, 3-ம் திருமொழி, பா, 1, 10.)

## கண்ணனைப் பற்றியவை

### அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

சந்த மலர்க்குழல் தாழத்
　　தானுகந் தோடித் தனியே
வந்தென் முலைத்தடந் தன்னை
　　வாங்கிநின் வாயில் மடுத்து
நந்தன் பெறப்பெற்ற நம்பீ
　　நானுகந் துண்ணும் அமுதே
எந்தை பெருமானே யுண்ணாய்
　　என்னம்மம் சேமம் உண்ணாயே.

இம்மை இடர்கெட வேண்டி
　　ஏந்தெழில் தோள்கலி கன்றி
செம்மைப் பனுவனால் கொண்டு
　　செங்கண் நெடியவன் றன்னை
அம்மம் உண்ணென் றுரைக்கின்ற
　　பாடல் இவைஐந்தும் ஐந்தும்
செம்மை மனத்துவைத் தேத்த
　　விண்ணவர் ஆகலும் ஆமே.

(10-ம் பத்து, 4-ம் திருமொழி பா. 1, 10.)

**கலித்தாழிசை**

பூங்கோதை ஆய்ச்சி கடைவெண்ணெய் புக்குண்ண
ஆங்கவள் ஆர்த்துப் புடைக்கப் புடையுண்
டேங்கி யிருந்து இணுங்கி விளையாடும்
ஓங்கோத வண்ணனே சப்பாணி
ஒளிமணி வண்ணனே சப்பாணி.
காரார் புயற்கைக் கலிகன்றி மங்கையர்கோன்
பேராளன் நெஞ்சிற் பிரியா திடங்கொண்ட
சீராளா செந்தா மரைக்கண்ணு தண்டுழாய்த்
தாராளா கொட்டாய் சப்பாணி
தடமார்வா கொட்டாய் சப்பாணி.

—(10-ம் பத்து, 5-ம் திருமொழி, பா. 1, 10.)

திருக்குறுந் தாண்டகத்தின் பாசுரங்கள், செய்யுள் அமைதியானும், பொருள் அமைதியானும் பெரும்பான்மையும் தொண்டரடிப் பொடியார் பாடி அருளிய திருமாலையை ஒத்திருக்கின்றன. அன்றியும் திருமாலையின் பதினேழாம் பாசுரத்தின் பின் இரண்டு அடிகளே திருக்குறுந்தாண்டகத்தின் பதின்மூன்றாம் பாசுரத்தின் பின் இரண்டடிகளாக அமைந்திருக்கின்றன. அப்பாசுரங்கள் இரண்டையும் அடியிற் காண்க.

**அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்**

விரும்பிநின் றேத்த மாட்டேன்
விதியிலேன் மதியொன் றில்லை
இரும்புபோல் வலிய நெஞ்சம்
இறையிறை உருகும் வண்ணம்
சுரும்பமர் சோலை சூழ்ந்த
அரங்கமா கோயில் கொண்ட
கரும்பினைக் கண்டு கொண்டென்
கண்ணிணை களிக்கு மாறே.

—(திருமாலை பா. 17.)

இரும்புநன் றுண்ட நீரும் போதரும் கொள்க என்றன்
அரும்பிணி பாவம் எல்லாம் அகன்றன என்னை விட்டுச்
சுரும்பமர் சோலை சூழ்ந்த அரங்கமா கோயில் கொண்ட
கரும்பினைக் கண்டு கொண்டென் கண்ணிணை களிக்கு மாறே.
—(திருக்குறுந்தாண்டகம், பா. 13.)

இவர் தமக்குத் திருமாலையில் உள்ள ஈடுபாட்டின் அறிகுறியாக அவ்விரண்டடிகளைத் தம் பாசுரத்தில் அமைத்துக்கொண்டிருப்பர் எனத் தோன்றுகின்றது.

ஆனால், முன்னோர் பாடிய பாக்களின் அடிகளும் தொடர்களும் பின்னோர் பாடிய பாக்களில் அமைந்து வருதலைத் தொகை நூற்களுள்ளும் சிலப்பதிகாரம் மணிமேகலை முதலிய பழைய நூற்களுள்ளும் காணலாம். அங்ஙனம் அமைதற்கு உரிய காரணங்களை ஈண்டு ஆய்ந்து உரைத்தல் ஏற்றது அன்றாம் என்க.

திருமங்கை மன்னர் திருநெடுந்தாண்டகத்தின் இரண்டாம் பாசுரத்தில் 'உலக முதல்வனாகிய ஆதிபகவன் ஒருவனே; அவனே அயன், அரன், அரி என்னும் மூன்று வடிவில் விளங்குகின்றான். அம்மூன்று வடிவங்களுள் அரி வடிவமே என்மனத்திற்கு இனிய வடிவமாகும்' என்று ஓதுவார் உள்ளம் தெளிவு கொள்ளக் கூறியிருக்கின்றனர். அப்பாசுரத்தை அடியிற் காண்க.

எண்சீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

பாருருவில் நீரெரிகால் விசும்பும் ஆகிப்
பல்வேறு சமயமுமாய்ப் பரந்து நின்ற
ஏருருவில் மூவருமே என்ன நின்ற
இமையவர்தம் திருவுருவே றெண்ணும்போது*

---

* 'போது வோருருவம்' என்பதிற் குற்றுகரத்தின்முன் உயிர் வர, அது, கெடாமல் இடையில் வகர உடம்படு மெய் தோன்றிற்று என்க.

வோருருவம் பொன்னுருவம் ஒன்று செந்தீ
ஒன்றுமா கடலுருவம் ஒத்து நின்ற
மூவுருவும் கண்டபோ தொன்றும் சோதி
முகிலுருவம் எம்மடிகள் உருவம் தானே.

திருமங்கை மன்னர் திருமகள் நாதனிடத்து மடை கடந்து பாயும் தமது அன்பின் பெருக்கால் திருநெடுந் தாண்டகத்தில் தம்மைத் தலைவியாகவும் திருமகள் நாதனைத் தலைவனாகவும் கொண்டு பாடும் பாசுரங்கள் ஓது வார்தம் உள்ளத்தைக் கொள்ளை கொள்வனவாய் விளங்கு கின்றன. அவற்றுள் ஒன்றை அடியிற் காண்க.

நெஞ்சுருகிக் கண்பனிப்ப நிற்கும் சோரும்
நெடிதுயிர்க்கும் உண்டறியாள் உறக்கம் பேணாள்
நஞ்சரவில் துயிலமர்ந்த நம்பீ என்னும்
வம்பார்பூம் வயலாலி மைந்தா என்னும்
அஞ்சிறைய புட்கொடியே ஆடும் பாடும்
அணிஅரங்கம் ஆடுதுமோ தோழீ என்னும்
என்சிறகின் கீழடங்காப் பெண்ணைப் பெற்றேன்
இருநிலத்தோர் பழிபடைத்தேன் ஏபா வமே.

(திருநெடுந்தாண்டகம், பா. 12.)

இவரைப்பற்றி முன்னோர்கள் கூறியவற்றை அடியில் வரும் சில செய்யுட்களால் அறிக.

### எம்பெருமானர் (இராமாநுசர்) அருளிச் செய்தது

**நேரிசை வெண்பா**

"வாழி பரகாலன் வாழி கலிகன்றி
வாழி குறையலூர் வாழ்வேந்தன்—வாழியரோ
மாயோனை வாள்வலியால் மந்திரங்கொள் மங்கையர்கோன்
தூயோன் சுடர்மான வேல்."

## ஆழ்வான் (கூரத்தாழ்வான்) அருளிச் செய்தது

### கட்டளைக் கலித்துறை

"நெஞ்சுக் கிருள்கடி தீபம் அடங்கா நெடும்பிறவி
நஞ்சுக்கு நல்ல அமுதம் தமிழ்நன் னூற்றுறைகள்
அஞ்சுக் கிலக்கியம் ஆரண சாரம் பரசமயப்
பஞ்சுக் கனலின் பொறிபர காலன் பனுவல்களே"

## எம்பார் அருளிச் செய்தது

### நேரிசை வெண்பா

"எங்கள் கதியே இராமா நுசமுனியே
சங்கை கெடுத்தாண்ட தவராசா—பொங்குபுகழ்
மங்கையர்கோன் ஈந்த மறையா யிரமனைத்தும்
தங்குமனம் நீஎனக்குத் தா."

## இவர் அவதரித்த மாதமும் நாளும்

### நேரிசை வெண்பா

"பேதைநெஞ்சே இன்றைப் பெருமை அறிந்திலையோ
ஏது பெருமையின் றைக்கென்னில்—ஓதுகின்றேன்
வாய்த்தபுகழ் மங்கையர்கோன் மாநிலத்தில் வந்துதித்த
கார்த்திகையிற் கார்த்திகைநாள் காண்."

### வாழி திருநாமம்

*கலந்ததிருக் கார்த்திகையிற்கார்த் திகைவந்தோன் வாழியே
காசினியில் ஒண்குறைய லூர்க்கோமான் வாழியே
நலந்திகழா யிரத்தெண்பத் துநாலுரைத்தான் வாழியே
நாலைந்தும் ஆறைந்தும் நமக்குரைத்தான் வாழியே
இலங்கெழுகூற் றிருக்கைஇரு மடலீந்தான் வாழியே
இம்மூன்றில் இருநூற்றிருபத் தேழீந்தான் வாழியே
நலந்திகழும் குமுதவல்லி மணவாளன் வாழியே
வாட்கலியன் பரகாலன் மங்கையர்கோன் வாழியே

---

* இச் செய்யுளில் 'கார்த்திகையிற்கார்த்' எனவும், 'இருநூற்றிருபத்' எனவும் இரண்டு நாலசைச் சீர்கள் வந்திருக்கின்றன. இங்ஙனம் நாலசைச் சீர்கள் பாவினங்களுள் அருகிவருதலாம் என்பதனை யாப்பருங்கலக் காரிகை, உறுப்பியல், எட்டாம் சூத்திரத்தின் விசேட உரையை நோக்கி அறிக.

ஆறாயிரப்படி குருபரம்பராப் பிரபாவத்திற் சிலருடைய வரலாறுகளின் இடையில் ( ) இவ்வித இருபிறை வட்டங்களுக்குள் சில வரலாறுகள் இருக்கின்றன. அவற்றை, 'இக்குண்டலித கிரந்தங்கள் சில பிரதிகளிற் காணப்படுகின்றன' என்று இந்நூலை அச்சிட்டவர்களாகிய சே. கிருஷ்ணமாசாரியராலும், வை. மு. கோபால கிருஷ்ணமாசாரியராலும் அடிக்குறிப்பிற் குறிக்கப்பட்டிருக்கின்றன. அவை அந்நூலாசிரியராகிய பின்பழகிய பெருமாள் சீயர் மொழி நடையின் வேறுபட்டனவாகவே இருக்கின்றன. ஆதலின், அவை பிறராற் பிற்காலத்து அந்நூலின் இடையிற் சேர்க்கப்பட்டவே அன்றி அந்நூலாசிரியரால் எழுதப்பட்டவை அல்ல என்பது அவற்றைச் சிறிது உற்று நோக்குவார்க்கும் இனிது விளங்கும். திருமங்கை மன்னர் வரலாற்றினும் அவ்வாறே சில வரலாறுகள் இடையிற் சோக்கப்பட்டிருக்கின்றன.

அவை, அந்நூலாசிரியர் மொழி நடையின் வேறுபட்டனவா யிருப்பது மட்டும் அன்றித் திருமங்கை மன்னர் திருமொழிகளின் * நாந்திச் செய்யுட்களில், தம்மைப்பற்றி, "அலைநீ ருலகுக் கருளே புரியும், காரார் யுயற்கைக் கலிகன்றி" (3-ம் பத்து, 2-ம் திருமொழி) எனவும், "ஆலிமன் அருள்மாரி" (4-ம் பத்து, 2-ம் திருமொழி) எனவும், "காரார் புயல் தடக்கைக் கலியன் ஒலிமாலை" (6-ம் பத்து, 3-ம் திருமொழி) எனவும், "பொய்ம்மொழி யொன்றில்லாத மெய்ம்மை யாளன், புலமங்கைக் குல வேந்தன் புலமை ஆர்ந்த, அம்மொழிவாய்க் கலிகன்றி" (6-ம் பத்து, 6-ம் திருமொழி) எனவும் கூறியவற்றினோடு மாறுபட் டிருத்தலாலும் அவ்வரலாறுகள் பிறராற் கற்பனையாகச் சேர்க்கப்பட்டனவேயாம் என்

---

* நாந்தச் செய்யுள்

பதில் ஐயுறவில்லை; ஆதலின், அவற்றை நீக்கி மற்றை வரலாறுகளே ஈண்டு எழுதப்பட்டன. அன்பர்கள் இவற்றை ஆய்ந்து கொண்டருள்க.

திருமங்கை மன்னர் திருமகள் நாதனுடைய சங்கு, சக்கரம், வில், வாள், தண்டு என்னும் ஐம்படைகளுள், ஒன்ருகிய வில்லின் அமிசம் ஆனவர் என்று நூற்கள் கூறுகின்றன.

பெரிய திருமொழி, 2-ம் பத்து, 8-ம் திருமொழியின் ஈற்றுப் பாசுரத்தினுலும், 2-ம் பத்து, 9-ம் திருமொழியாலும் திருமங்கை மன்னர் அவதரித்த காலத்தை அறிதலாம் எனக் கால ஆராய்ச்சியில் தேர்ந்தோர் கூறுகின்றனர்.

திருமங்கை மன்னர் திருவருள் என்றும் வாழ்க.

# 5. குலசேகரர்

கட்டளைக் கலித்துறை

**ஆரங் கெடப்பரன் அன்பர்கொள் ளாரென் றவர்களுக்கே
வாரங் கொடக்குடப் பாம்பிற்கை இட்டவன் மாற்றலரை
வீரங் கெடுத்தசெங் கோற்கொல்லிக் காவலன் வில்லவர்கோன்
சேரன் குலசே கரன்முடி வேந்தர் சிகாமணியே.**

## குலசேகரர் அவதாரம்

தமிழகத்துள், "வேழம் உடைத்து மலைநாடு" என்று ஔவையார் கூறியருளியபடி ஆநிரைகள் என யானைகளின் நிரைகள் பரவி விளங்கும் வளம் உடையது சேர நாடு. அதன்கண் வானை அளாவிய குவடுகளின் வரிசைகளைக் காண்ட மலைகள் எங்கும் நெருங்கிப் பொலிதலால், அதனை மலைநாடு என்றும் கூறுவர்.

அவ்வரைகளினின்று பெருகிவரும் ஆறுகளின் பெருக்கால் வயல்வளம் பெருகி, மற்றும் பலவகையாகிய பொருள்வளங்கள் அந்நாட்டின்கண் மிக்கு விளங்கும். அன்ன தன்மையினதாகிய அந்நாட்டின் தலைநகரம் வஞ்சிக்களம் என்பது. அந்நகரத்து மாளிகைகள், தம்மீது கொடிகள் விளங்கலாலும், முடிகள் முகிலை அணுகலாலும், பொன்னும் மணியும் பொலிதலாலும், போர் மறவர்களாகிய களிறுகளின் கூட்டத்தாலும், அழகிய மாதர்களாகிய பிடிகளின் ஈட்டத்தாலும் அந்நாட்டு மலைகளையே போன்று பொலியும். அந்நகரம், (1) சேரமான்-அந்துவஞ்சேரலிரும் பொறை, (2) சேரமான்-கடலோட்டிய வேல்கெழுகுட்டுவன், (3) சேரமான்-கடுங்கோவாழியாதன், (4) சேரமான்-கருவூரேறிய ஒள்வாட்கோப்பெருஞ் சேரலிரும்பொறை, (5) சேரமான்-குட்டுவன் கோதை,

(6) சேரமான்-குடக்கோச் சேரலிரும்பொறை, (7) சேரமான்-குடக்கோ நெடுஞ்சேரலாதன், (8) சேரமான்-கோக்கோதைமார்பன், (9) சேரமான்-சிங்கற் பள்ளித்துஞ்சிய செல்வக் கடுங்கோ வாழியாதன், (10) சேரமான்-தகடூர் எறிந்த பெருஞ்சேர லிரும்பொறை, (11) சேரமான்-பாமூர் எறிந்த நெய்தலங்கானல் இளஞ் சேட் சென்னி, (12) சேரமான்-பாலைபாடிய பெருங்கடுங்கோ, (13) சேரமான்-பெருஞ்சேரலாதன், (14) சேரமான் -பெருஞ்சோற்று உதியஞ்சேரலாதன், (15) சேரமான் மாந்தரஞ்சேர லிரும்பொறை, (16) சேரமான் மாவெண்கோ, (17) சேரமான்-யானைக்கட்சேய் மாந்தரஞ்சேர லிரும்பொறை முதலிய பெருஞ் சிறப்பினை உடைய சேர அரசர்கள் அரியணையமர்ந்து செங்கோல் ஓச்சுதற்கு இடனாகிய அரும்பதி ஆகும். அச்சேர மன்னர் மரபில் திடவிரதன் என்னும் அன்புக்கும் அருளுக்கும் இருப்பிடம் ஆனவனாகிய வேந்தர்பிரான் தோன்றினன். அவன் கலையறிவிற் சிறந்தவன்; திருமகள் நாதன்பால் நீங்காத அன்புடையவன். அவன் பகைவர்களுக்குக் காடகவுறையுளும், தன்பால் வரும் பரிசிலர்க்கு ஆடகத்தொகையும் அளிக்கும் வன்மையும் வண்மையும் உடையவன். குடிகளுக்கு ஆருயிர் என விளங்கி, அவர்களை எவ்வித இன்னலும் எய்தாதபடி புரப்பவன்; நடுநிலை கடவாத நல்லியல் வேந்தன்.

அவ்வேந்தர் வேந்தனுக்கு அவனது அருந்தவத்தின் அணிகெழும் உரு எனவும், அணிகெழும் உருவார் அருந்தமிழ் மக்கள் விழையும் வியனொளிமணி எனவும், மணிகளுக்கிடனாகிய திருப்பாற்கடலிற் பள்ளிகொண்டருளும் திருமகள்நாதன் அன்பினுக்கு உறைவிடம் எனவும், அன்பிற்கு உறைவிடமாகிய அடியவர்களின் அரும்பெறற்

செல்வம் எனவும் உலகம் போற்றற்கு உரிய ஒரு மைந்தர் குணக்கடலினின்று உதயமாகும் இளம்பரிதி என உதித்தனர்.

அவ் வருமருந்தன்ன, மகப்பேற்றால் அவ்வேந்தர் வேந்தன் அடைந்த மகிழ்ச்சிக்கு ஒப்புக் கூற எண்ணின், சிராமனது திருவவதாரத்தால் தசரதச் சக்கரவர்த்தி அடைந்த மகிழ்ச்சியை அன்றிப் பிறிதொன்றினையும் ஒப்புக் கூறல் இயலாது. அங்ஙனம் மகிழ் வெய்திய அம்மன்னர் முகந்து கொடுத்த பொருளின் அளவை உரைக்கப் புகின், 'வறியவர்கள் செல்வர்கள் எனப் பொலிவுற்றனர்; புலவர் இனிப் பொருள்வேண்டிப் பிறரைப் பாடுதல் வேண்டா என்னும் துணிவு கொண்டனர்; வேதியர்களின் கையில் தாரையாக வார்த்த நீர் ஆறுகப் பெருகிக் கடலை அடைந்தது; சான்றோர்கள், "வேந்தே, நின் தடக்கைக்கு ஒப்பாகிய வண்மையைப் பெறுதற்பொருட்டு முகில்கள், சூரியன் வெம்மையைத் தம்மேல் தாங்கிக்கொண்டு கடுந்தவம் புரியத் துணிவு கொண்டன என்றால், நின் தடக்கை வண்மை எங்கள் சொல்லிற் சொல்லி அடங்குவது ஆகுமோ?" என்று புகழ்ந்து மகிழ்ந்தார்கள்' என்று கூறுவதன்றி அப்பொருளின் அளவு இத்துணையது என்று கூறுதல் இயலாது. உலகம் உய்ய அவதரித்த அம்மைந்தர்க்குப் பத்து நாட்கள் செய்வன செய்து பின் மலர்க்குழல் மங்கையர்கள் மங்கலப்பாட்டுக்கள் பாடச், சான்றோர்கள் வாழ்த்தச் செந்தமிழ் நங்கை களிகூர, இன்பம் மிகுக்கும் இயம் பல ஒலிக்க, முதியவர்கள் கூடி நன்கு ஆய்ந்து சேரகுலம் வாழ்வதாக எனக் 'குலசேகரன்' என்று பெயர் இட்டார்கள். ஆனால், திருமகளும் நாமகளும், 'இச்செல்வன் வைணவ குலசேகரன் ஆகுக' என வாழ்த்துதல் போல எழிலின மங்கையர்களின் செந்தாமரை

மலர்போன்ற செவ்விய முக ஒளியும் அவர்களுடைய வெண்டாமரை மலர்போன்ற வெண்முறுவல் ஒளியும் எங்கும் பரவி விளங்கின.

## குலசேகரர் வளர்ச்சி

அம் மைந்தர், குழலினும், யாழினும் இனிய மழலை மொழிகளை மொழிந்தும், முத்தம் அளித்தும், செங்கீரை ஆடியும், சப்பாணி கொட்டியும் சிறுதேர் உருட்டியும் தம் பெற்றோர்களைக் களிப்பென்னும் கடலில் மூழ்கச் செய்தனர். அவர்களும் அவரைத் தங்கள் ஆருயிரினுஞ் சிறக்கக் கொண்டு, கண்ணை இமைகள் காப்பதுபோலக் காத்து வளர்த்து வந்தார்கள். அவர்கள் அம்மைந்தரை ஐந்து வயதானவுடன் நல்லாசிரியர்பால் கல்வி கற்க விடுத்தனர். அவரும் செந்திறத்த தமிழ் மொழியினும் வடமொழியினும் கற்றற்கு உரியனவாகிய பல நூற்களையும் ஐயம் திரிபறக் கற்றுத் தெளிந்து, 'செவ்விய மதுரம் சேர்ந்த நற்பொருள்களை யுடையனவும் தீஞ்சொற்களைக் கொண்டனவும், கற்றோர் விழையும் சிறப்பும் நுட்பமும் வாய்ந்தனவும் ஆகிய செந்தமிழ்க் கவிகளையும், வடமொழிக் கவிகளையும் பாடும் வன்மையுடையவரானர். அன்றியும், மன்னர்கட்கு உரிய யானை ஏற்றம், குதிரையேற்றம் முதலியவற்றையும், வில், வாள் முதலிய படைக்கலங்களையும், நன்கு பயின்று தேர்ந்து, 'இவரை ஒப்பாரும் மிக்காரு' மாகிய வீரர்கள் இல்லை என்று ஆன்றோர்கள் யாவரும் புகழும்படி வீரத்திற் சிறந்தவராய் விளங்கினர். அவர்பால் அமைந்த அறிவு, அன்பு, அருள், வீரம் முதலிய குணங்களைக் கண்டு, அறிஞர்கள் யாவரும் அவரைச் 'சான்றோர் எனப் புகழ்வாராயினர்.

அதனால், அவர்தம் தந்தையார் 'நமக்குப்பின் இச் செல்வன் இந்நாட்டை இனிது புரந்துவருவான்' என்று கவலை யற்று மகிழ்வெய்தி அவரை இளவரசராக்கினர்.

குலசேகரர் அரசு ஏற்றலும் மணம் புரிந்துகொள்ளலும்

குலசேகரர், அவ்வாறே தம்முடைய தந்தையாருக்குப் பின்பு பெரியோர்கள் கூடி முடி சூட்டப்பெற்று, அரசினை ஏற்று, வலியற்றவர்களை வலியவர்கள் வருத்தாமலும், மக்கள் ஏழைமையால் வருந்தாமலும், கல்வி யின்றி அறியாமை என்னும் இருட்சிறையிற் புகாமலும், நடுநிலை பிறழாமல் செங்கோலோச்சி நாட்டை இனிது புரப்பாராயினர். அதனால் அவரை மற்றை அரசர் கள் எவரினும் சிறந்தார் என அறிஞர் யாவரும் புகழ்வா ராயினர். அக்காலத்துச் சோழ அரசனும் பாண்டி மன்ன னும் அது கண்டு அவர்பால் அழுக்காறு கொண்டு அவரை வந்து எதிர்த்தார்கள். அவர், அவ்வேந்தர்கள் எல்லோ ரையும் வென்று,

"கொல்லிநகர்க் கிறை கூடல் கோமான்"
—(பெரு. திரு. 6-ம் திருமொழி)

"கொல்லி காவலன் மாலடி முடிமேல்
கோலமாம் குலசேகரன்"
—(பெரு. திரு. 6, 7-ம் திருமொழி)

"கூரார்ந்த வேல்வலவன் கோழியர்கோன்"
—(பெரு. திரு. 9-ம் திருமொழி)

எனவும்,

"கொல்லியலும் படைத்தானைக் கொற்ற ஒள்வாள்
கோழியர் கோன்குடைக் குலசேகரன்"
—(பெரு. திரு. 10-ம் திருமொழி.)

எனவும், இவர் தாமே நாந்திப் பாசுரங்களிற் கூறியபடி சேரநாடு, சோழநாடு, பாண்டியநாடு என்னும் மூன்றுநாடு

களுக்கும் தனிப்பேரரசராய்த் தமிழகத்தின் சக்கரவர்த்தி யாய் விளங்கினர்.

பாண்டிய வேந்தன் அவரது ஆண்மையின் திறத்தைக் கண்டு தன் செல்வப் புதல்வியை அவருக்கு இல்லறக் கிழத்தியாய் விளங்கும்படி மணம் புரிவித்தனன்.

## திருமகள் நாதன் குலசேகரருக்கு மயர்வற மதிநல மருளல்

அவர் இங்ஙனம் மாற்றவரை வீரங்கெடுத்து, மறக்கள வேள்வி பல புரிந்து வென்றியே வேண்டிய மனத்தினராய் இருக்கத், திருமகள்நாதன், அவர்பால் உள்ள நான் என்னும் அகப்பற்றும் எனது என்னும் புறப்பற்றும் நீங்கி, எல்லாம்,

"கரந்தசில் இடந்தொறும் இடந்திகழ் பொருடொறும்,
கரந்தெங்கும் பரந்துளன்"

—(திருவாய்மொழி, முதற்பத்து, முதல் திருவாய்மொழி பா. 10.)

ஆகிய எம்பெருமான் அருள் வடிவமே என்று கொண்டு,

"புல்லறி வாண்மை பொருந்தக் காட்டிக்
கொல்வன முதலா வல்லன முயலும்
இனைய செய்கை இன்பு துன்பளி
தொன்மா மாயப் பிறவியுள் நீங்காப்
பன்மா மாயத் தழுந்தும்"

—(நம்மாழ்வார், திருவாசிரியம், பா. 6.)

என்ற அருமறைப்பொருளை எண்ணி, எல்லா உயிர்களிடத்தும் அன்பும் அருளும் உடையவராய் விளங்கும்படி அவருக்கு 'மயர்வற மதிநலம்' அருளித், தனது 'உயர்வற உயர்நலம்' உடைய சொரூபத்தையும்,

"செக்கர்மா முகிலுடுத்து மிக்க செஞ்சுடர்ப்
பரிதி சூடிஅஞ் சுடர் மதியம் பூண்டு
பலசுடர் புனைந்த பவளச் செவ்வாய்த்
திகழ்பசும் சோதி மரதகக் குன்றம்
கடலோன் கைமிசைக் கண்வளர் வதுபோல்
பீதக வாடை முடிபூண் முதலா
மேதகு பல்கலன் அணிந்து சோதி
வாயவும் கண்ணவும் சிவப்ப மீதிட்டுப்
பச்சை மேனி மிகப்ப கைப்ப
நச்சு வினைக்கவர் தலையரவி னமளியேறி
எறிகடல் நடுவுள அறிதுயில் அமர்ந்து"
— (நம்மாழ்வார், திருவாசிரியம் பா. 1.)

விளங்கும் தன் படிவத்தினையும், பத்துடை அடியவர்க்கு எளியவனாகி விளங்குதல் முதலிய தன் கலியாண குணங்களையும், உயிர்களின் பொருட்டுத் தான் செய்யும் தண்ணருட் செயல்களையும் அவர் உணரும்படி கடைக்கணித்தருளினன். அதனால், குலசேகரருக்குக் 'கொற்ற வேற்றானை' கொண்டு மாற்றலரை நூறிப் பெறும் 'வென்றியே வேண்டி வீழ்பொருட் கிரங்கி' நிற்கும் தமது நிலையில் வெறுப்பு உண்டாயிற்று. உலகின் இயல்பையும், இறைவனாகிய திருமகள்நாதன் அருட்பெருக்கையும் எண்ணுந்தோறும், "அந்தோ! நம்முடைய அறியாமை இருந்தபடி என்னே! நாம் இதுகாறும் 'உலகநூ லோதி'[1] உணர்ந்தன எல்லாம் கலகல கூஉம் துணையாய்ப் போவனவன்றிப் பிறப்பினால் எய்தும் தடுமாற்றம் போதும் துணையாகுமோ? என்னே நம்முடைய உணர்வும் செயலும் இருந்தவண்ணம்!" என்பார். "அந்தோ! நாம் இதுகாறும்

1. நாலடியார், கல்வி, செய். 10.

நம்முடைய நாட்களைச்[1] "சேமமே வேண்டித் தீவினை பெருக்கி," 'ஐம்புலன் கருதும் கருத்துளே மனத்தைத் திருத்தி'வைத்துக் கழித்தோம். அந்நாட்கள் 'ஊமனார் கண்ட கனவிலும் பழுதாய்க் கழிந்தொழிந்தன" என்பார்.[2] "மூலமே என்ற கரி முன்வந்திடர் தொலைத்து, நீலமேகம்போல" நின்றதும், வேடர் வேந்தன் ஆகிய குகப்பெருமாளை நோக்கி,

[3] "ஏழை ஏதலன் கீழ்மகன் என்னா
 இரங்கி மற்றவற் கின்னருள் சுரந்து
மாழை மான்மட நோக்கியுன் தோழி
 உம்பி எம்பி என்று"

சொல்லி, அதனோடு அமையாது, என் 'தோழன் நீ' என்று கூறியதும்,

[4] "ஆயர் கொழுந்தாய் அவரால் புடையுண்டதும், விதுரன் விருந்தினன் ஆகியதும், அரசவையில் கொடியனாகிய துரியோதனனால் அல்லல் உற்று மனங்கரைந்து 'கோவிந்தா' என்று அழைத்த ஐவர்தம் தேவிக்கு அளவில் பொன் ஆடைகள் அருளியதும் ஆகிய எம்பெருமானுடைய அருஞ் செயல்களை எண்ணி, நாம் மனம் கரைந்து ஏத்தாது கழித்த நாட்கள் யாவும் பிறந்தும் பிறவாத நாட்களே யாகும்," என்பார்.

[5] "சுரும்பமர் சோலை சூழ்ந்த
 அரங்கமா கோயில் கொண்ட
கரும்பினைக் கண்டு கொண்டென்
 கண்ணிணை களித்தல் இன்றி,"

---

1. பெரிய திருமொழி முதற்பத்து பா. 3, 4, 8.
2. திருவேங்கடமாலை, தற்சிறப்புப்பாயிரம்.
3. பெரிய திருமொழி 5-ம் பத்து, 8-ம் திருமொழி பா. 1.
4. திருவாய்மொழி, முதற்பத்து, 7-ம் திருவாய்மொழி பா.3.
5. திருமாலை பா. 17.

[1] " அறஞ்சுவர் ஆகி நின்ற
அரங்கனார்க் காட்செய் யாதே
புறஞ்சுவர் கோலம் செய்து "
என் வாழ்நாளை வீழ்நாள் ஆக்கிவிட்டேனே' என்பார்.

**எண்சீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்**

[2] " இருளிரியச் சுடர்மணிகள் இமைக்கும் நெற்றி
இனத்துத்தி அணிபணமா யிரங்கள் ஆர்ந்த
அரவரசப் பெருஞ்சோதி அனந்தன் என்னும்
அணிவிளங்கும் உயர்வெள்ளை அணையை மேவித்
திருவரங்கப் பெருநகருள் தெண்ணீர்ப் பொன்னி
திரைக்கையால் அடிவருடப் பள்ளி கொள்ளும்
கருமணியைக் கோமளத்தைக் கண்டு கொண்டென்
கண்ணிணைகள் என்றுகொலோ களிக்கும் நாளே,"
என்பார்.

**தரவு கொச்சகக் கலிப்பா**

[3] " கம்பமத யானைக் கழுத்தகத்தின் மேலிருந்து
இன்பமரும் செல்வமும் இவ்வரசும் யான்வேண்டேன்
எம்பெருமான் ஈசன் எழில்வேங் கடமலைமேல்
தம்பகமாய் நிற்கும் தவமுடையேன் ஆவேனே "
என்பார்.

**தரவு கொச்சகக் கலிப்பா**

[4] " தருதுயரம் தடாயேலுன் சரணல்லாற் சரணில்லை
விரைகுழுவு மலர்ப்பொழில்சூழ் வித்துவக்கோட் டம்மானே
அரிசினத்தால் ஈன்றதாய் அகற்றிடினும் மற்றவள்தன்
அருள்நினைந்தே அழுங்குழவி அதுவேபோன் றிருந்தேனே "
என்பார்.

---

1. திருமாலை பா. 6.
2. பெருமாள் திருமொழி, முதல் திருமொழி பா. 1.
3. ,, ,, நாலாந் திருமொழி, பா. 5.
4. ,, ,, ஐந்தாந் ,, ,, 1.

எழுசீர்க்கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

"தேட்ட ருந்திறல் தேனி னைத்தென்ன
ரங்க னைத்திரு மாதுவாழ்
வாட்ட மில்வன மாலை மார்வனை
வாழ்த்தி மால்கொள்சிந் தையராய்
ஆட்ட மேவிய லர்ந்த ழைத்தயர்
வெய்து மெய்யடி யார்கள்தம்
ஈட்டம் கண்டிடக் கூடு மேலது
காணும் கண்பயன் ஆவதே"

என்பார். இங்ஙனம் அவர் உயர்வற உயர்நலம் உடையவன் ஆகிய திருமகள்நாதனிடத்தும், அம்மணி முகில்வண்ணன் அடியார்களிடத்தும் ஆர்வமிக்க உள்ளத்தர் ஆனார்.

அவர் ஒவ்வொருநாளும்,

[1]"தோய்த்த தண்டயிர் வெண்ணெய் பாலுடன்
உண்ட லும்முடன் றாய்ச்சிகண்
டார்த்த தோளுடை எம்பி ரானென்
னரங்க னுக்கடி யார்களாய்
நாத்த ழும்பெழ நார ணாவென்ற
ழைத்து மெய்தழும் பத்தொழு
தேத்தி யின்புறும்"

தொண்டர்கள் பலரை வருவித்து அவர்களுடைய சேவடிகளை அன்புடன் ஏத்தி வாழ்த்தி ஆராதிக்கலானார்.

## குலசேகரர் இராமாயணம் கேட்டல்

இங்ஙனம் ஞானமும், ஆதிபகவனாகிய திருமகள்நாதன் அன்பும், அவன் அடியார்கள் அன்பும் உடையவராகிய குலசேகரருக்கு,

---

1. பெரு. திருமொழி, 2-ம் திருமொழி பா. 4.

[1]"அங்கணெடு மதிள்புடைசூழ் அயோத்தி என்னும்
அணிநகரத் துலகனைத்தும் விளக்கும் சோதி
வெங்கதிரோன் குலத்துக்கோர் விளக்காய்த் தோன்றி
விண்முழுதும் உயக்கொண்ட வீரன் றன்"

காதையைக் கேட்டலில் விழைவு மிக்கது. அதனால், [2]"வாங்கரும் பாதம் நான்கா" வகுத்தவரும் அருந்தவச் செல்வரும் ஆகிய வால்மீகர் அருளிய இராம காதையைத் திருமகள் நாதன்பால் அன்பு நீங்காதவரும், மெய்ஞ் ஞானம் உடையவருமாகிய பெரியார் ஒருவர் நாடோறும் கூறக் குலசேகரர் கேட்டுவரலானார். அவர் இராமாயணம் கேட்கும்போது அவர் மனம் முழுதும் அதில் ஆழ்ந்துவிடும். அடிக்கடி அவர் கண்களினின்று நீர் பெருகும். அவருக்கு இராம காதையைக் கூறும் பெரியார், பரந்தாமனாகிய அப்பெருமான், இவ்வுலகின்கண் 'தடவரைத்தோள் தசரதன்றன் செல்வனாகத் தோன்றியதும், அங்ஙனம் தோன்றிய அப்பெருமான் வசிட்டர்பால் கலைகள் யாவும் ஓதி உணர்ந்து விளங்குகையில், வந்த மறைமுனிவராகிய விசுவாமித்திரருக்குப்பின் இலக்குமணனோடு சென்றதும், இடைவழியில், [3]"வந்தெதிர்த்த தாடகைதன் உரத்தைக் கீறி" அவளை அழித்ததும், பின்னர் விசுவாமித்திர முனிவருடைய வேள்வியைக் காத்ததும், அப்போது அவ்வேள்வியை அழிக்க வந்த "வல்லரக்கர் உயிர் உண்ட" போர்வன்மையும் செங்கமலத் திருமுகத்துச் சீதாப்பிராட்டிக்காகச் [4]"சினவிடையோன் சிலையிறுத்து" விளங்கிய தோள்வன்மையும், மழுவாளேந்தியவராகிய பரசுராமர் கொடுத்த வில்லை வளைத்து, அவரை வென்று வேந்தர்களுடைய பகையைப் போக்கியதும்,

1. பெரு. திருமொழி 10-ம் திருமொழி பா. 1.
2. க. நா. செ. 1.
3. பெரு. திரு. 10-ம் திரு. பா. 2.
4. " "

கைகேசியின் சொல்லால் பழைமை ஆகிய நகரைத் துறந்து கங்கையின் கரையை அடைந்ததும், அங்குப் பத்தியிற் சிறந்த குகன் வர, அவனது அன்பினுக்கு உவந்து, அவன் றன் ஒப்பறு நண்பு கொண்டதும், மறுநாள் அவன் கொணர்ந்த நாவாயில் ஏறிக் கங்கையைக் கடந்து வனம் போய்ப் புக்கதும், அங்கு அறைதற்கு அரிய அன்பினை, உடைய பரதன் வரப், பாதுகையை அளித்துத் தான் வரும் வரையினும் அரசு புரியும்படி அவனை அயோத்திக்கு அனுப்பிவிட்டுப் பிறகு சித்திரகூடத்திற் சென்று தங்கிய தும், பின்பு தமிழ் முனிவராகிய அகத்தியரைக் கண்டு வணங்கி, அவர் கொடுத்த வில்லைப் பெற்றுக்கொண்டு மகிழ்வெய்தியதும், பிறகு அங்கு வந்து, பிராட்டிக்குத் துன் பம் இயற்றத்தொடங்கிய சூர்ப்பநகையின் மூக்கை நீக்கிய தும், ஆகிய வரலாறுகளைக் கூறிப் பின்பு குலசேகரரை நோக்கிச், "சேரர்குல திலகராய்த் தோன்றிய வேந்தர் வேந்தரே, பின் சூர்ப்பநகை செய்தவற்றையும், சீதை மணாளன், கரன் முதலிய வல்லரக்கருடன் போர்புரிந்த திறத்தையும் கூறுகின்றேன், கேட்பீராக," என்று கூறத் தொடங்கினர்.

"வேந்தர் வேந்தரே, பின்னர்ச் சூர்ப்பநகை இராம லக்குமணர்களை நோக்கி,

அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

* "ஏற்றநெடுங் கொடிமூக்கும் இருகாதும்
முலையிரண்டும் இழந்து வாழ
ஆற்றுவனே வஞ்சனையால் உமை யுள்ள
பரிசறிவான் அமைந்த தன்றே

---

* ஈண்டுக் கூறுவன கம்பராமாயணத்தில் உள்ளவை. 'குல சேகரருக்கு வால்மீகராமாயணம் கூறப்பட்டது' என்று கூறி, ஈண்டுக் கம்பராமாயணத்தில் உள்ளவற்றைக் கூறக்கூடுமோ?

காற்றினிலும் கனலினிலும் கடியானைக்
 கொடியானைக் கரனை உங்கள்
கூற்றுவனை இப்பொழுதே கொணர்கின்றேன்
 என்றுசலம் கொண்டு போனாள்."
--(க. ஆ. சூர்ப்பநகைப்படலம் செ. 143.)

அவ்வாறு சினங்கொண்டு சென்ற சூர்ப்பநகை, சனத்தானத்திற் சென்று, கரனைக் கண்டு, தாம்பு எனத் தோன்றும் மூக்கினின்றும் மற்ற உறுப்புக்களினின்றும் பெருகும் இரத்தமும் தன் கூந்தலும் அவன் தாள்களிற் படியும்படி செவ்வானம்தன் மேலே படரப்பெற்ற மேகம் வீழ்ந்தாற் போல வீழ்ந்து அரற்றலாயினள். அவள் அழுகையின் ஒலியானது, அரக்கர் அழிதற்கு உரிய நாள் நெருங்கிவிட்டதை அறிந்து, எமனுடைய கட்டளையினால் எமனுடைய பணியாளர்களால் அடிக்கப்படும் முரசங்களின் ஒலியைப் போன்றிருந்தது. அதனைக்கண்ட கரன், நெருப்புப் பந்துகளைப்போலக் கண்கள் சிவக்கச் சினங்கொண்டு சூர்ப்பநகையை நோக்கி, "உனக்கு இத்தகைய கொடுமையைச் செய்தவர் யார்?" என்று கேட்டான். சூர்ப்பநகை, "தவவேடத்தை மேற்கொண்டவர்களும், கட்டமைந்த வில்லையும் வாளையும் கையில் ஏந்தியவர்களும், மன்மதனைப் போன்ற அழகிய மேனியை யுடையவர்களும், அறத்தினின்று நீங்காத நல்லியல்பு அமையப் பெற்றவர்களுமாகிய தசரதன் மைந்தர்களே எனக்கு இத் துன்பத்தை உண்டாக்கினார்கள். அவர்கள் உன் வன்மை

எனின், கம்பர்,
 'தேவ பாடையின் இக்கதை செய்தவர்
 மூவ ரானவர் தம்முளும் முந்திய
 நாவி னானுரை யின்படி நான்றமிழ்ப்
 பாவி னாலிது ணர்த்திய பண்பரோ'
என்றலின் கூடும் என்க.

யைச் சிறிதும் மதித்திலர். அறத்தை எங்கும் நிலைபெறச் செய்யவேண்டும் என்னும் எண்ணங்கொண்டவர்களாய், 'அறத்திற்கு மாறான அரக்கர்களை அழிக்கக்கடவோம்' என்னும் உறுதிகொண்டு அரக்கர்களைத் தேடித் திரிகின்றார்கள். மண்ணினும் வானினும் காணமுடியாத அழகினை உடைய பெண் ஒருத்தி அவர்களுடன் இருக்கின்றாள். சொல்லுதற்கு அரிய அழகினை உடைய அவளை யான் கண்டு, அவளை இராவணனுக்காக இலங்கைக்குக் கொண்டுபோக எண்ணி, அவள்மேற் பாய்ந்தேன். அவ் வீரர்கள், அதனைக் கண்டு என் மூக்கைத் துண்டித்து விட்டார்கள்" என்று கூறினாள்.

அதனைக் கேட்டவுடன், கரன், உலகமுழுதும் எரிந்து அழியும் என்று யாவரும் அஞ்சும்படி கண்கள் சிவந்து தோன்றச் சினம்கொண்டு, 'எனது தேர் வருக,' என்றான். அவன் அருகில் இருந்த பதினன்கு அரக்கர்கள் அதனைக் கேட்டு, "ஐய, தேவர்களும் கண்டஞ்சும் பேராற்றல் படைத்த தாங்களா இரண்டு எளிய மனிதர்கள்மீது போருக்குச் செல்வது? அஃது உம்முடைய வீரமாகிய வெள்ளுடையில் மாசு படிவிப்பதாகும். யாங்கள் செல்கின்றோம்," என்றார்கள். கரன், அவர்களை நோக்கி, "வீரர்களே, நீங்கள் நன்று சொன்னீர்கள். நான் சென்று இச்சிறுவர்களோடு போர் செய்யின் தேவர்கள் என்னைப் பார்த்துச் சிரிப்பார்கள். நீங்கள் சென்று, அவர்களை வென்று, அவர்கள் உயிரைக் குடித்து வம்மின்" என்றான்.

கண்டவுடன் பகைவர் அஞ்சியோடும்படி அமைந்த உருவத்தோற்றத்தினையும், மலையையும் நிலைகுலையச் செய்யும் தோள்வன்மையினையும் உடையவர்களாகிய அப் பதினல்வரும், சூலம், வாள், மழு, தோமரம், சக்கரம், கால

பாசம், கதை முதலிய படைகளைக் கையில் ஏந்திக் கொண்டு, சூர்ப்பநகை பின்தொடர்ந்து வரச் சென்று இராம இலக்குமணர்கள் உள்ள இடத்தை அடைந்தார்கள். உடனே சூர்ப்பநகை அவ்வரக்கர்களுக்கு இராம இலக்குமணர்களைச் சுட்டிக் காட்டினள்.

அவர்கள், "இவர்களைப் பிடித்து மேலே எறிந்து, கீழே விழாதபடி நாம் பற்றலாம்" என்பவர்களும், 'நம்மிறைவன் சொன்னபடி இவர்களை முடிப்போம்' என்பவர்களுமாய்ப் பன்னசாலையைச் சூழ்ந்துகொண்டார்கள். சீராமன், இலக்குமணனை நோக்கி "நீ சீதையைக் காத்துக் கொண்டிரு," என்று கூறி, கையில் வில்லை ஏந்திக்கொண்டு பன்னசாலையினின்று வெளியில் வந்தருளினன். அவ்வரக்கர்கள் கணைகள், சூலம் முதலிய படைகளை இராமன்மேல் எறிய, அப்பெருமான் அப்படைகளைச் சில கணைகளால் அழித்து, வேறு சில கணைகளை அவர்கள்மீது எய்தனன். அந்த வாளிகள் அவ்வரக்கர்கள் பால் ஓடின. அவ்வரக்கர்களுடைய தலைகள் அவர்கள் உடலை விட்டு ஓடின. அத்தீயவள், தன்னோடு வந்த அந்த அரக்கர்கள் களத்தில் அழிந்தொழியக், கைகளைத் தலைமேல் வைத்து அலறிக்கொண்டு கரனை நோக்கி ஓடினாள். அவள் ஓடின தோற்றம், வலிய அரிமா ஒன்று களிறுகளைக் கொன்று விடப், பிடியானது துதிக்கை தலைமேல் உறப், பிளிறிக்கொண்டு ஓடுதலைப்போன்றிருந்தது. அவளைக் கண்ட காவலர்கள் கரனிடம் ஓடினார்கள். கரன் தன் அரண்மனையினின்று வெளியில் ஓடிவந்தான். ஓடிவந்த அத்தீயவள் கரன் அடிகளில் வீழ்ந்து, "அந்தோ! அக்கருமுகில் வண்ணன் வாளி ஒன்று அப்பதினால்வர்தம் உயிர்களையும் வானேறச் செய்துவிட்டது" என்றாள்.

கரன், தன் கண்கள் குருதி பெருகி வருதல்போலச் சிவக்க வெகுண்டு, அருகில் இருந்த அரக்கர்களுள் ஒருவனை நோக்கி, 'என் தேரை விரைவில் அழைப்பி' என்று கூறி, மற்றும் அங்கு இருந்தவர்களை நோக்கி, "யானைகளின்மேல் இவர்ந்து முரசு அறைந்து படைவீரர்கள் யாவரும் ஒரு நொடிப்பொழுதில் வந்து சேரவேண்டும் எனத் தெரிவியுங்கள்," என்றான். உடனே அவர்கள் அவ்வாறே முரசு அறைந்து தெரிவித்தார்கள்.

அம்முரசங்களின் ஒலி தோன்றியவுடன் யாளிகள் பூட்டப்பட்டனவும், சிங்கங்கள் பூட்டப்பட்டனவும், புலிகள் பூட்டப்பட்டனவும், யானைகள் பூட்டப்பட்டனவும், கரடிகள் பூட்டப்பட்டனவும், பன்றிகள் பூட்டப்பட்டனவும், காற்றின் வேகத்தைப் பிற்படச் செய்யும் குதிரைகள் பூட்டப்பட்டனவும் ஆகிய தேர்ப்படைகள் மாரிக்காலத்து மேகக்கூட்டங்கள் ஒருங்கு திரண்டு வந்தாற்போல வந்தன. அப்படைகளைக் கண்டு விண்ணவர்களும் நாகர்களும் அஞ்சி நடுங்கினார்கள். அப்படைகளாகிய கடல், போர் முரசங்களின் ஒலியாகிய 'பொம்' என்னும் ஒலியையும், தடக்கைகளாகிய அலைகளையும் கொண்டு பொங்கி எழுந்து வந்த தோற்றம், ஊழியின் இறுதியில் மிக்க ஒலியையும், பெரிய அலைகளையும் உடைய கடலானது பொங்கி எழுந்துவந்தாற் போன்றது. அத்தேர்மீது அமைந்த கொடிகள் அசைந்து ஆடும் தோற்றம், அலகைகள் அத்தேர்ப்படையைக் கண்டு 'இனி எங்கள் பசி ஆறிவிடும்' என்று மகிழ்ந்து கூத்தாடுதல் போன்றிருந்தது.

'விரைந்துவரும் மேகங்களின் ஈட்டங்களோ? உரல் அன்ன கால்களையும், பனைத்துண்டங்கள் போன்ற துதிக்கைகளையும், வச்சிரம்போன்ற கோடுகளையும் பெற்றுவரும்

கரிய மலைகளின் கூட்டங்களோ?' என்று கண்டோர் கூறும்படியான யானைச் சேனைகள், நிலம் நெளியவும் இந்திரனுடைய யானை கேட்டு அச்சத்தினால் உடல் மெலிந்து வாடவும், கண்டோர் இவற்றின் ஒலிக்கு முன் இடி ஒலியானது கடல் ஒலிக்குமுன் கைதட்டும் ஒலியைப் போலும் என்னும்படி பிளிறிக்கொண்டு வந்து திரண்டன.

'இவைகள் காற்றையே காலாகக்கொண்டனவோ?' என்று கண்டோர் கூறும்படி அமைந்த விரைவினை உடைய குதிரைப்படைகள், கடலின் இடையில் பொங்கி எழுந்து வரும் அலைகளின் வரிசைகளைப்போல அணி அணியாக வந்து குவிந்தன.

'இவைகள், புலிகளின் கூட்டங்களோ? யானையின் தொகுதிகளோ? மழையின் ஈட்டங்களோ? அல்ல, அல்ல சிங்கங்களின் கூட்டங்கள்' என்று யாவரும் கூறுதற்கு உரிய தோற்றம் உடையவர்கள் ஆகிய காலாள் வீரர்கள், வேல்களும், வாள்களும், தோமரப்படைகளும், ஈட்டிகளும், முசுண்டிகளும், உலக்கைகளும், பாசங்களும், விற்களும், கணைகளும் ஆகிய பல படைகளை ஏந்திக்கொண்டு பெரும்புலிக்கூட்டங்கள் ஒருங்கு வந்து கூடினாற்போல வந்து கூடினார்கள்.

காலனும் கண்டு 'இவர்கள் நமக்கு அமைந்த காலர்களோ?' என்று எண்ணும்படியான தோற்றமும் ஆற்றலும் வாய்ந்தவர்களாகிய பதினால்வர் படைத் தலைவர்களும், இந்திரன் முதலிய விண்ணவர்கள் எறிந்த வச்சிரம் முதலிய படைகள் தம்மேற் பட்டமாத்திரத்தில் முறிபட்டுப் பொடியாய்த் தெறித்துச் சிந்தும்படியான வன்மை அமைந்த தோள்களை உடையவர்களாகிய தூடணன், திரிசிரன் என்பவர்களும் வந்து சேர்ந்தார்கள். அப்படையின் பெருக்கம், சிறந்த கணக்கு அறிஞர்களும், "இப்படைகளை

அளவில்லன என்று கூறுதலன்றி இவ்வளவின எனக் கணித்துக் கூறுதல் அரிதினும் அரிதாகும்'' என்பர்.

இத்தகைய சேனைவெள்ளம் இருவினைக்கட்டறும்படி பற்றற்று விளங்கும் பெரியோர்களிடத்திலும், அவர்களால் நீக்குதற்கு அரிய தன்மையை உடையதாய், உடன் உறைந்து, உயிர்களை எமனுக்கு அளிக்கும் நோயைப்போலச் சூர்ப்பநகை முன்செல்லச் சென்று வள்ளலாகிய இராமபிரான் உள்ள இடத்தை அடைந்தது.

அவ்வரக்கர்களின் சேனைகளின் வேகத்தால் காட்டில் உள்ள மரங்கள் வேருடன் பெயர்ந்து வீழ்ந்தன. அம்மரங்களின்மீது இருந்த பறவைகள் யாவும் கரன் சேனை வருதலை இராமனுக்குத் தெரிவிக்கச் செல்வன போல வானிற் பறந்து பேரொலி செய்துகொண்டு சென்றன. சிங்கங்களும், புலிகளும், அஞ்சித் தங்கள் தங்கள் குகைகளை விட்டு ஓடின. யானைகள் எங்குச் சென்றால் நம்முயிர் தங்கும் என்னும் எண்ணத்துடன் பிளிறிக்கொண்டு ஓடின. இவற்றின் ஒலியின் மிகுதியால் சேனை வந்தமையை இராமலக்குமணர்கள் உணர்ந்துகொண்டார்கள்.

உடனே இலக்குமணன் வில்லை ஏந்திக், கவசத்தைத தரித்துத், தூணீரத்தைத் தோளில் இட்டு, வாளை இடையில் விசித்துக்கொண்டு, ஸ்ரீராமன் முன் வந்து, அவ்வரக்கர்களிடம் சென்று போர் புரிய விடை வேண்டினன். எம்பெருமான் "நீ சீதையைக் காத்துக்கொண்டிரு. நான் சென்று அவ்வரக்கர்களை எல்லாம் வானிற் செலுத்தி வருகின்றேன்,'' என்று முழையினின்றும் வெளிவரும் சிங்கம்போலப் பன்னசாலையினின்று வெளியே வந்தனன். உடனே சூர்ப்பநகை, "இவனே அரக்கர்களின் பகைவனாகிய இராமன்'' என்று கூறினாள். உடனே மேகங்கள் மழையைச் சொரிவதுபோல அரக்கர்கள் இராமன்மீது

பலவகையான படைகளைச் சொரிந்தார்கள். இராமன் உடனே வில்லை வளைத்துக் கணைகளை எய்தனன். அவை, பத்து, நூறு, ஆயிரம், பதினாயிரம், கோடியாகப் பெருகி அவ்வரக்கர் சேனைமேற் பாய்ந்தன. உடனே குருதிக் குளங்களும் குருதி ஆறுகளும் உண்டாய்விட்டன. அவற்றில் அலைகள் மிதந்தன. அரக்கர்களின் தலைகளும் தடக்கைகளும் மிதந்தன. யானைகளின் துதிக்கைகள் மிதந்தன. தலையற்ற குதிரைகளின் உடல்கள் மிதந்தன.

எஞ்சிய அரக்கர்கள் அத்திறத்தினைக் கண்டு, கடுஞ்சினம் கொண்டு, கடலில் தோன்றிய விடம் எனப் பொங்கி, ஆரவாரம் செய்துகொண்டு எழுந்து, வேல், வாள், மழு, சூலம், அம்பு முதலிய படைகளைப் பேரிடியோடு கூடி விடாமழையைச் சொரியும் மேகம் போலச் சொரியலானார்கள்'' என்று இராமாயணம் சொல்லும் பெரியார் கூறினர்.

அப்போது குலசேகரர் மனம் முழுதும் அவ்விராம சரிதையில் ஆழ்ந்துவிட்டது. அவர் தம்மை முற்றும் மறந்திருந்தார். கரனுடைய சேனைகளின் போர் அப்பொழுது நிகழ்வதாகவே எண்ணிவிட்டார். "எம் கருமுகில் வண்ணனார் தாம் தனியாக வேறொருவர் துணையும் இன்றி நின்று, விண்ணவர்கள் கண்டவுடன் அஞ்சி நடுங்கி, ஓடிப்போதற்குக் காரணமாகிய பேராற்றலை உடைய கரன், தூடணன், திரிசிரன் என்பவர்களின் அளவிற் கடங்காத பெரும் படையோடு போர் புரிகின்றனரே! இஃது யாரால் முடியுமோ? நாம் நம் ஆருயிர்த் தலைவருக்கு நம்முடைய நால்வகைப் படைகளுடன் விரைந்து சென்று, உதவி புரிதல் வேண்டும்'' என்று எண்ணினர். உடனே படைத் தலைவர்களை அழைத்து, எல்லாப் படைகளையும் திரட்டிக் கொண்டுவரும்படி கூறினர். படைத்தலைவர்கள், "அவ்

வாறே ஒரு நொடிப்பொழுதில் திரட்டிக்கொண்டு வருகிறோம்,'' என்று கூறிச் சென்று, ஓரிடத்தில் இருந்து, "சோழ வேந்தனே முன்னரே நம் அரசருக்குப் பணிந்துவிட்டான். பாண்டிய மன்னனே நம்மரசருக்குக் கீழ்ப்படிந்ததோடு அமையாமல் தம் அரும்பெறற் செல்வியையும் மணம் புரிவித்தனன். சிற்றரசர்களிலும் எவரும் நம் வேந்தருக்குக் கீழ்ப்படியாதவர்கள் இல்லை. அங்ஙனம் இருக்க நம் அரசர் படைதிரட்டச் சொன்னதற்குக் காரணம் எதுவாயிருக்கும்? நம் அரசருடைய கடவுள் அன்பினையும் நற்குணங்களையும் உணர்ந்து நம் அரசர்பால் அனைவரும் அன்புடையவர்களாகவே இருக்கின்றார்கள். ஒருகால் அவர்களுள் யாரேனும் நம்முடைய அரசரது மனநிலையைக் கேட்டறிந்து, இகழ்ந்து கூறினரோ? யாது காரணம் ஆயினும் ஆக. அவர் கூறியபடி நாம் படைகளை விரைவில் திரட்டிக் கொண்டுவந்து, பின்பு நிகழ்வனவற்றை அறிவோம்,'' என்று முடிவுசெய்து விரைவில் நால்வகைப் படைகளையும் திரட்டிக்கொண்டு வந்தார்கள். அப்படைகளைக் கரன் காணின், "விண்ணவர்களின் படைகளை ஒரு நொடிப்பொழுதில் வெந்நிட்டு ஓடச்செய்த நம் படை வீரர்களும் இப்படை வீரர்களுக்கு வெந்நிட்டு ஓடுவதன்றி எதிர்த்து நிற்கலாற்றார்கள்'' என்று கூறும்படி இருந்தன அப்படைகள் என்றால், அவற்றைப்பற்றி வேறு கூறவும் வேண்டுமோ? குலசேகரர் தம்முடைய தேரைக் கொண்டு வரும்படி கூற, அயலில் இருந்த பாகன் தேரைக் கொண்டு வந்து நிறுத்தினன். 'உற்றது கொண்டு மேல்வந்துறு பொருள்' உணரும் அறிவின் ஆற்றலை உடையவர்களாகிய அமைச்சர்கள், குலசேகரருடைய மனநிலை இன்னது என்பதனை உணர்ந்துகொண்டு, இராமாயணம் கூறும் அப்பெரியாரை மறைவில் விளித்துச் சிலவற்றைக் கூறினார்கள்.

இராமாயணம் சொல்லும் அப்பெரியாரும் குலசேகருக்கு முன் சென்றார். குலசேகரர் அவரை வணங்கி நின்றார். அப்பெரியார், குலசேகரர் முடியில் மலரைச் சொரிந்து, "அரசரேறே! தங்கள் அன்பு மேன்மேலும் பொலிவதாக. தங்கள் வீரம் வாழ்க. ஆ என்ன வியப்பு! கரனுடைய பெரும்படைகள் ஒரு நொடிப்பொழுதில் அழிந்து விட்டன. கரனும், தூடணனும், திரிசிரனும் ஆருயிர் துறந்தார்கள். சக்கரவர்த்தியின் திருக்குமாரர் எல்லா அரக்கர்களையும் அழித்துவிட்டுப் பன்னசாலையை நோக்கித் திரும்பினார். அருள்வடிவினளாகிய பிராட்டி எதிர் கொண்டு வந்து அவர் திருமேனியில் அரக்கர்களுடைய படைகளால் உண்டான புண்கள் ஆறும்படி மார்போடு அணைத்துத் தழுவிக்கொண்டனள். இளையவன் வந்து அவர் அடிகளில் வீழ்ந்து தன் கண்களின் நீர்ப்பெருக்கால் அவரடிகளை அலம்பினன். கார்வண்ணர் அவர்களுடன் பன்னசாலைக்குச் சென்று வீற்றிருந்து மகிழ்வுடன் அவர்கள்பால் அளவளாவிப் பேசிக்கொண்டிருக்கலானார்," என்று உரைத்தனர்.

குலசேகரருக்கு அவற்றைக் கேட்டவுடன் தெளிவு உண்டாயிற்று. அவர் தமது பரவசமான நிலையை அறிந்து கொண்டார். இராமாயணம் சொல்லும் அப்பெரியாரை வணங்கி, அவருக்கு விடை கொடுத்து அனுப்பிவிட்டு, அமைச்சர்களை நோக்கி, "அறிஞர்களே, படைகளை அவ்வவற்றின் இடங்களுக்கு அனுப்பிவிடுங்கள்," என்று கூறிவிட்டுத் தம் அரண்மனைக்குச் சென்றனர்.

அமைச்சர்கள் கூடி, 'நம் மரசருக்கு வைணவர்களின் கூட்டுறவினாலேயே இத்தகைய மனக்கலக்கம் உண்டாயிற்று. அக்கூட்டுறவை ஒழித்தற்கான உபாயம் யாது?' என்று ஆய்ந்து ஒரு முடிவிற்கு வந்தார்கள். அம்முடிவின்

படி குலசேகரப் பெருமான், ஆராதனைக்கு உரிய பெருமானுடைய அணிகலப் பேழையிலிருந்து நவமணிகளால் அமைக்கப்பட்ட மாலை ஒன்றைப் பிறர் அறியாதபடி எடுத்து, மறைத்துவிட்டார்கள். மறுநாள், குலசேகரர் எம்பெருமானை ஆராதித்தற்காக அணிகலன்களை அப்பெருமானுக்கு அணியத்தொடங்கி, அவற்றுள், நவமணி மாலை ஒன்றைக் காணாமையால் வருந்தி, அமைச்சர்களை அழைப்பித்து, அதனை அவர்களுக்குத் தெரிவித்தனர்.

"எங்கள் அன்புடைய இறைவரே, இங்குத் தங்கள் அன்பர்களாக வரும் வைணவர்களை அன்றிப் பிறர் ஒருவரும் வந்திலர். இங்கு அவர்கள், தங்கள் விருப்பம் போல் தடை சிறிதும் இன்றி வந்து போகின்றார்கள். ஆதலால், அவர்களை யன்றிப் பிறர் எடுத்திருப்பார்கள் என்று எண்ணுதற்குச் சிறிதும் நியாயம் இன்று" என்று உரைத்தார்கள். அமைச்சர்கள் அனைவரும் வேறு ஒன்றுங் கூறாமல் அதனையே கூறினார்கள்.

குலசேகரர் அமைச்சர்களை நோக்கி, "ஆதனூர் எந்தையடியார், இடரான ஆக்கையிருக்க முயலார்; மடவார் மயக்கின் மயங்கார்; கடவுளர்க்கு நாதனார் ஆதரியார்: நான் எனது என்னார்*. அவர்கள் உடல் பொருள் ஆவி என்னும் மூன்றையும் எம்பெருமானுக்குச் செலுத்தியிருப்பவர்கள். அத்தகையராகிய அப்பெரியார்கள் எம்பெருமானது அணிகலனை எடுக்க மனம் துணிவார்களோ? அவர்கள் எடுத்திரார் என்பதனை நீங்கள் நன்கு உணரும்படி செய்கின்றேன். நீங்கள் ஒன்றும் தடுத்துச் சொல்லாமல் ஒரு குடத்தில் நல்ல பாம்பு ஒன்றை இட்டுக் கொண்டுவரச் செய்யுங்கள்," என்றார்.

---

* அஷ்டப்பிரபந்தம், நூற்றெட்டுத் திருப்பதி அந்தாதி, செ. 8.

அமைச்சர்கள் சென்று ஓர் இடத்திற் கூடி யோசிக்கலாயினர். அவர்களுள் ஒருவர், "இஃதென்ன 'கிணறு வெட்டப் பூதம் புறப்பட்டது'' என்னும் பழமொழியை ஒத்ததாயிருக்கின்றதே! ஒருகால் நம்மை அக்குடத்தில் கையிட்டு 'இங்கு வைணவப் பெரியார்களை யன்றிப் பிறர் எவரும் வந்திலர் என்று உறுதி கூறுங்கள்' என்று சொல்வார்போ லிருக்கின்றதே!'' என்றனர்.

மற்றோர் அமைச்சர், 'நீங்கள் ஒப்புக்கொள்ளும்படி செய்கின்றேன் என்று கூறாமல், 'நீங்கள் உணரும்படி செய்கின்றேன்': என்றார், அரசர் ஆதலின், அப்படி இராது,' என்றார்.

வேறோர் அமைச்சர், அவரை நோக்கி, "நீங்கள் அரசர் சொற்கள் ஒவ்வொன்றையும் நன்கு கவனித்துக் கேட்டீர்கள் ஆதலின், இது கூறினீர்கள். ஆம்; அப்படி இராது என்பது உறுதியே'' என்றார்.

பின்பு எல்லா அமைச்சர்களும், "இப்பொழுது அரசர் கூறியபடி செய்வோம்; பிறகு நிகழ்வதை நோக்குவோம்'' என்று தமக்குள் முடிவுசெய்துகொண்டு சில பணியாளரால் ஒரு குடத்தில் நல்ல பாம்பை இட்டு அதனைக் கொண்டுவந்து குலசேகரருக்கு முன்னே வைக்கச் செய்தார்கள்.

குலசேகரர், "எம்பெருமான், அடியார்கள் அம்மணிமாலையை எடுத்திரார்கள் என்று நான் கூறியது உண்மையாயின், இப்பாம்பு என்னைத் தீண்டாது ஆகுக,'' என்று உறுதி கூறி, அக்குடத்தினுள் கையை இட்டனர். அப்பாம்பு அவரைத் தீண்டாமல் ஒடுங்கி இருந்தது. குலசேகரர், பிறகு தமது கையை எடுத்தார். அப்பாம்பு குடத்தினின்று வெளிவந்து குலசேகரரை வணங்கிப் படம் எடுத் தாடியது. குலசேகரர், அவ்வரவினுக்குத் தீங்கு

யாதும் செய்யாமல் அதன் இடத்திற் கொண்டுபோய் விடும்படி, அதனைக் கொணர்ந்த பணியாளர்களுக்குக் கட்டளை இட்டார்.

அமைச்சர்கள் உளம் நடுங்கிக், குலசேகரருக்குத் தாங்கள் செய்த தவற்றை விண்ணப்பித்து, அம்மணிமாலையைக் கொணர்ந்து அவர் திருமுன் வைத்து, அவருடைய திருவடித்தாமரைகளில் தங்கள் முடிபட வணங்கினார்கள்.

குலசேகரர், அவ்வமைச்சர்களை நோக்கி, "அன்புடையவர்களே, நீங்கள் இவ்வுலக வாழ்க்கையை மெய்யென்று எண்ணி, இதிலேயே உங்கள் மனம் முழுதையும் செல்லவிட்டிருப்பதனோடு அமையாது எம்பெருமான் திருவருளால் அப்பெருமானுடைய திருவடித்தாமரைகளைப் பற்றி விடாமல் அவற்றில் நிலைகொண்டுள்ள வண்டாய் இருக்கும் என் மனத்தையும் இவ்வுலக வாழ்வாகிய புல்லிய மலரில் வந்து பொருந்தும்படி செய்ய முயல்கின்றீர்கள்.

**கலி விருத்தம்**

"மெய்யில் வாழ்க்கையை மெய்யெனக் கொள்ளுமிவ்
வையந் தன்னொடுங் கூடுவ தில்லையான்
ஐயனே அரங்கா வென் றழைக் கின்றேன்
மையல் கொண் டொழிந் தேனென் றன் மாலுக்கே.

—(பெருமாள் திரு. 3-ம் திருமொழி பா. 1.)

அன்றியும் நீங்கள் என் செயல்களை யெல்லாம் பேய் கொண்டவர்களின் செயலே எனக் கொண்டிருக்கின்றீர்கள். யான் உங்கள் எல்லாரையும் பேயர்களாகவே கொண்டுள்ளேன்.

**கலி விருத்தம்**

"பேய ரேயெனக் கியாவரும் யானுமோர்
பேய னேயெவர்க் கும்மிது பேசியென்
ஆய னேயரங் காவென் றழைக்கின்றேன்
பேய னாயொழிந் தேனெம் பிரானுக்கே."

—(பெருமாள் திரு. 3-ம் திருமொழி. பா. 8.)

இனி,

> [1]'கம்பமத யானைக் கழுத்தகத்தின் மேலிருந்
> தின்பமரும் செல்வமும் இவ்வரசும் யான்வேண்டேன்;'[1]

என் மைந்தனுக்கு முடி சூட்டிவிட்டு,

> "எம்பெருமான் ஈசன் எழில்வேங் கடமலைமேல்
> தம்பகமாய் நிற்கும் தவமுடையேன் ஆவேன்.'

மாறு கூறாமல் அதற்குரிய செயல்களை விரைவிற் செய்து முடிப்பீர்களாக," என்று கூறியருளினர்.

அமைச்சர்கள் அருமந்தக் கன்றினைப் பிரிய நேர்ந்த காரா என மனங் கலங்கிக், கண்களினின்று அருவி என நீர் பெருகச் சென்று, குலசேகாருடைய திருமைந்தற்கு முடிசூட்டுதற்குச் செய்யவேண்டியவைகளை எல்லாம் செய்து முடித்தார்கள். குலசேகரர் தாம் கூறியபடியே தம்முடைய செல்வ மைந்தற்கு முடிசூட்டி மகிழ்ந்து, அம்மைந்தற்குத் தாம் கூறவேண்டிய அரசியல் அறங்கள் முதலியவற்றை விளங்கக் கூறியருளி, அச்செல்வ மைந்தனிடத்தும் அமைச்சர்கள் முதலியவர்களிடத்தும் விடை பெற்றுக்கொண்டு,

> [2]"எம்மாண்பி லயனுன்கு நாவினலும்
> எடுத்தேத்தி யீரிரண்டு முகமும்[3] கொண்டு
> எம்மாடு மெழிற்கண்கள் எட்டினோடும்
> தொழுதேத்தி இனிதிறைஞ்ச நின்ற செம்பொன்
> அம்மான்றன் மலர்க்கமலக் கொப்பூழ் தோன்ற
> அணியரங்கத் தரவணையிற் பள்ளி கொள்ளும்
> அம்மான்றன் அடியிணைக்கீழ்"

அடியவர்களோடு அணுகி, நாவுற வழுத்தி மகிழலாயினர்.

1. பெருமாள் திருமொழி 4-ம் திருமொழி, பா. 5.
2. பெருமாள் திருமொழி முதல் திருமொழி, பா. 3.
3. ஈண்டுக் குற்றியலுகரம் உயிர்வரக் கெடாமல் நின்றது.

இவர் பெரிய பெருமாளாகிய இராமனிடத்திற் பேரன்பு உடையவராய் அப்பெருமானுடைய திவ்விய சரிதையைக் கூறும் இராமாயணத்தைக் கேட்டலையே பேரின்பப் பேறாகக் கொண்டிருந்தனர். ஆதலின், இவரைப் 'பெருமாள்' என்றும், 'குலசேகரப் பெருமாள்' என்றும் வைணப் பெரியார்கள் கூறலானார்கள். ஆதலின், இவர் அருளிய திருமொழிகளின் (பதிகங்களின்) தொகைக்குப் 'பெருமாள் திருமொழி' எனும் திருப்பெயர் வழங்குவதாயிற்று. இவர் அருளிச்செய்த திருமொழிகள் பத்து, அவற்றுள், இரண்டு ஐந்து ஆறு ஆகிய மூன்று திருமொழிகளுள், ஒவ்வொன்றினும் பப்பத்துப் பாசுரங்கள் உள்ளன. மூன்றும் திருமொழியில் ஒன்பது பாசுரங்களும், மற்றைத் திருமொழிகளுள் பதினொரு பாசுரங்களும் இருக்கின்றன. ஆக, இவர் அருளிச் செய்த பாசுரங்களின் தொகை நூற்று ஐந்தாம். இவருடைய பாசுரங்கள் அன்பு நிறைந்து ததும்பி ஊசியைக் காந்தம் கவருவது போல் கற்பார் மனத்தைக் கவர்வனவாய் இருக்கின்றன.

இவரைப் பற்றிக் கூறும் பாசுரங்கள் சிலவற்றை அடியிற் காண்க.

### நேரிசை வெண்பா

**தொண்ட ரடிப்பொடியார் தோன்றியவூர் தொல்புகழ்சேர்**
**மண்டங் குடியென்பர் மண்ணுலகில் - எண்டிசையும்**
**ஏத்தும் குலசே கரனூர் எனஉரைப்பர்**
**வாய்த்ததிரு வஞ்சிக் களம்.**

**இன்னமுதம் ஊட்டுகேன் இங்கேவா பைங்கிளியே**
**தென்னரங்கம் பாடவல்ல சீர்ப்பெருமாள் - பொன்னின்**
**சிலைசேர் நுதலியர்வேள் சேரலர்கோன் எங்கள்**
**குலசே கரனென்றே கூறு.**

மாசிப் புனர்பூசம் காண்மினின்று மாநிலத்தீர்
தேசித் திவசத்துக் கேதென்னிற் - பேசுகின்றேன்
கொல்லி நகர்க்கோன் குலசே கரன்பிறப்பால்
நல்லார்கள் கொண்டாடும் நாள்.

## வாழி திருநாமம்

### எண்சீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

அஞ்சனமா மலைப்பிறவி ஆதரித்தோன் வாழியே
அணியரங்கர் மணத்தூணை அடைந்துய்ந்தோன் வாழியே
வஞ்சிநக ரந்தன்னில் வாழவந்தோன் வாழியே
மாசிதனிற் புனர்பூசம் வந்துதித்தான் வாழியே
அஞ்சலெனக் குடப்பாம்பில் அங்கையிட்டான் வாழியே
அனவரத மிராமகதை அருளுமவன் வாழியே
செஞ்சொல்மொழி நூற்றஞ்சும் செப்பினன் வாழியே
சேரலர்கோன் செங்கமலத் திருவடிகள் வாழியே.

குலசேகரர் வரலாறு முற்றிற்று.

# 6. ஆண்டாள் வரலாறு

தனியன்

**நேரிசை வெண்பா**

அன்ன வயற்புதுவை ஆண்டாள் அரங்கற்குப்
பன்னு திருப்பாவை பல்பதியம் - இன்னிசையாற்
பாடிக் கொடுத்தாள்நற் பாமாலை பூமாலை
சூடிக் கொடுத்தாளைச் சொல்லு.

## ஆண்டாள் அவதாரம்

அன்புக்கும் அருளுக்கும் உறையுளானவளும், பொறுமையின் வடிவாய் விளங்குகின்றவளும் ஆகிய பூதேவி, நான்மறைப் பொருள்களையும் திருமகள் நாதன் திருவருளால் நன்குணர்ந்தவராகிய பட்டர்பிரானரால் ஸ்ரீவில்லி புத்தூரில் வடபெருங் கோயிலில் அரவணையில் அறிதுயில் அமர்ந்திருக்கும் எம்பெருமானுக்குப் பல வண்ண மலர்களால் திருமாலைத் தொண்டினை இயற்றுதற்காக அமைக்கப்பட்ட நந்தனவனத்தில் ஒருநாள் அவர் தம் கையில் ஏந்திய கருவியினல் திருத்துழாய்ச் செடிகளுக்காக மண்ணைக் கிளறிக்கொண் டிருக்கையில் ஒரு திருத்துழாய்ச் செடியின் அடியில் ஒரு பச்சிளங் குழவியாய்த்தோன்றி விளங்கினள். பட்டநாதர் அக் குழவியைக் கண்டு, பொற்பாவை என்றே மயங்கி, 'இங்கு இஃது எப்படி வந்தது? இங்கு இதனைக் கொண்டு வந்து வைத்தவர்யாரோ?' என்று எண்ணலானர். அப்பொழுது அப்பொற்பிளங் குழவி அவரைக் கண்டு அரற்றியது. பட்டநாதர், அதனல், 'ஆ! இது பொற்பாவை அன்று; குழவியே!' என்று ஆர்வத்துடன் அதனைத் தம்முடைய இருகைகளாலும் எடுத்து, மார்புடன் அணைத்து,

முத்தம் இட்டு, அதனை நோக்கி, "இக்குழவியின் அழகு அழகின் எல்லையைக் காட்டுவதாயிருக்கின்றதே! இது பாற் கடலில் வந்த பொன்மகளின் அவதாரமோ? பார் வண்ண மடமங்கையின் மாறு வடிவமோ? இது திருத்துழாய்ச் செடியின் அடியினின்று கிடைத்தமையால் ஒரு மானிட மங்கை பெற்ற குழந்தை யன்று. இஃதோர் தெய்வப் பிறப்பாகிய குழவியே. மிதிலை வேந்தராகிய சனகர் யாகசாலையின் பொருட்டுப் பூமியை உழுபடையால் உழு கையில் அம்மன்னர் மன்னரது மகப்பே றில்லாத குறை நீங்கும்படி அவ்வுழுபடைச்சாலின் அடியினின்று தோன் றிய பிராட்டியைப் போல எம்பெருமான் திருவரு ளால் நம்முடைய மகப்பேறில்லாத குறை நீங்கும்படி இக் குழவி இத்துழாய்ச் செடியின் அடியினின்று தோன் றியதோ? ஆம், இது நமது மகப்பேறில்லாத குறையை நீக்கும் பொருட்டு எம்பெருமான் நமக்கு அருளிய குழ வியே. அதில் ஐயுறவில்லை," என்று எண்ணி, மகிழ்ச்சி மிக்கவராய்த், தம் மனையை அடைந்து, தம் இல்லக் கிழத்தியாரை அழைத்து, அவர் கையில் அக்குழவியைக் கொடுத்து, அது கிடைத்த வரலாற்றை அவருக்குக் கூறினர்.

அவ்வம்மையார், பிறவிக் குருடன் கண் பெற்றாற் போல மகிழ்ச்சி மிக்கவராய், உளத்தின்கண் ஆர்வம் ஊற்று நீர் எனச் சுரந்து எழ, அக் குழவியை முத்தமிட்டு, மார்புடன் அணைத்துக்கொண்டனர்.

அப்போது அவ்வம்மையாரின் கண்களினின்று ஆநந்தத்தால் நீர் பெருகியது. பெருமற் பெற்ற அக் குழவி உண்ணுதற்கு அவ்வம்மையாரின் மார்பினின்று பாலும் சுரந்தது. அதனல், அவ்வம்மையாருக்கு மிக்க வியப்பும் களிப்பும் உண்டாயின.

**கலி விருத்தம்**

“எண்ணில்பல் லுயிர்க்கெலாம் இனிமை ஈந்தருள்
பெண்ணினை அணைத்தலும் பிறங்கு கொங்கைபால்
தண்ணில வுறப்புனல் தளிக்குங் காந்தமொத்
துண்ணிறைந் துதவவாங் குவந்து நல்கினள்”

—(அரிசமயதீபம், கோதைச் சருக்கம், செ. 16)

பிறகு பட்டநாதர், தாம் வடபெருங்கோயில் உடையானுக்குச் சாத்தும் கோதைகளுக்கு (பூமாலைகளுக்கு) உரிய மலர்களை அளிக்கும் நந்தன வனத்தில் அவதரித்த காரணத்தினாலோ? தமிழணங்கின் குழலிற் சூடுதற்கு உரிய பாமாலையாகிய கோதைகளை இனிப் பாடித்தருவாள் என்பதனை முன்னுக அறிந்ததனாலோ? அப் பொற்பாவைக்குக் ‘கோதை’ என்று திருப்பெயர் இட்டனர்.

## ஆண்டாளின் வளர்ச்சி

அக்கோதிலாத கோதைநாயகியார், அக்குழவிப் பருவத்தில், மழலை மொழிகளைப் பேசியும், சப்பாணி கொட்டியும், முத்தம் அளித்தும், கழங்கு அம்மானை என்பவைகளை ஆடியும், ஊசல் உகைத்தும் தம்முடைய தாய் தந்தையர்களை மகிழ்வித்து வந்தார். துழாய், தோன்றும் போதே மணமும் உடன் தோன்றி வளர வளர்வது போலக் கோதையார், தோன்றும் போதே மெய்ஞ் ஞானமும் உடன்தோன்றி வளர வளர்ந்து வந்தார். பள்ளமடையை நீர்தானே சென்றடைவது போல அவர்பால் கலையறிவு சென்றடைவதாயிற்று. [1]ஆறுகள் கடலையே நோக்குவது போல அம்மலர்முகச் செல்வியார் மனம், ஒண்டாமரையாள் கேள்வனையே நோக்குவதாயிற்று. மலர்களில் மணமும் தேனும் ஒருங்கமைந்து விளங்குதல்

1. முதற்றிருவந்தாதி பா. 67.

போல அவரிடத்து மெய்ஞ்ஞானமும், அரவணை அமலன் பாலாம் அன்பும் ஒருங்கு கலந்தமைந்து விளங்கின. ஆதலின், அச் செந்தமிழ்ச் செல்வியார், "என்றுகொல் கருமுகில் வண்ணனாகிய கண்ணன் என்முன் வந்து காட்சி அளிக்கும் நாள்," என்று கருதுவார். காயா மலர்களைக் காணில், "மாயாவோ வந்தருளாய்" என்பார்; மை வண்ண மேகத்தைக் கண்டால் மெய்வண்ணம் மாறித் தளர்வார். செந்தாமரை மலர்களைக் கண்டக்கால், "இம் மலர்கள் கண்ணனுடைய கண்களைக் காட்டி என்னை மயக்குகின்றனவே என் செய்வேன்" என்பார். "ஆய்ப் பெண்கள் உறியில் வைத்த தயிர் வெண்ணெய்களைத் திருடி உண்டு, யசோதைப் பிராட்டியாரால் உரலிற் கட்டுண்டு, அடியுண்டு அழுத கள்வனே, நீ என்பால் வந்து அருள் புரியாயானால், 'பத்துடை அடியவர்க் கெளியவன்' என்று பெரியார்கள் கூறும் நின் புகழ் மாசுண்ணும்" என்பார். கண்ணன் திருப் பெயர்களைக் கேட்டவுடன் கனலில் இடப்பட்ட வெண்ணெய் என மனங் கரைந்து அருவி எனக் கண்ணீர் பெருகச் சோர்வுற்று நிற்பார்.

## ஆண்டாள் திருமகள் நாதனுக்குப் பூமாலை சூடிக்கொடுத்தல்

இங்ஙனம் ஓங்கி உலகளந்த உத்தமனிடத்துப் பேரன்பு உடையவராகிய கோதையார், தம் ஆர்வ மிகுதியினால், பட்டநாதர் வடபெருங்கோயிலில் எழுந்தருளியிருக்கும் பெருமானுக்காகக் கட்டிவைத்திருந்த மாலையை அவரில்லாத சமயத்தில் எடுத்துத் தம் குழலிற் சூடிக் கொண்டு, அணி பல அணிந்து, அம்பொன் ஆடை உடுத்துக், கைவளை குலுக்கிக், கொவ்வைச் செவ்வாய் திருத்தித்,

தம்மை ஒப்பனை செய்துகொண்டு, "அக்கருமுகில் வண்ணனுக்கு நான் நேரொவ்வாதிருக்கின்றேனோ? நேரொத்திருக்கின்றேனோ? கண்டறியக் கடவேன்" என்று எண்ணிக், கண்ணாடியில் தம் வடிவை நோக்கி, "எம்பெருமான் என்பால் அருள் புரிவான் என்பதில் ஐயுறவின்று" என்னும் துணிவுகொண்டு, அவர் வருதற்குள் களைந்து வைத்துவிட்டனர். கோதையார் அன்று முதல் நாள்தோறும் அவ்வாறே செய்துவரலானார். கோதையார், இங்ஙனம் ஒருநாள் அம்மாலையைத் தம் குழலிற் சூடிக்கொண்டிருக்கையில் பட்டநாதர் வந்து அதனைப் பார்த்து மனமிக வருந்திக் கோதையாரை நோக்கி, "அன்னாய், அந்தோ! இச்செயல் மிக்க குற்றம் உடையது ஆகும். குற்றம் அற்றவனான நம்பெருமானுக்காகக் கட்டிய மாலையன்றோ? இதனை நீ நின்குழலிற் சூடிக்கொள்ளுதல் தகுதியாகுமோ?" என்று வருத்தமிக்க மனத்தினராய்க் கூறி, அன்று அம்மாலையை வடபெருங்கோயிற் பெருமானுக்குக் கொண்டுபோய்க் கொடாமல் இருந்துவிட்டனர்.

அன்று இரவு பட்டநாதர் கனவில் வடபெருங்கோயில் உடைய இறைவன் தோன்றி, "அன்பனே, நமக்கு நீ நாள்தோறும் கொண்டுவந்து கொடுக்கும் மாலையை இன்று கொண்டுவந்து கொடாததற்குக் காரணம் யாது?" என்னப், பட்டநாதர், அப்பெருமானை வணங்கிக் கோதையார் செயலை விண்ணப்பித்தனர். அதனைக் கேட்ட திருமகள் நாதன், "அறிஞனே, கோதை குழலிற் சூடிய மாலையிலேதான் மணம் மிகுந்து தோன்றுகின்றது. ஆதலின், கோதை தன் குழலிற் சூடிக் கொடுக்கும் மாலையே நமது விருப்பத்திற்கு உரியது ஆகும்" என்று கூறியருளினன்.

பட்டநாதர், துயில் நீங்கி எழுந்ததும் தமது கனவில்

திருமகள் நாதன் தோன்றிக் கூறியருளியதை எண்ணி வியப்பும் மகிழ்வும் கொண்டு, "நம்முடைய செல்வி திருமாமகள் தானோ? நப்பின்னையோ? நிலமாமகளோ? நம் மகளாகப் பிறந்திட்டாள்" என்று கருதி, அன்று முதல் தாம் கட்டிய மாலையைக் கோதையாரிடம் கொடுத்து, அவர் தம் குழலிற் சூடிக் கொடுத்த பிறகே வடபெருங் கோயிலுடைய இறைவனுக்குக் கொண்டு போய்க் கொடுத்து வந்தனர். அதனைத் திருமகள் நாதன் அன்புடன் ஏற்று வரலாயினன். பட்டநாதர் அதனால் மகிழ்வெய்திக் கோதையை நோக்கி, "நீ என்னை ஆண்டாளே" என்றார். ஆதலின், கோதையாருக்குச் சூடிக்கொடுத்த நாய்ச்சியார், ஆண்டாள் என்னும் பெயர்களும் வழங்கலாயின.

## கோதையார் பாமாலை பாடிக் கொடுத்தல்

பொற்கொடிபோன்ற கோதையார், ஒரு கொள் கொம்பிலே சேர்த்தற்கு உரிய பருவம் எய்தினராகப் பட்டநாதர், இச்செல்விக்கு ஏற்ற மணாளன் யார்? எனச் சில அறிஞர்பால் ஆராய்வாராயினர். கோதையார், அதனை அறிந்து தம்முடைய தந்தையாராகிய பட்டநாதரை நோக்கி, "எந்தையீர்*, ஆழிசங்கேந்தும் உத்தமராகிய திருவரங்கருக்கு அன்றி மானிடவர்க்கென்று பேச்சுப்படில் வாழகில்லேன்" என்று கூறினர். பட்டநாதர் அம்மொழிகளைக் கேட்டு, "என்னே இச்செல்வி கொண்ட உறுதி! எம்பெருமான் இச்செல்வியின் கருத்தை முற்றுவிக்கக் கருதுவனோ? இது முடிவது எப்படி? எம்பெருமான் திருவுள்ளம் யாதோ? பத்துடைய அடியவர்க்கு எளியவன் ஆதலின், இச்செல்வியின் கருத்தை முடிக்கினும் முடிக்கும். எம்பெருமான் திருவுள்ளப்படியே

* நாய்ச்சியார் திருமொழி, முதல் திருமொழி பா. 5.

எதுவும் ஆகும்,'' என்று கருதி, மேல் ஒன்றும் கூருமல் இருந்து விட்டனர்.

கோதையார் மனம் திருவரங்கநாதன் திருவருளேயே நோக்கியது. அதனால், கோதையார் உணவை மறந்தனர். அவர் கண்களில் நீர் பெருகிவரும். அவர்க்குப் பலமுறை வெப்பமான மூச்சு உண்டாகும். அவற்ருல் அவர் உடல் வாடியது. அவர் கைவளேகள் கையினின்றும் கழல்வன வாயின.

**கலிவிருத்தம்**

பூமகன் புகழ் வானவர் போற்றுதற்
காமகன்னணி வாணுதற் றேவகி
மாமகன்மிகு சீர்வசு தேவர்தம்
கோமகன் வரிற் கூடிடு கூடலே

ஆய்ச்சி மார்களும் ஆயரும் அஞ்சிடப்
பூத்த நீள்கடம் பேறிப் புகப்பாய்ந்து
வாய்த்த காளியன் மேல்நடம் ஆடிய
கூத்த ஞர்வரிற் கூடிடு கூடலே

(நாச்சியார் திருமொழி **4**-ம் திருமொழி **3, 4.**)

என்று கூடலிழைப்பார். இங்ஙனமாகிய கோதையாரைப் பட்டநாதர் கண்டு, அவர் மனத்தைத் தேற்ற எண்ணி, அவரைத் தம் அருகில் இருத்தி, ''அன்னுய், எம்பெருமான் அன்பர்களுக்கு எப்பொழுதும் அவனுடைய அருட் குணங்களே விளக்கும் வரலாறுகளேக் கேட்டலிலே விருப் பம் செல்லும். அவர்களுட் சிலருக்கு 'நீடிய அரக்கர் சேனே நீறுபட்டழிய வாகை, சூடிய சிலேயிராமன் தோள் வலி' கேட்டலிலே மனம் செல்லும்; சிலருக்கு, 'ஏரார்ந்த கண்ணியசோதை யிளஞ்சிங்கம்' ஆகிய கண்ணனுடைய சரிதையைக் கேட்டலில் மனம் செல்லும். உனக்கு எவற் றைக் கேட்டலில் மனம் செல்லும். உனக்கு எவற்றைக் கேட்டலில் விருப்பம்? கூறுக'' என்றனர்.

கோதையார், "எந்தையீர் என் மனம் எம்பெருமான் எழுந்தருளியிருக்கும் நூற்றெட்டுத் திருப்பதிகளின் வரலாறுகளைக் கேட்டலையே விழைகின்றது" என்றனர். பட்டநாதர் அவ்வாறே நூற்றெட்டுத் திருப்பதிகளின் வரலாறுகளையும் கூறக் கருதி, முதலில் வடநாட்டுத் திருப்பதிகளின் வரலாறுகளையும், பின்பு தொண்டைநாட்டுத் திருப்பதிகளின் வரலாறுகளையும் கூறிப், பின்னர்ச் சோழநாட்டுத் திருப்பதிகளின் வரலாறுகளைக் கூறத்தொடங்கினர். அப்போது கோதையார், "எந்தைமீர், நூற்றெட்டுத் திருப்பதிகளுள், முதன்மையாகிய திருப்பதி யாதோ? அதன் வரலாற்றைக் கூறியருளுவீர்" என்று கூறினர்.

பட்டநாதர், "என் அருமைச் செல்வியே,

**குடதிசை முடியை வைத்துக் குணதிசை பாதம் நீட்டி**
**வடதிசை பின்பு காட்டித் தென்திசை இலங்கை நோக்கிக்**
**கடல்நிறக் கடவுள் எந்தை அரவணைத் துயிலும்"**

**(திருமாலை, பா. 19)**

திருவரங்கமே முதன்மையானது. அத்திருப்பதியின் வரலாற்றினைக் கூறுகின்றேன்; கேட்பாயாக" என்று அப்பதியின் வரலாற்றைக் கூறிவரலானர். திருவரங்கத்தின் வரலாற்றினைக் கேட்கையில் கோதையார் கண்களிற் பல முறை நீர் பெருகும். அவர் உடம்பில் மயிர்க்கூச்செறியும்; அவர் திருவரங்கம் உள்ள திசையை நோக்கிக் கைகூப்பித் தொழுவார். திருவரங்கத் தின்னமுதர் அருள் வாழ்க என்பார்.

பட்டநாதர், கோதையாருக்குத் திருவரங்கநாதன் பால் உண்டாயுள்ள ஆர்வமிகுதியை அறிந்து, அவர் மனம் மகிழும்படித் திருவரங்கத்தின் வரலாற்றை விளக்கமாகக் கூறிமுடித்தனர்.

கோதையாருக்குத் திருவரங்கநாதனிடத்தில் அன்பு மேன்மேலும் பெருகி வளர்ந்தது. ஆதலின்,

எண்சீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

உள்ளூரும் சிந்தைநோய் எனக்கே தந்தென்
 ஒளிவளையும் மாநிறமும் கொண்டார் இங்கே
தெள்ளூரும் இளந்தெங்கின் தேறல் மாந்திச்
 சேலுகளும் திருவரங்கம் நம்மூர் என்ன
கள்ளூரும் பைந்துழாய் மாலை யானைக்
 கனவிடத்தில் யான்காண்பன் கண்ட போது
புள்ளூரும் கள்வாநீ போகேல் என்பன்
 என்றாலும் இதுநமக்கோர் புலவி தானே.

(திருநெடுந்தாண்டகம் பா. 23)

என்றும்,

மின்னிலங்கு திருவுருவும் பெரிய தோளும்
 கரிமுனிந்த கைத்தலமும் கண்ணும் வாயும்
தன்னலர்ந்த நறுந்துழாய் மலரின் கீழே
 தாழ்ந்திலங்கு மகரஞ்சேர் குழையும் காட்டி
என்னலனும் என்னிறையும் என்சிந் தையும்
 என்வளையும் கொண்டென்னை ஆளும் கொண்டு
பொன்னலர்ந்த நறுஞ்செருந்திப் பொழிலி னூடே
 புனலரங்கம் ஊரென்று போயி னாரே.

(திருநெடுந்தாண்டகம் பா. 25)

என்றுங் கூறுவர். எம்பெருமான் என்று வந்து அருள் புரிவானோ என்பார்.

தரவு கொச்சகக் கலிப்பா

'கருப்பூரம் நாறுமோ கமலப்பூ நாறுமோ
திருப்பவளச் செவ்வாய்தான் தித்தித் திருக்குமோ
மருப்பொசித்த மாதவன்றன் வாய்ச்சுவையும் நாற்றமும்
விருப்புற்றுக் கேட்கின்றேன் சொல்லாழி வெண்சங்கே'

(நா. திரு. 7-ம் திருமொழி, பா. 1)

என்பார்.

**கலித்துறை**

கார்க்கோடல் பூக்காள் கார்க்கடல்
வண்ணனென் மேலும்கமை
போர்க்கோலம் செய்து போர
விடுத்தவன் எங்குற்றான்

(நா. திரு. 10-ம் திருமொழி, பா. 1 அடி 1, 2.)

என்பார்.

செந்தண்மை பூண்டோராகிய சில முதியவர் இங்ஙனம் ஆகிய கோதையாரது நிலையினைக் கண்டு, அவரை நோக்கி, "அன்னாய், ஆய்ப்பாடியில் ஆயர் சிறுமியர் ஒருநாள் கண்ணனோடு குரவை கோத்து, அதனாற் களிப்பு மிக்காராயினர். கண்ணன் அதனை உணர்ந்தருளி, "இம் மீக்களிப்பு இவ்வாறே செல்லின் இச்சிறுமியர்க்குத் துன்பம் உண்டாம்; ஆதலின், இதனை நாம் மாற்றுதல் வேண்டும்" என்று திருவுளங்கொண்டு அவர்களைப் பிரிந்து ஒளித்தனன். கண்ணன் பிரிவை ஆற்றாத அச் சிறுமியர் தங்களுள் ஒருத்தியைத் தீய காளியனே என்று விளித்தும், ஒருத்தி, நான் கண்ணன் என்று சொல்லியும் ஒருவாறு தங்கள் ஆற்றாமை தணியப்பெற்றார்கள்" என்று கூறக் கோதை நாய்ச்சியார் தாமும் அவர்களைப்போலத் தம் ஆற்றாமையைத் தணித்துக்கொள்ளுதற்கு உரிய வழியை உன்னிச் சிவில்லிப்புத்தூரைத் திரு ஆய்ப்பாடியாகவும், அப்பதியின்கண் உள்ள பெண்களையும் தம்மையும் ஆயர்களின் பெண்களாகவும், வடபெருங்கோயிலை நந்தகோபர் திருமனையாகவும், அக்கோயிலிலே நிற்கின்ற பெருமானைக் கண்ணனாகவும் கருதித் திருப்பாவையைப் பாடியருளிப், பின்பு பதினான்கு திருமொழிகளைப் (பதிகங்களைப்) பாடியருளினர். இத்திருமொழிகளின் பாசுரத் தொகை நூற்று நாற்பத்து மூன்று. கோதையார் இங்ஙனம் பாடிய பின்னரும் ஆற்றாதவராய்,

**எண்சீர்க்கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்**

"மைவண்ண நறுங்குஞ்சி குழல்பின் தாழ
மகரஞ்சேர் குழையிருபா டிலங்கி ஆட
எய்வண்ண வெஞ்சிலையே துணையா இங்கே
இருவராய் வந்தாரென் முன்னே நின்றார்
கைவண்ணம் தாமரைவாய் கமலம் போலும்
கண்ணிணையும் அரவிந்தம் அடியும் அஃதே
அவ்வண்ணத் தவர்நிலைமை கண்டும் தோழீ,
அவரைநாம் தேவரென் றஞ்சி னோமே"

(திருநெடுந்தாண்டகம் 21.)

என்றும்,

"நைவளமொன் றாராயா நம்மை நோக்கா
நாணினார் போலிறையே நயங்கள் பின்னும்
செய்வளவில் என்மனமும் கண்ணும் ஓடி
எம்பெருமான் திருவடிக்கீழ் அணைய இப்பால்
கைவளையும் மேகலையும் காணேன் கண்டேன்
கனமகரக் குழையிரண்டும் நான்கு தோளும்
எவ்வளவுண் டெம்பெருமான் கோயில் என்றேற்
கிதுவன்றோ எழிலாலி என்றார் தாமே"

(ஷை பா. 22.)

என்றும் கூறிச் சோர்ந்து, கண்ணீர் மல்க இருப்பாராயினர். பட்டநாதர் கோதையாருக்கு ஆற்றாமை மேன்மேலும் வளர்ந்து ஓங்குதலைக் கண்டு, மனம் மிக வருந்தி, "இச்செல்வியின் திறத்து நீ யாது கருதியிருக்கின்றனை? இவளது ஆற்றாமையை நீ அறிந்திலையோ? இவள் நாணழிந்து வருந்துதலைக் கண்டும் இவள்பால் நீ இரங்காமல் இருத்தல் நின் பேரருளுக்கு ஏற்றதாகுமோ? இவள் சூடிக்கொடுத்த மாலையை விரும்பி ஏற்றருளிய நீ இவளுக்கு இவள் சூடக்கருதும் நின்மாலையை அளிக்காமல் இருத்தல் நினக்குத் தகுதியாகுமோ?" என்று பலவாறு அரங்கத்து அமலனை எண்ணிக் கூறினர்.

அன்றிரவு பட்டநாதர் கனவில் திருவரங்கச் செல்வனார் தோன்றி, "அன்புடையீர், உம்முடைய செல்வியாகிய கோதையை யாமே மணம்புரிந்துகொள்கின்றோம். நீர் கோதையை உடன்கொண்டு திருவரங்கத் திருமுற்றத்து ஏற வருவீராக" என்று அருளி மறைந்து, கோயிற் பரிவாரமாகியுள்ளவர் கனவிலும் தோன்றி, "நீங்கள், குடை, கவரி, விருதுகள், வாத்தியங்கள் முதலிய பல சிறப்புக்களுடன் சீவில்லிப்புத்தூர் ஏறப்போய்ப் பட்டர்பிரானுருடைய அருமைச் செல்வியாகிய கோதையை நம் பட்டநாதரோடு நம்பால் அழைத்து வருவீராக" என்று பணித்தருளினன். பிறகு பாண்டிநாட்டிறைவனாகிய வல்லபதேவன் கனவில் தோன்றி, "வேந்தனே, நீ பல சிப்பந்திகளுடன் சீவில்லிப்புத்தூருக்குச் சென்று பட்டநாதருடைய அருந்தவப்பேறாகிய கோதையை முத்துப் பல்லக்கில் ஏற்றி நம் திருவரங்க நகருக்கு அழைத்து வருவாயாக" என்றருளினன்.

கோதையாரும் அன்றிரவு பலவகைக் கனவுகளைக் கண்டு மகிழ்வெய்தினர். அக்கனவுகள் நீங்கினவாகக் கோதையார்க்கு அம்மகிழ்ச்சி ஒழிந்து துன்பமும் தளர்ச்சியும் மிக்கன. அதனால், "கனாக்களை நம் தோழியினிடம் கூறினால்தான் நம் மனத்திற்குத் தெளிவு தோன்றும்" என்று கொண்டு, மறுநாள் காலையில் தம்முடைய தோழியை அழைத்துக்கொண்டு தமது மனையின் பின்புறத்து உள்ள சோலைக்குச் சென்று, அப்பொற்றொடியை நோக்கி, "என் அன்புக்கு உரிய தோழியே, நான் இரவு பல கனாக்களைக் கண்டேன். அவற்றை உன்னிடம் கூறவே உன்னை இங்கு அழைத்துவந்தேன்" என்றார்.

அம்மெல்லியல், "நீ கண்ட கனவுகள் உன் மனத்திற்கு இனியனவாகவே இருந்திருக்கும் என நம்பு

கின்றேன்'' எனக் கோதையார், "தோழீ, நீ கூறியபடி அக்கனவுகள் என் மனத்தை மகிழ்விப்பனவாகவே இருந்தன. அவை அகன்றபின் என் மனம் தளர்வு எய்தி வருந்துவதாயிற்று. அவற்றைக் கூறுகின்றேன் ; கேள் :

### கலி விருத்தம்

வாரணம் ஆயிரம் சூழ வலஞ்செய்து
நாரணன் நம்பி நடக்கின்றான் என்றெதிர்
பூரண பொற்குடம் வைத்துப் புறமெங்கும்
தோரணம் நாட்டக் கனாக்கண்டேன் தோழீநான்.
குங்குமம் அப்பிக் குளிர்சாந்தம் மட்டித்து

மங்கல வீதிவலஞ் செய்து மணநீர்
அங்கவ னோடும்உடன் சென்றங் கானைமேல்
மஞ்சனம் ஆட்டக் கனாக்கண்டேன் தோழிநான்.
(நாச்சியார் திருமொழி, 6-ம் திருமொழி, பா. 1-10)

"தோழி, இங்ஙனம் கனாக் கண்டுகொண்டிருக்கையில் என் மனம் இன்பக்கடலில் மூழ்கியிருந்தது. அக்கனவு மறைந்தவுடன் அவ்வின்பமும் என் மனத்தை விட்டு நீங்கியது; துன்பமே பெருகியது'' என்றனர். உடனே கோதையார் கண்களில் நீர் பெருகுவதாயிற்று. அதனைக் கண்ணுற்ற தோழி, "எனதன் பிற்குரியவளே, பாரதப்போரில் பகலை இரவாக்கிய மாயன், உன்பால் இரவை பகலாக்கி, மாயம் புரிந்து மறைந்தனன் ; 'மூலமே' என்று அழைத்த யானையைக் காத்தனன் எனினும், அவன் எளிதில் இரங்கி அருளும் தன்மையன் அல்லன் ; தந்தையைப்போல் மைந்தன் என்பர் பெரியோர். அவன் மைந்தனாகிய மாரன் உலகினருக்கு இயற்றும் துன்பங்களைக் கண்டால், அம்மாயப்பிரான் தன்மை யாவருக்கும் எளிதின் விளங்கிவிடுமே. அத்தகையான்பால் அன்பினைச் செலுத்தியபின் அவன் தானேவந்து அருளும் அக்காலத்தை நோக்கி

யிருப்பதன்றி நாம் செய்தற்கு உரியது யாது உளது?" என்றனள். கோதையார், "தோழி, அப்பெருமான் அங்ஙனம் மாயம் புரிபவன் ஆயினும் பத்துடையார்க்கு எளியவனாய் வந்தருளும் தன்மையனே. அவன் யானை அழைத்தவுடன் சென்று காத்ததும், வேடனாகிய குகனைத் தோழனாகக் கொண்டதும், சபரி கொடுத்த எச்சிலை நுகர்ந்ததும், அரசவையில் அஞ்சி நின்ற திரௌபதிக்கு இரங்கிப் புடவை மேன்மேலும் வளர்ந்துவரச் செய்து, அவள் மானத்தைக் காத்ததும் அப்பெருமானது தன்மையை நன்கு விளக்குவனவாகும். அப்பெருமானையன்றி வேறொன்றும் வேண்டாத என்பால் அவன் இரங்கிவந்து அருள்புரிவன் என்பதில் ஐயுறவின்று" என்று அக்கரு முகில் வண்ணனுடைய பேரருட்டிறங்களைக் கூறிக்கொண் டிருந்தனர்.

பட்டநாதர், தம் காலைக் கடன்களை முடித்துக் கொண்டு கோதையார் இருப்பிடஞ் சென்றார். அங்குக் கோதையார் இல்லாமையின் சோலைக்குச் சென்று, அங்குக் கோதையார் தம்முடைய தோழியோடு பேசிக்கொண் டிருத்தலைக் கண்டு, அவர் அருகிற் சென்று, கோதையார் கண்களில் நீர் மல்கி யிருத்தலை நோக்கி, "அன்னாய், வருந்தற்க; உன் விழைவு இனி முடிந்துவிடும் என்பதில் ஐயம் இன்று. எம்பெருமான் இரவு என் கனவிலே தோன்றி, 'உம்முடைய அருமைச் செல்வியை நான் மணம் புரிந்துகொள்கின்றேன். அம் மென்னடையாளைத் திருவரங்கத்திற்கு அழைத்துவருக' என்றருளினன்" என்றுகூறிக் கோதையாரைத் தம்மனைக்குள் அழைத்து வந்தனர். அப்போது அரசன் தூதர்கள் வந்து, "அந் தண்மை என்னும் அணி அணிந்த பெரியீர், திருவரங்க நாதர் நமது நாட்டிறைவரது கனவில் தோன்றிப், பட்ட

நாதர் செல்வி திருவரங்கத்திற்கு வருதற்கானவற்றைப் புரிக,' எனப்பணித்தருளினர். ஆதலின், தங்கள் அரும் பெறற் செல்வியாரைத் திருவரங்கத்திற்கு அழைத்துச் செல்லும்படி நமது நாட்டு வேந்தர் எங்களுக்குக் கட்டளை யிட்டனர். தங்கள் அருமைச் செல்வியார் இவர்ந்து செல் வதற்கு முத்துச் சிவிகையையும், தாங்களும் தங்கள் இல் லக் கிழத்தியாரும் உறவினரும் இவர்ந்து செல்லுதற்குப் பல சிவிகைகள், தேர்கள் முதலியவற்றையும் அரசர் கட்டளையாற்கொண்டு வந்தோம். அவை தங்கள் திரு மனை முன் தெருவில் தங்கள் வரவை எதிர் நோக்கி யிருக் கின்றன'' என்று கூறினர்கள்.

அவர்கள் அங்ஙனம் கூறிக்கொண்டிருக்கும்போதே திருவரங்க நாதருடைய பரிவாரமாந்தர்கள் மாலை முதலிய வற்றோடு பட்டநாதரிடம் வந்தார்கள். அரச தூதர்கள் தாங்கள் கூற வேண்டுவனவற்றைக் கூறி முடித்தபின், அப்பரிவார மாந்தர்கள் பட்டநாதரை வணங்கி, "அருந் தவச் செல்வரே, இரவு எங்கள் கனவில் திருவரங்கத்து அமலன், காட்சி அளித்து, 'நீங்கள் விடியற் காலையிற் புறப் பட்டுச் சிவில்லிப்புத்தூருக்குச் சென்று பட்டநாதரோடு அவருடைய அருமைச் செல்வியாய் விளங்கும் கோதை யைப் பல சிறப்புக்களுடன் அழைத்து வம்மின்' என்று கூறியருளினன்'' என்று உரைத்துத் தாங்கள் கொண்டு வந்த மாலை முதலியவற்றைப் பட்டநாதரிடம் கொடுத் தார்கள்.

பட்டர்பிரானர், அவற்றை எல்லாங் கேட்டுப் பெரு வியப்பு எய்தி, "என்னே! எம்பெருமான் திருவருள் இருந் தபடி! தன்பால் அன்பு வைப்பாரிடத்து அவன் வைக்கும் அன்பு அவர்கள் அன்பினும் பல மடங்கு அதிகமான தாகு அன்றோ இருக்கின்றது'' என்று தமக்குள் கருத

லானார். அவருக்கு ஆனந்தத்தால் கண்ணீர் பெருகியது. கோதையார், "நாம் இரவு கண்ட கனவு நனவாகும் காலம் எய்திற்றுப்போலும்; இத்தனை பேரும் ஒரே வகையாக அரங்கநாதன் தங்கள் கனவில் தோன்றிக் கூறினன் என்று கூறுகின்றனர். ஆதலின், இனி நம்பெருமான் திருவருளை நாம் பெறுவோம் என்பதில் ஐயுறவின்று" என்று கருதி மனத்தெளி வெய்தினர். கோதையாருடைய தோழி அவரை நோக்கி, "பொற்பாவாய் இனிக் கருமுகில், நின் கூந்தல் பொலிவைக் கண்டு அஞ்சும். கடல், நின் கண்களின் விசாலத்தைக் கண்டு அஞ்சும். மதி, நின்முகப் பொலிவைக் கண்டு அஞ்சுமேயன்றி, அவற்றிற்கு, நீ இனி அஞ்சவேண்டுவதில்லை" என்று கூறிப் புன்முறுவல் புரிந்தனள்.

பாண்டிய நாட்டிறைவரது கட்டளையால் வள்ளுவர்கள் யானைகளின்மேல் இவர்ந்து, சீவில்லிப்புத்தூர் முதல் திருவரங்கம் வரையினும் உள்ள ஊர்களில் இருப்பவர்களுக்குக் கோதையாருடைய திருமணத்தைப் பறை அறைந்து தெரிவித்தார்கள். அவ்வூர்களில் உறையும் மக்கள் வியப்பும் களிப்பும் ஒருங்கு எய்திப் பூப்பந்தல்களைக் கட்டிப், பல நிறங்களையுடைய கொடிகளை வரிசையாக நட்டு, புது மணல்களைப் பரப்புதற்கு உரிய இடங்களிற் பரப்பித், தெருக்களை அலகிட்டுத் தூய்மையாக்கிக், கோலங்கள் இட்டு, அங்கங்கு விளக்குகளையும் பூரணப் பொற்குடங்களையும் வைத்துக் கோதையார் வருகையை எதிர் நோக்கிக் கொண்டிருந்தார்கள்.

பட்டநாதர் விருப்பின்படி மறையவர்கள் பலர் பல புண்ணிய நதிகளினின்று புனல்களைக் கொண்டுவந்தார்கள். கோதையாருடைய தோழிகள் அப்புனல்களால் கோதையாரை நீராட்டிப், பொன்னாடை உடுத்து,

கோதையார் கரிய கூந்தலில் சிகழிகை என்னும் மாலையைச் சூட்டினார்கள். அது கருமுகிலின் இடையில் தோன்றும் மதி எனப் பொலிவுற்றது. நெற்றியின்மீது பல மணிகள் பதித்த சுட்டி என்னும் அணியை மயிர் ஒழுங்கின் பக்கம் சாரக் கட்டித் தொங்கவிட்டார்கள். அது பிறைச் சந்திரனை உடுக்கள் பல வந்து கதுவியது போலத் தோன்றியது. கோதையார் காதுகளில் குழைகள் இட்டார்கள். அவை கோதையார்தம் விழிகள் வந்து உந்துதலால் ஆடும் மணி யூசல் என அசைந்தாடாநின்றன. அவருடைய தோள்களில் பல நிறமணிகள் பதித்த அணிகளை அணிந்தார்கள். அவற்றால் மூங்கில்களுள் முத்தைத் தருவனவேயன்றி வேறு மணிகளைத் தருவனவும் உளபோலும் என்று கண்டார் ஐயுறும்படி அத்தோள்கள் தோன்றின. அவர் கைகளில் ஒளிமிக்க மணிகளைப் பதித்த வளைகளை அணிந்தார்கள். அவை, "இச் செல்வியின் கைகளாகிய தாமரைகள் இரவினும் பொலிவு குன்றாமல் விளங்குதற்குக் காரணம் யாது? அதனை நாம் நன்கு அறிதல் வேண்டும்," என்று சூரியன் கருதி, இருசிறு வட்ட வடிவங்கள் கொண்டு வந்து அக்கைத் தாமரைகளைச் சுற்றிக்கொண்டாற்போல் விளங்கின. இடையில் பல மணிக்கோவையாகிய மேகலையையும் அதன் கீழ் ஒளி மிக்க மணிகளையுடைய தாரகச் சும்மை யென்னும் மணிவடத் தொகுதியையும் பூட்டினார்கள். அவை, உடுக்கூட்டங்கள், கோதையாருடைய இடையை ஆகாயம் என்று எண்ணி வட்டமாக ஒருங்கு கூடி வந்து அதில் தங்கினாற்போல விளங்கின. கோதையார் அடிகளில் பாதச் சிலம்புகளை அணிந்தார்கள். அவை 'இச்செல்வியின் அடியிணைகள் அனிச்சப் பூவினும் மிக்க மென்மையானவை. இவற்றை மேன் மேலும் அணிகளையிட்டு வருத்தாதீர்கள்' என்று கூறுவன போல ஒலித்தன.

கோதையார் பாதங்களில் செம்பஞ்சுக் குழம்பை ஊட்டி ஞர்கள். அது செந்தாமரை மலர்களுக்குச் செந்நிறம் உட்டிஞற் போன்றிருந்தது. கோதையாருடைய விழி களில் மைதீட்டிஞர்கள்; அஃது அவருடைய மனத்திற் குடி கொண்டுள்ள அரங்கத்தமுதனுடைய திருமேனியின் நிறம் யாவரும் அறியும்படி வெளிப்போந்து, அவர் கண் களில் வந்து தங்கிஞற்போல் விளங்கின. கோதையாரு டைய பிறைநுதலில் திருச்சூரணத்தோடு கத்தூரி நாமம் இட்டார்கள். அவை, "இச்செல்வி செய்யவள் துணைவி; கற்பகம் அமைந்த தூயாள் என்பனவற்றை யாவர்க்கும் நன்கு தெரிவிப்பன போன்று விளங்கின. மற்றும் அணி தற்குரிய அணிகள் எல்லாவற்றையும் அணிந்தார்கள். அவ் வணிகள், அழகிற் சிறந்தவர்கள் எனப் புலவர்கள் புகழும் மானிட மகளிர் எல்லாம் இவளுக் குட்பட்டவர்களே என் பதனை யாவர்க்கும் உணர்த்துவன போன்று ஒளிர்ந்தன. இங்ஙனம் ஒப்பனை செய்த பின் தோழிப் பெண்கள், கோதையாரைப் பொற்பல்லக்கில் இவர்வித்தற்கு அன் னப் பெடையைச் சூழும் மயிற் குழாங்கள் எனச் சூழ்ந்து அழைத்துச் சென்ருர்கள். கோதையார் பல்லக்கின் அருகிற் சென்று நின்ருர். அரங்கத் தமலனை ஒரு மானிட மகள் மணக்கப் போகின்ருள் என்னும் செய்தியை உணர்ந்த தேவர்களும் தெய்வ மாதர்களும் வானில் வந் திருந்து கோதையாரை நோக்கி, இவ்வுரு பல பூண்கள் பூட்டப்பெற்ற பொற்பாவையோ? மானிட மகள்தானே? என்று ஐயம் உறுவார் ஆயினர். அப்போது கோதை யார் பல்லக்கில் இவர்தற்குத் தமது நடையைக் கற்கும் பொருட்டுத் தம்மைச் சூழ்ந்து வரும் அன்னக் குழாங்கள் எனத் தோழியர்கள் சூழ்ந்து வரச், சிறடிகளில் இட்ட சிலம்புகள் ஒலிக்க நடந்தனர். தேவர்களும் தெய்வ மாதர்

களும் கோதையார் நடத்தலைக் கண்டு "பொற்பாவை யல்லள். இந்நங்கை பாற்கடல் செல்வியோ? பார் வண்ண மடமங்கையோ? இவளை அரங்கத்து இறைவன் மணந்துகொள்வன் என்பதில் யாதும் ஐயுறவு இன்று" என்று ஒருவரோடு ஒருவர் கூறி மகிழ்வு எய்தினார்கள். கோதையார் சென்று பல்லக்கில் ஏறினார். உள்ளங் கவரும் குழலிசை ஒரு பால் எழுந்தது. மனங்கவர் யாழிசை மற்றொருபுறம் தோன்றிற்று. இனியனவாகிய இயம் பல ஆர்த்தன. பட்டர்பிரானாரும் தம் மனைவியாருடன் மற்றொரு சிவிகையில் இவர்ந்து, கோதையார் இவர்ந்து செல்லும் சிவிகையைப் பின் தொடர்ந்து சென்றனர். பட்டநாதருடைய உறவினர்கள் ஆகிய மகளிரும் பல்லக்குகளில் ஏறிக்கொண்டு அவர் பல்லக்கைப் பின் தொடர்ந்து சென்றார்கள். பாண்டிய நாட்டு இறைவனால் அனுப்பப்பட்டோர் பல வகை ஊர்திகளில் இவர்ந்து கொண்டு பின் தொடர்ந்தார்கள். கோயிலினின்று வந்த பரிவார மாந்தர்கள் மறைகளை ஓதிக் கோதையாரை வாழ்த்தி முன் செல்லலானார்கள். சீவில்லிப்புத்தூரில் உள்ள மற்ற மகளிரும் பல்லக்கிலும் தேர் முதலியவற்றிலும் இவர்ந்து சென்றார்கள். ஆடவர்கள் பரிகளிலும் மற்றும் பல ஊர்திகளிலும் ஏறிச் சென்றார்கள். பல ஆடவர்களும் மகளிரும் வாகனங்களில் ஏறிச் செல்லுதலை விரும்பாமல் கோதையாருடைய சிவிகைக்கு முன்னும் பின்னுமாக நடந்து சென்றார்கள். பட்டநாதருடைய உறவினர்கள் ஆகிய மாதர்களுள் ஒரு மடமான் தன் தோழியை நோக்கி, "தோழி, எம்பெருமான் இராமனாக அவதரித்து மிதிலை வேந்தர் செல்வியையும் கண்ணனாக அவதரித்து உருக்குமணிப்பிராட்டி முதலியவர்களையும் மணந்தனன் என்று கூறுதல் ஏற்கக் கூடியதே. ஆனால்,

அர்ச்சை வடிவினில் உள்ள அரங்கநாதன் கோதையை மணந்துகொள்வான் என்பது நடக்கத் தக்கது என்று எனக்குத் தோன்றவில்லை'' என்றாள். அதனைக் கேட்ட அத்தோழி, "மடவனமே! எம்பெருமான்,

**நேரிசை வெண்பா**

தமருகந்த தெவ்வுருவம் அவ்வுருவந் தானே
தமருகந்த தெப்பேர்மற் றப்பேர்—தமருகந்
தெவ்வண்ணஞ் சிந்தித் திமையா திருப்பரே
அவ்வண்ணம் (இயற்பா முதற்றிருவந்தாதி—44)

ஆவன் என்பர் பெரியார். ஆதலின், அரங்கத்தமலன் கோதைக்கு அருள்புரிவன் என்பதில் நீ ஐயுற வேண்டா. பிரகலாதனுக்கு இரணியனது அரண்மனையின் கற்றூண்களுள் ஒன்றினின்று தோன்றி அருள்புரிந்த அப்பெருமான் தன் வடிவமாகவே அமைந்துள்ள அர்ச்சை வடிவினின்று கோதைக்கு அருளுவன் என்பதில் அருமை என்? தோழி, நீ கோதையின் திருமணத்தைக் கண்டு களித்தற்குப் பல ஊர்களினின்று ஆடவரும் மகளிரும் திரள் திரளாகத் திரண்டு வரும் காட்சியை நோக்குக'' என்றாள்.

அவற்றைக் கேட்ட அத்தாழ்குழல், "தோழி, ஆடவரும் மகளிரும் கடல்போலத் திரண்டு வருகின்றார்களே. கோதையாரின் திருமணத்தின்போது இத்தனைபேரும் சென்றால் கோயிலின் இடம் போதுமோ'' என்றாள். மற்றவள், "தோழி, பாண்டிய நாட்டு இறைவர் கோதையின் திருமணத்தை ஆடவரும் மகளிரும் சிலருக்குப் பின் சிலர் ஒழுங்காகச் சென்று கண்டு திரும்புதற்கு உரிய ஏற்பாடுகளைச் செய்திருக்கின்றனராம். அன்றியும், அங்ஙனம் செல்லும் ஆடவரும் மகளிரும் அங்கங்குத் தங்கி உண்டு மகிழ்ந்து செல்லுதற்குரிய ஏற்பாடுகளையும் செய்

திருக்கின்றனராம். பாண்டிய நாட்டில் உள்ள அதிகாரிகளும் அங்கங்கு அவற்றிற்கு வேண்டிய உதவிகளைப் புரிகின்றார்களாம். இவற்றை நம்மரசருடைய பரிவார மாந்தர்களுள் ஒருவர் எங்கள் அகத்துக்காரரிடம் கூறினர்," என்றாள். மற்றொரு பல்லக்கில் உள்ள மகளிருள் ஒருத்தி, தன் தோழியை நோக்கித், "தோழி, திருவரங்கத்தை நாம் அனைவரும் சென்று அடைதற்கு எத்தனை நாட்கள் ஆகும்" என்றாள். அதனைக் கேட்ட மற்றொருத்தி, "தோழீ, குறைந்த அளவு ஒருவாரமேனும் ஆகும்." என்றாள். மற்றொரு சிவிகையில் இருந்த மகளிருள் ஒருத்தி, தன் தோழியைப் பார்த்துத் "தோழீ, சீதையின் மணத்தைக் கண்டு களித்தற்காக அயோத்தியினின்று மிதிலையை நோக்கி ஆடவரும் மகளிரும் கடலெனத் திரண்டு ஆரவாரித்துச் சென்ற காட்சியை வால்மீக முனிவர் இராமாயணத்தில் வருணித்துக் கூறியிருப்பதை இதுகாறும் பலமுறையும் கேட்டுக் களித்துவந்தோம். அவர் கூறிய அக் காட்சியை நாம் இன்று நேரில் காண்கின்றோம். இது முன் நாம் கேட்டு அடைந்த மகிழ்ச்சியிலும் பன்மடங்கு மிக்க மகிழ்ச்சியை உண்டாக்குவதாயிருக்கின்றது." என்றாள். அதனைக் கேட்ட மற்றவள், "தோழீ, சீதையும் இராமனும் ஆகிய மணமகளும் மணமகனும் மிதிலையில் இருக்கத் தசரதர் முதலியோர் அயோத்தியினின்று சென்றார்கள். நாம் மணமகளாகிய கோதையுடன் செல்கின்றோம். இவ்வாறு நாம் மணமகளுடன் செல்வதும் நம்முடைய மகிழ்ச்சி மிகுவதற்குக் காரணம் ஆகும்" என்றாள்.

இங்ஙனம் பலரும் பலவாறு பேசிக்கொண்டும், தங்கும் இடங்களில் தங்கி உண்பன உண்டும் மகிழ்வுடன் சென்றார்கள். அனைவரும் பாண்டிய நாட்டைக் கடந்து,

சோழ நாட்டை அடைந்து, உறையூருக்கு அருகில் செல்லு கையில் உடன் செல்லும் மகளிருள் ஒருத்தி, தன் தோழியை நோக்கித், "தோழீ, அதோ, பெருந்திரளாக ஆடவரும் மகளிரும் நம்மை எதிர்நோக்கி வரு கின்றார்களே; அவர்கள் யாராய் இருப்பார்கள்" என்றாள். அதனைக் கேட்ட மற்றவள், "மடவனமே, அவர்களுக் குரிய சின்னங்கள் முன்னே வருகின்றன. அவற்றால் அவர்கள் அரசரைச் சார்ந்தவர்கள் என்பது உனக்கு விளங்கவில்லையா? அதோ அக்கூட்டங்களின் இடையில் தம் ஒளியினால் உடுக்குலங்களை இகழ்தற்கு உரியனவாகிய பன்மணிகள் பதித்த பொன்முடி சிரத்திற் பொலியக் காண்போர் கண்கள் கூசி மூடிக்கொள்ளும்படி ஒளியை வீசும் வாளை நீண்ட கையிற் பற்றி, மலைக்குவடுகளை எள்ளி நகையாடும் திரண்ட தோள்களையும் குவளைப் போதினைப் பழிக்குங் கருநெடுங்கண்களையும் உடையவராய் வருபவர் நம் பாண்டிய நாட்டு இறைவராவார். அவர் அருகில் இரு புறத்திலும் வருகின்றவர்கள் அவருடைய அமைச்சர்கள் போலும். அவரைச் சூழ்ந்து பலவகைப் படைகளை ஏந்திக் கொண்டு வருகின்றவர்கள் அவ்வேந்தருடைய மெய்க் காவலர்களாகிய வீரர்கள் என்று அறி. கண்டோர் அஞ் சும் உடல் அமைந்தவர்களாக மெய்க்காவலர்களுக்குப் பின்னே வருகின்றவர்கள் அம்மன்னருடைய படைத் தலைவர்கள் போலும். அவர்கள் நம்முடைய பட்டர் பிரானரையும் அவருடைய அருமைச் செல்வி ஆகிய கோதையையும் எதிர்கொண்டு அழைத்துச் செல்லுதற் காக ஊர்திகள் இன்றி நடந்து வருகின்றார்கள். நம் முடைய பட்டநாதருடைய மேன்மை அளவிடற்கரிய தாகும். அவர்,

பாண்டியன் கொண்டாடப் பட்டர்பிரான் வந்தானென்
றீண்டிய சங்கம் எடுத்தூத—வேண்டிய
வேதங்கள் ஓதி விரைந்து,

(பெரியாழ்வார் தனியன்)

கிழியறுத்தவர் அல்லரோ? அவருடைய பெறலருஞ் செல்வியாகிய கோதையின் மேன்மை, பட்டநாதரது மேன்மையையும் விஞ்சிவிட்டது. இவ்வாய்ப்பு அருமையினும் அருமையே'' என்றாள். அதனைக் கேட்ட மற்றவள், "தோழீ, எல்லா உலகங்களுக்கும் தனிமுதல் அரசாய் விளங்கும் எம்பெருமானே இவர்களை எதிர்கொண்டு உபசரித்து அழைத்து வரும்படி தன் பரிவாரமாந்தர்களை அனுப்பினன் எனின், மற்றை அரசர்கள் இவர்களை எதிர்கொண்டு வந்து அழைப்பதில் அருமை யாது உளது?'' என்றாள்.

அதனைக் கேட்ட முன்னவள் "தோழீ, நான் கோதையின் மேன்மை பட்டநாதரது மேன்மையை விஞ்சிவிட்டது என்று கூறியதன் கருத்தை நீ விளக்கினை'' என்றாள். இவர்கள் இங்ஙனம் பேசிக்கொண்டிருக்கையில் பாண்டிய நாட்டு இறைவன் வந்து, பட்டநாதரையும் கோதையாரையும் கைகூப்பி வணங்கி நின்று, பட்டநாதரை நோக்கிப், "பெரியார் வணங்கும் பெரியீர், திருவரங்கத் தமுதன் என் கனவில் தோன்றித் தங்களையும் தங்கள் அருமைச் செல்வியாராகிய கோதையாரையும் எதிர்கொண்டு அழைத்து வரும்படி பணித்தருளினன். தங்களையும் தங்கள் செல்வியாரையும், தங்களுடன் வந்திருப்பவர்களையும் திருவரங்கநாதன்பால் அழைத்துச் செல்லவே யான் வந்தேன்; எழுந்தருளுக'' என்றார். கோதையாரை ஒழிந்த மற்றையார் அனைவரும் தங்கள் தங்கள் ஊர்திகளினின்று இறங்கிவிட்டனர். அரசனும்

அமைச்சர்கள் முதலியவர்களும் முன் செல்லப், பட்டநாதர் அவர்களைப் பின்தொடர்ந்து சென்றார். கோதையார் இவர்ந்துள்ள சிவிகை அவரைப் பின்தொடர்ந்தது. மற்றவர்கள் கோதையாரது சிவிகையைப் பின்தொடர்ந்து சென்றார்கள். கட்டியங்காரர்கள் "ஆண்டாள் வந்தாள்; சூடிக்கொடுத்தாள் வந்தாள்; சுரும்பார் குழற்கோதை வந்தாள்; திருப்பாவை பாடிய செல்வி வந்தாள்; தென்னரங்கம் தொழும் தேசி வந்தாள்" என்று முன்னே கட்டியம் கூறிச் செல்லலானார்கள்.

அரசன், பட்டநாதர் முதலாயினாருடன் கோதையாரின் சிவிகை அழகியமணவாளன் திருமண்டபத்தை அடைந்தது. உடனே சில மாதர்கள் சிவிகையின் திரையை விலக்கினார்கள். கோதையார் உடனே சிவிகையினின் றிறங்கிக் கோனணி சங்கம் வந்து குடியிருந்தாற் போன்ற திருக்கழுத்திற் செங்கழுநீர் மாலை விளங்க, அழகிய மணவாளன் அருகிற் சென்றனரர்க, அவருடைய காதளவோடி நீண்டு மிளிரும் விழிகளாகிய குவளைகள், அப்பெருமானுடைய 'கரியவாகிப் புடைபரந்து மிளிர்ந்து செவ்வரியோடி நீண்ட அப்பெரியவாய கண்களாகிய தாமரைகளில் சென்று பொருந்திக் கலந்தன. அவ்விறைவனுடைய அவ்விழிகளாகிய தாமரைகள், கோதையாருடைய கண்களாகிய குவளைகளில் சென்று படிந்து கலந்தன. உடனே கோதையார், அரவரசப் பெருஞ் சோதியாகிய உயர் வெள்ளை அணையை மிதித்து ஏறி, அத்திருவரங்கத் தமுதனைத் தம்முடைய பொற்றாமரைக் கைகளால் தழுவிக்கொண்டு அவன் திருமேனியினுள் மறைந்தருளினார். அரசர் முதலாயினார் வியப்புற்று நின்றனர்.

பட்டநாதர், "எம்பெருமானே என்னருமைச்

செல்வியை யான் காணாதபடி மறைத்தருளிவிட்டனையே! இது நின் திருவருளுக்கு ஏற்றதாகுமோ? என்று வருந்திக் கூறினர். திருவரங்கநாதர், "அன்பிற் சிறந்த அறிஞரே, வருந்தாதீர்; உம்முடைய அரும்பெறற் செல்வி என் அருகில் வீற்றிருக்கின்றனள்; நோக்குவீராக" என்று அசரீரியாக இருந்து பணித்தருளினன். அச்சொற்களைக் கேட்டு, உடனே பட்டநாதர் பாண்டிய நாட்டு வேந்தர் முதலானவர்கள் திருவரங்கநாதன்பால் தங்கள் நோக்கத்தைச் செலுத்தினார்கள். அப்போது திருவரங்கநாதன் அருகில் ஒருபால் திருமகளும், மற்றொருபுறம் நிலையும் வீற்றிருக்க அவர்களுக்கிடையில் கோதையார் வீற்றிருத்தலை அவர்கள் அனைவரும் கண்டு களிப்பு என்னும் கடலுள் ஆழ்ந்தார்கள். பட்டநாதர் "இச் செல்வி, திருமகளும் நிலையும் தனக்கு இருபுறத்தினும் வீற்றிருக்க, அவர்களுக்கிடையில் வீற்றிருக்கின்றனள்; ஆதலின், பூதேவியின் அவதாரம் ஆனவளே; நம்முடைய நல்வினையின் பயனாக நம்மை வாழ்வித்தருள நம்மிடம் இவ்வடிவினில் தோன்றி இதுகாறும் நம்மை மகிழ்வித்துவந்தனள்" என்று எண்ணிக் களிகூர்ந்தனர். திருவரங்கநாதர், அசரீரியாக "அன்பின் செல்வரே, நீர் இனி மிதிலை வேந்தரைப்போல் நமக்கு மாமனார் ஆய்விட்டீர்; இனி நீர் ஸ்ரீவில்லிபுத்தூருக்குச் சென்று முன்போல எமக்குத் திருமாலைத் தொண்டினைச் செய்துகொண்டு, இனியன கூறி உலகினரை உய்விப்பீராக" என்று கூறியருளினன். பட்டநாதர் அரசன் முதலியவர்கள், களிப்பென்னும் தேனை அருந்தித், தம்மை மறந்து, கண்களினின்று நீர் அருவி யெனப் பெருக, ஆடிப் பாடித், திருவரங்கநாதனை வணங்கி, அப்பெருமானிடம் விடை பெற்றுக்கொண்டு திரும்பினார்கள்.

அங்ஙனம் அவர்கள் திரும்பி வருகையில் பட்ட

நாதருடைய சுற்றத்தினராகிய மகளிருள், முன்னே தன் தோழியின்பால் திருவரங்கநாதன் கோதையாரை மணம் புரிவன் என்பதில் ஐயுற்றுக் கூறிய மதிமுகமாள், தன் தோழியை நோக்கி, "என் அன்பிற்கு உறையுள் ஆகிய தோழியே, நான் எம்பெருமானாகிய திருவரங்கநாதனிடத்து உண்மையான அன்பு கொண்டிலாதவள்; ஆதலின், அப்பெருமான் கோதையை மணந்துகொள்வன் என்பதில் ஐயுறவு கொண்டேன். நீ அவ்விறைவனிடத்தில் உண்மை அன்பு உடையவள்; ஆதலின், அம்முதல்வன் மெய்யர்க்கு மெய்யனாகி விளங்கி, அவர்கள் விரும்பியவற்றை மறுக்காமல் அளித்தருள்வன் என்பதனை நன்கு உணர்ந்தனை; அன்புடையாய், நீ துணிவுடன் கூறியபடியே எம்பெருமான் கோதையை ஏற்றருளியதை நேரிற் கண்டதனால் என் ஐயுறவு நீங்கிற்று. ஆனால், கோதையை நாம் முன்போல் காணக் கூடுமோ? என என் மனம் கருதுகின்றது" என்று கூறினள்.

அவள் கூறியவற்றைக் கேட்ட அவள் தோழி அவளை நோக்கி, "நல்லாய், நாம் கோதையை முன்போலக் காணவேண்டும் என உறுதியும் அன்பும் உடையவர்களாய்க் கருதுவோமானால் கோதையை முன்போலவே காண்போம். அதில் நீ சிறிதும் ஐயுறவு கொள்ள வேண்டா" என்றனள்.

பாண்டிய நாட்டு மன்னன் பட்டநாதரிடம் விடை பெற்றுக்கொண்டு சென்று தன் அரண்மனையை அடைந்தனன். கோதையாருடைய திருமணத்தைக் கண்டு களித்தற்காக வந்தவர்கள் யாவரும் தத்தம் இருப்பிடம் அடைந்து திருவரங்கநாதன் கோதையாரை ஏற்றருளிய வியப்பாகிய செயலைப் பற்றிப் பேசிப் பேசி மகிழ்கூரலானார்கள். பட்டநாதர் சீவில்லிப்புத்தூரை அடைந்து,

வட பெருங்கோயிலிலே எழுந்தருளியுள்ள பெருமானுக்கு முன்போலவே திருமாலைத் தொண்டைச் செய்துகொண்டு உலகத்தார்களை, உய்யும் நெறி கூறி இனிது வாழ்வித்து வருவாராயினர்.

### கோதையாரைப் பற்றிப் பிறர் கூறியவை
### நேரிசை வெண்பா

சூடிக் கொடுத்த சுடர்க்கொடியே தொல்பாவை
பாடி யருளவல்ல பல்வளையாய்—நாடிநீ
வேங்கடவற் கென்னை விதியென்ற இம்மாற்றம்
நாங்கடவா வண்ணமே நல்கு.　　—தனியன்

அல்லிநாள் தாமரைமேல் ஆரணங்கின் இன்றுணைவி
மல்லிநா டாண்ட மடமயில்—மெல்லியலாள்
ஆயர் குலவேந்தன் ஆகத்தாள் தென்புதுவை
வேயர் பயந்த விளக்கு.　　—தனியன்

ஆண்டாள் அவதரித்த மாதமும் நாளும்

இன்றோ திருவாடிப் பூரம் எமக்காக
அன்றோஇங் காண்டாள அவதரித்தாள்—குன்றாத
வாழ்வான வைகுந்த வான்போகந் தன்னையிகழ்ந்
தாழ்வார் திருமகளார் ஆய்.

### வாழி திருநாமம்
### எண்சீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

திருவாடிப் பூரத்திற் செகத்துதித்தாள் வாழியே
　திருப்பாவை முப்பதும் செப்பினாள் வாழியே
பெரியாழ்வார் பெற்றெடுத்த பெண்பிள்ளை வாழியே
　பெரும்பூதூர் மாமுனிக்குப் பின்னானாள் வாழியே
ஒருநூற்று நாற்பத்து மூன்றுரைத்தாள் வாழியே
　உயரரங்கர்க் கேகண்ணி யுகந்தளித்தாள் வாழியே
மருவாருந் திருமல்லி வளநாடி வாழியே
　வண்புதுவை நகர்க்கோதை மலர்ப்பதங்கள் வாழியே.

ஆண்டாள் வரலாறு முற்றிற்று.

(முதற்பாகம் முற்றிற்று.)

# பிழை திருத்தம்

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 6 | 23 | யிருந்தனுல் | யிருந்ததனுல் |
| 30 | 20 | சென்று | நீ சென்று |
| ,, | 29 | ற்வருல் | வற்ருல் |
| 32 | 30 | நோக்லர் | நோக்கிக் |
| 44 | 23 | நீ வீரனே ? நீ | வீரனே, நீ |
| 49 | 8 | நீ என்று | என்று |
| 52 | 13 | தன் | பரகாலர் தன் |
| ,, | 20 | உன் | நீ உன் |
| 56 | 16 | வேந்தர் வேந்தர் | வேந்தர் வேந்தன் |
| 66 | 21 | மணமகளை | மணமகனை |
| ,, | 22 | என்றும் | என்னும் |
| ,, | 27 | பெயராக் | பெயராகக் |
| 68 | 19 | அவர்களுடைய | அவர்களருளை |
| 91 | 26 | அருமறைமின் | அருமறையின் |
| 98 | 10 | நாச்சியார் | நாய்ச்சியார் |
| 102 | 15 | கண்ட நல்வேலி | கண்டல் நல்வேலி |
| 104 | 24 | நூற்று எண்பது | நூற்று எட்டு |
| 111 | 5 | தமிழ்நன் | தமிழினன் |
| ,, | 27 | நலந்திகழும் | வலந்திகழும் |
| 112 | 4 | வட்டங்களுக்ளுட் | வட்டங்களுக்குட் |
| ,, | 17 | மொழி, நடையின் | மொழி நடையின் |
| ,, | 20 | கருளே, புரியும் | கருளே புரியும் |
| ,, | 25 | மெய்மை | மெய்ம்மை |
| 130 | 30 | பெருக்கம் | பெருக்கத்தை |
| 133 | 6 | தம் | தன் |

**குறிப்பு :**—முதற் புத்தகத்தின் 3-ஆம் பக்கத்தில் 13-ஆம் வரியில் முதனிலைத் தொழிற்பெயர் என்று இருப்பதை விகுதி பெற்ற தொழிற்பெயர் என்று திருத்திக்கொள்ளுதல் வேண்டும்.